# அங்காதிபாதம்









அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி
திருக்கோயில்
சித்த மருத்துவநூல் வெளியீட்டுக் குழு

1976

வெளியீட்டுத் தொடர் எண் : 29

# அங்காதிபாதம்



அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்
சித்த மருத்துவநூல் வெளியீட்டுக் குழுவினருக்காக
கௌரவத் தலைவர்
டாக்டர் இரா. தியாகராசன், எல்.ஐ.எம்.,
அவர்களால் பதிப்பிக்கப்பெற்று
தமிழ்நாடு அரசுக்கு நன்கொடையாக அளிக்கப்பெற்றது

கி.பி. 1976 விலை ரூ.

முதற் பதிப்பு—1976

உரிமை :

அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்

சித்த மருத்துவநூல் வெளியீட்டுக் குழு,

இந்திய மருத்துவத்துறை இயக்குநர் அலுவலகம்,

சென்னை-600029.







அச்சிட்டோர் :
திரிபுரம் அச்சகம்,
55, ஸ்டாரன்ஸ் சாலை,
சென்னை-600012.



# அருள்மிகு
# பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்
## சித்த மருத்துவநூல் வெளியீட்டுக்குழு

டாக்டர் இரா. தியாகராசன், எல். ஐ. எம்.,
பொறுப்பு அலுவலர்,
சித்த மருத்துவ மைய ஆராய்ச்சி நிலையம்,
சென்னை-600029. — தலைவர்

டாக்டர் ஆ. ஆனந்தகுமார், ஜி. சி. ஐ. எம்.,
தலைவர், இந்திய மருத்துவ மத்தியக் கழகம்,
சென்னை-600005. — பொருளாளர்

திரு. கு. சின்னப்பன், தலைவர், அறங்காவலர் குழு,
அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி
பழநி திருக்கோயில். — உறுப்பினர்

டாக்டர் ப. சிற்சபை, காஞ்சி,
துணைத்தலைவர்,
இந்திய மருத்துவ மத்தியக் கழகம். — உறுப்பினர்

திரு. சி. எஸ். தீனதயாளு, பி.எஸ்ஸி., பி. எல்.,
நிருவாக அதிகாரி, அருள்மிகு பழநி
தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில். — உறுப்பினர்

டாக்டர் பு. மு. வேணுகோபால், எச். பி. ஐ. எம்.,
இயக்குநர், இந்திய மருத்துவத்துறை,
சென்னை-600029. — சிறப்பு அழைப்பினர்

## சித்த மருத்துவ அறிவியல் வளர்ச்சிக் குழு

### உறுப்பினர்கள்

1. டாக்டர் இரா. தியாகராசன், எல்.ஐ.எம்.,
பொறுப்பு அலுவலர், சித்த மருத்துவ
மைய ஆராய்ச்சி நிலையம், சென்னை-600029. — தலைவர்

2. டாக்டர் பு. மு. வேணுகோபால், எச். பி. ஐ. எம்.,
இயக்குநர், இந்திய மருத்துவத்துறை,
சென்னை-600029. — செயலர், உறுப்பினர்

3. டாக்டர் சி. எஸ். உத்தமராயன், எச். பி. ஐ. எம்.,
முன்னாள் இயக்குநர், இந்திய மருத்துவத்துறை,
சென்னை-600005. — உறுப்பினர்

4. டாக்டர் எம். சண்முகவேலு, எச். பி. ஐ. எம்.,
மூன்னாள் மருத்துவப் பேராசிரியர்,
இராமநாதபுரம். உறுப்பினர்

5. டாக்டர் கே. இராதாகிருஷ்ணன், எல். ஐ. எம்.,
மருத்துவ அலுவலர், ஊராட்சி ஒன்றிய மருந்தகம்,
காவேரிப்பாக்கம், வட ஆர்க்காடு. ,,

6. டாக்டர் எ. சிறில்ஹென்றி, எல். ஐ. எம்.,
ஓய்வுபெற்ற மருத்துவ அலுவலர்,
நகராட்சி மருந்தகம், திருச்சி. ,,

7. டாக்டர் ஆ. ஆனந்தகுமார், ஜி. சி. ஐ. எம்.,
தலைவர், இந்திய மருத்துவ மத்தியக் கழகம்,
சென்னை-600005. ,,

8. டாக்டர் ப. சிற்சபை, ஆர். ஐ. எம். பி.,
துணைத்தலைவர்,
இந்திய மருத்துவ மத்தியக் கழகம்,
சென்னை-600005. ,,

9. பண்டிட் பெ. முத்துகருப்பப் பிள்ளை, ஆர். ஐ. எம். பி.,
தலைவர், சித்த மருத்துவ சங்கம், மதுரை. ,,

10. டாக்டர் டி. வி. கல்யாணசுந்தரம், ஆர். ஐ. எம். பி.,
தலைவர், சென்டிரல் சித்தா மெடிக்கல் கவுன்சில்,
சென்னை-600012. ,,

11. டாக்டர் என். சேது ரகுநாதன், தமிழ்ப் பேராசிரியர்,
விருதுநகர். ,,

12. திரு. நீ. கந்தசாமிப் பிள்ளை
முன்னாள் செயலர், சரசுவதி மகால் நூலகம்,
தஞ்சை. ,,

## சிறப்பு அழைப்பினர்கள்

1. டாக்டர் பொன். குருசிரோன்மணி, பி. ஏ., ஜி.சி.ஐ.எம்.,
முதல்வர், அரசினர் இந்திய மருத்துவக் கல்லூரி,
பாளையங்கோட்டை.

2. டாக்டர் மு. வே. ரமணன், எல். ஐ. எம்.,
பேராசிரியர், மேல் பட்டப்படிப்பு,
அரசினர் இந்திய மருத்துவக் கல்லூரி,
பாளையங்கோட்டை.

3. டாக்டர் டி. வி. சுப்பாரெட்டி, கௌரவ இயக்குநர்,
இந்திய மருத்துவ வரலாற்று ஆராய்ச்சி நிலையம்,
ஐதராபாத்.

- டாக்டர் டி. வி. இரத்தினவேலுசுப்பிரமணியம், பி. எஸ்ஸி.,
எம். டி., எம். ஆர் சி. பி. (லண்டன்), சென்னை-600010.




மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர்

மாண்புமிகு

பேராசிரியர் க. அன்பழகன் எம். ஏ, அவர்கள்

அளித்த

# அணிந்துரை

மூன்தோன்றிய—மூவா முதன்மொழியாம் தமிழு டனும் அதன் நாகரிகத்துடனும் பிறந்து வளர்ந்த—சித்த மருத்துவத்தின் நன்மையும் மேன்மையும் உலகம் என்றும் இழந்துவிடாது காப்பது நம் கடன். தமிழகத்திலும் பிற தென் மாநிலங்களான திராவிடத்திலும் சித்த மருத்துவம் இன்றும் பலரால் — வழிவழியாகவும் கற்றறிந்தும் — கையாளப்பட்டு வரினும் அதன் சிறப்பும் புகழும் நிலை பெறுவதற்கு நாம் ஆற்ற வேண்டிய பணிகள் பலவாகும். தமிழக அரசின் ஆதரவாலும்—இத் துறை வல்லுநர்களின் முயற்சியாலும்—மருத்துவ முறைகளுள் சித்த மருத்துவமும் இடம் பெற்று வளருகிறது. எனினும், அதன் தனிச் சிறப்புகள் அறிவியல் ஆய்வாளர்கள் ஒப்புக் கொள்ளு மாறு ஆய்வுகள்மூலம் நிலை நிறுத்தப்பட்டாக வேண்டும் என்பதை நாம் கருத்தில் கொண்டு செயற்பட வேண்டும். அந்த நிலை உருவாவதற்கு—ஓலைச் சுவடிகளாகவும்— ஒரு காலத்தில் அச்சேறியும் இன்று கிடைத்தற்கரிதாகவும் உள்ள நூற்றுக்கணக்கான சித்த மருத்துவ நூல்கள்— உடனடியாகப் பதிப்பிக்கப்பட வேண்டும். இவை வெளி வந்தால்தாம், இன்று சித்த மருத்துவம் பயிலும்

மாணவரும், இளம் மருத்துவரும், அவற்றைப் பயின்று பயன் பெற இயலும். மருந்து செய்முறைகளை ஒப்புநோக்கி உண்மை தெளியவும், மருந்துகளின் தரத்தை உறுதிப் படுத்தவும், அரிய மூலப் பொருள்கள் கிடைக்காத விடத்து மாற்று மூலப் பொருள்களைக் கொண்டு மருந்து செய்திடவும், மருந்து உற்பத்தியைப் பல மடங்காகப் பெருக்கி மக்களுக்குப் பரவலாகக் கிடைக்கச் செய்யவும் வாய்ப்பாகும்; பரவலாக எங்கும் எளிதில் கிடைப்பதால் செல்வாக்குப் பெற்றுள்ள அலோபதி மருந்துகட்கு ஈடு கொடுத்து மக்களிடம் செல்வாக்குப் பெறவும் முடியும்.

எனவே, சித்த மருத்துவ நூல்கள் வெளியிடும் முயற்சிக்குத் தகுந்த நிதி உதவி வேண்டும் என்னும், எனது வேண்டுகோளை இசைவுடன் ஏற்று அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங் காவல் குழுவினரும்—அதன் தலைவர் திரு. பு. மனோகரன் அவர்களும்— இதற்காக இரண்டு இலட்சம் ரூபாய் நிதி ஒதுக்க முன்வந்ததுடன் சித்த மருத்துவ நூல் வெளி யீட்டுக்கென டாக்டர் இரா. தியாகராசன், எல். ஐ எம்., அவர்களைத் தலைவராகக் கொண்ட ஒரு குழுவையும் அமைத்துச் செயல்படுத்தலாயினர்.

இக் குழுவின் தலைவரும் உறுப்பினர்களும் ஆர்வத் துடன் ஈடுபட்டு ஆற்றிவரும் நற்பணியும்— பல்வேறு வகையிலும் அவர்கட்குத் துணைநிற்போர் ஆற்றும் பணியும்—இந்திய மருத்துவத்துறை இயக்குநர் டாக்டர் பு. மு. வேணுகோபால் எச். பி. ஐ.எம், அவர்களின் இயக் குவித்திடும் திறனும் எனது பாராட்டுக்குரியனவாகும்.

அருள்மிகு பழநி திருக்கோயில் அறங்காவலர் குழு வினருக்கும் அக்குழுவின் தலைவருக்கும் எனது நன்றியும் பாராட்டும் உரியவாகும்.

இந்த நூல் வெளியீட்டுக் குழுவினரால் தேர்ந் தெடுக்கப் பெற்று முதலில் வெளியிடப்படும் நூல் வரிசை யில், அங்காதிபாதம் 29-வது நூலாகும். இத்துடன் நீர் நிறக்குறி என்னும் நூல் இணைக்கப்பட்டுள்ளது. இந் நூலில் நூலோர் கூறிய வளிமுதல் மூன்றின் வழிவரும் நோய், குறிகுணம், தீர்வு முதலியவை தெளிவாக விளக் கப்பட்டுள்ளன.

"மிகக் கொடிய நோய்களையும், அறத் தீர்க்கும் பற்பம் செந்தூரமாகிய முறைகள், நமது நாட்டு மருத்துவத்தில் இருப்பதுபோல மற்ற மருத்துவத்தில் இல்லையென நமது மருத்துவ நூல் பயிற்சியுள்ள ஐரோப்பிய மருத்துவர்கள் மனப்பூர்வமாக ஒப்புக் கொள்கின்றனர்கள். ஆங்கில மருத்துவம், நாட்டு மருத்துவம் ஆகிய இரண்டிலும் சிறப்புள்ளவர்களான சிறந்த பண்டிதர்களின் தீர்மானமாவது:

"அறுவை செய்தல் முதலிய இரண மருத்துவத்தில் ஆங்கில முறை வைத்தியம் மிகவும் மேலானது. மற்ற நோய்களின் மருத்துவத்தில் தற்கால சாந்தியாகச் செய்வதிலும் ஆங்கில வைத்தியமே அதிகம் சிறந்தது. ஆனல், நாட்பட்ட நோய்களையும் பெரிய நோய்களான குன்மம், நீரிழிவு, சயம், எருவாய் நோய், பாண்டு, மந்தாக்கினி, மேகம், தாது இழப்பு முதலிய கடின நோய்களையும் அறத் தீர்ப்பதற்கு நாட்டு மருத்துவ முறைகளே மிக மேன்மையானவை. அவற்றுள்ளும் முறைக் கிரமமாகச் செய்யப்பட்ட பற்ப செந்தூரங்களே மிக மேன்மை பெற்றவை" என்பதாக.

இந்த அபிப்பிராயமானது மிகவும் சரியானதெனவும் உத்தமமானதெனவும் அதிகம் வாய்மையானதெனவும், சிறந்த மருத்துவர்களான ஒவ்வொருவரும் முழுமனத்தோடு ஏற்றுக் கொள்வார்கள்.

இக் கூற்று உண்மையாவதை, நவீன கருவிகள் வளர்ச்சியால் ஆலென வளர்ந்து அடர்ந்து நிற்கும் அலோபதி மருத்துவமும் ஏற்கும் வண்ணம் நடைமுறையில் செயல்படுத்தி எண்பிக்கும் வல்லமையும், ஆராய்ச்சி முறையில் சான்றுகளை உருவாக்கும் முயற்சியும் ஓங்க வேண்டும் என்பதே எனது பேரவா.

இந்த நூல்களின் வெளியீடு மேலும் பல நூல்களை வெளியிடும் முயற்சியில் ஈடுபட்டுள்ளோரை ஊக்கப்படுத்துவதற்குத் துணை செய்வதாகும் என நம்புகிறேன். அவர்தம் முயற்சி வளர வாழ்த்துகிறேன்.

சென்னை
10—10—1975

க. அன்பழகன்

# முன்னுரை

உலக மொழிகளில் மிகப் பழமையானது தமிழ்மொழி; அது போல் தமிழ் மருத்துவமுறையும் அத்தகைத்தே. இம் மருத்துவ முறையைத் தோற்றுவித்தவர் சித்தர்கள் எனப்படுவர். ஆகையால், இம்மருத்துவத்திற்குச் சித்த மருத்துவமென்று பெயர் அமையலா யிற்று. அச்சான்றோர்கள் தாம் கண்ட உண்மைகளையும் மருத்துவ நுணுக்கங்களையும், மருந்து சரக்குகளின் குணம் முதலானவைகளை யும் மாணவர்கள் பலரை ஏற்று ஓதியும் ஓதுவித்தும் பற்பல ஏடுகளில் பதிவு செய்தும் உலகோர்க்கு உதவி செய்து தம் மருத்துவமுறை களைப் பரப்பி வந்தார்கள்.

காலப்போக்கில், சிறிது சிறிதாய் இயற்கையின்—நிலநடுக்கம் கடற்கோள் போன்ற—சீற்றம் காரணமாகவும், வெளிநாட்டார் படை யெடுப்பு, சிதலை, இராமபாணம் போன்றவைகளின் தாக்குதலாலும் பல ஏடுகள் அழிந்தவை போக மிகுந்தவைகளில், சில மேலைநாட்டு நூல் நிலையங்களுக்கு எடுத்துச் செல்லப்பட்டனவெனக் கூறப்படு கின்றது. இன்னும், எஞ்சியுள்ள ஏடுகளாலும், அம் மருத்துவக் கலையைத் தொன்றுதொட்டுக் கையாண்டுவரும் மருத்துவர்கள் வாயி லாகவும், பல நூற்றுண்டுகளாக அதன் அடிப்படை உண்மை தனித்தன்மை காரணமாகவும் சித்த மருத்துவம் அழியாது நிலை பெற்றிருக்கிறது.

தஞ்சையையாண்ட மராட்டிய மன்னர் சரபோஜி அவர்களின் ஆட்சிக் காலத்தில் சித்த, ஆயுள்வேத, யூனனி மருத்துவ ஏடுகள் எல்லாம் சரசுவதி மகால் நூல் நிலையத்தில் அரியணை ஏறின மருத்துவப் புலவர்களின் அனுபவங்கள் ஏடுகளில் ஏறி ஏமமுற்றன மருத்துவம் செய்முறையும், பிணித்தீர்வும் அவர் ஏற்படுத்திய தன் வந்திரி மகாலில் மறுமலர்ச்சியுற்றன. அவர் ஆட்சிக்குப்பின் சித்த மருத்துவம் அரசு ஆதரவை இழந்து பழையபடி குடிமக்களின் ஆதரவு கொண்டு ஆங்காங்கு வழக்கில் இருந்து வரலாயிற்று.

மிக அண்மையில், வெள்ளையராட்சிக் காலத்தில் நீதிக்கட்சிச் சார்பில் முதல் அமைச்சராகப் பணியாற்றிய பானகல் அரசர், 1924இல் இந்திய மருத்துவப் பள்ளியைத் தோற்றுவித்துப் பல கிராம மருத்துவமனைகளையும் அமைத்து இயங்கச் செய்து சித்த மருத்

துவம் முதலான இந்திய மருத்துவ முறைகளின் மறுமலர்ச்சிக்கு வித்தூன்றினர். அக்காலத்தில் மேற்படி கல்வி நிலையத்தில் பயிலும் மாணவர்களுக்கு அமைந்த பாடத்திட்டபடி கற்பிக்கப் போதிய பாடப் புத்தகங்களும் முதல் (மூல) நூல்களும் இல்லாக்குறையை ஓர்ந்து பாடப் புத்தக ஆக்கக்குழுவை அரசு அமைத்தது. அந்நாள் சித்த மருத்துவத்துறைத் தலைமை ஆசிரியராய் இருந்த பண்டிட் வைத்திய ரத்னம், மருத்துவ சிரோன்மணி காலஞ்சென்ற திரு. க. ச. முருகேச முதலியார் அவர்கள் குணபாடம் (மூலிகை வகுப்பு) என்னும் நூலைத் தன் சொந்த முயற்சியால் இயற்றி அரசினர்க்கு நன்கொடையாக அளித்து வெளியிடச் செய்தும், குழுவினர் அரசு வழி வெளியிட்ட நஞ்சு நூல், பாலவாகடம் என்ற நூல்களைப் பார்வையிட்டும் உதவினர். அக்குழுவினர் நூற்றுக்கும் மேற்பட்ட மருத்துவச் சுவடிகளையும் அச்சிட்ட நூல்களையும் சேகரித்து, ஒரு நூல் நிலையம் ஏற்படுத்தினர்.

மேற்படி பள்ளி, கல்லூரியாக மிளிர்ந்தபோது, அந்நாள் கௌரவ இந்திய மருத்துவ இயக்குநராகப் பணியாற்றிய டாக்டர் ம. ரா. குருசுவாமி முதலியார் ஊக்கம் கொடுத்தமை காரணமாக 1950இல் சித்த மருத்துவம், மருத்துவாங்கச் சுருக்கம், நோயில்லா நெறி, குணபாடம் (மூலிகை வகுப்பு), தாது சீவ வகுப்பு என்ற நூல்களும் அப்போது பணிபுரிந்து வந்த கல்லூரி விரிவுரையாளர்களைக் கொண்டு எழுதுவித்து அரசுவழி வெளியிடப்பெற்றன.

அக்கல்லூரி நிகழ்ந்த காலத்திலும் பின்னர்ப் பாளையங்கோட்டைக் கல்லூரி தோன்றிய பின்னுங்கூடப் பாடநூல்களும் துணை நூல்களும் நிரம்பாமை பெருங்குறையாக நீடித்து வருவதாயிற்று.

ஆகவே, பண்டைய சித்த மருத்துவ ஓலைச்சுவடிகளையும் கையேடுகளையும், ஒருமுறை அச்சாகிப் பின் விற்பனைக்குக் கிட்டாத புத்தகங்களையும் சேகரிக்கவும், மருந்து செய்முறை அட்டவணை தயாரிக்கவும், பாட நூல்கள் வெளியிடவும் ஆகிய பணிகள் செய்ய (pharmacopiea committee 1966 G. O. MS. 2163 Dt. 23-8-60) ஒரு குழுவும், சித்த மருத்துவக் கல்வி மற்றும் பாடநூற் குழு என்று (G. O. MS. No. 1060 health Dt. 13-6-66) ஒரு குழுவும், திருவருட்பா, திருப்புகழ் முதலியவைகளில் உள்ள மருத்துவப் பகுதிகளை ஆய்வதற்காக ஒரு குழுவும் எனத் தமிழக அரசு குழுக்களை ஏற்படுத்தியது. அதன் விளைவாக அறுவை மருத்துவம், சூல் மருத்துவம் என்ற நூல்கள் வெளிவந்தன.

மீண்டும், விரைவில் பயன்காண வேண்டி 1973ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 15ஆம் நாள் தமிழக அரசினர் மேற்கூறிய குழுக்களை ஒருங்கிணைத்துச் சித்தமருத்துவ அறிவியல் வளர்ச்சிக்குழு

என்னும் ஒரு குழுவைத் (G. O. MS. No. 2571 of 23—10—73) தோற்றுவித்தார்கள். அக் குழுவின் பணிகளாவன : சித்த மருத்துவ அரிய சுவடிகள், கையேடுகள், அச்சாகிய பழைய நூல்கள் ஆகியவைகளைச் சேகரித்துப் பாதுகாத்தல்; ஓலைச்சுவடிகளை ஆய்ந்து கையெழுத்துப்படி, தட்டெழுத்துப்படி முதலியவைகளை எடுத்து அச்சியற்றி வெளியிடல்; ஒருமுறை அச்சில் வெளிவந்து விற்பனைக்குக் கிடைக்கப் பெறாத நூல்களை மீண்டும் வெளியிடல்; இதுவரை அச்சிடப் பெறாத நூல்களை வெளியிடல் என்பனவாம். அதன்படி இக் குழுவினர் இதுவரை 400 சுவடிகளையும் 100 கையெழுத்துப் படிகளையும், 230 அச்சான பழைய நூல்களையும் சேகரித்துள்ளனர்.

இக்குழுவினர் தாம் மேற்கொண்ட பணிகளைச் செயலாற்ற, இந்திய மருத்துவத் துறை இயக்குநர் அலுவகத்தில் ஒரு தனி அலுவலரையும் அவர்க்கு உதவியாளர்களையும் நியமித்துள்ளனர், அவர்கள் நூல்களைப் படியெடுத்துத் திருத்தம் செய்து அச்சியற்றத் தக்க வகையில் செய்து வருகின்றனர்.

அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் நிதியி லிருந்து சித்த மருத்துவநூல் வெளியீட்டுக்கென்று ஒதுக்கப்பட்ட இரண்டு இலட்சம் ரூபாயைக் கொண்டு மேற்படி நூல்களை, நடைமுறைச் சிக்கல்களைத் தவிர்த்து வெகு விரைவில் வெளியிட மேற்படி சித்த மருத்துவ அறிவியல்வளர்ச்சிக் குழுவிலுள்ள உறுப்பினர் சிலருடன் அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங்காவலர் குழுத் தலைவர் உயர்திரு. பு. மனோகரன் அவர்களையும் மேற்படி திருக்கோயில் திருவாக அதிகாரியையும் கொண்டு அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் சித்த மருத்துவ நூல் வெளியீட்டுக்குழு ஏற்படுத்தப்பட்டது. அக்குழு முடிவெடுத்தபடி முதல் வெளியீட்டு வரிசையில், தற்போது கிட்டியுள்ள போகர் ஏழாயிரத்தின் முதல் மூன்று ஆயிரங்களும் இடம் பெறும். மேற்படி முதல் வெளியீட்டு வரிசையில், அங்காதிபாதம் 29-வது. இந்நூலை முத்துக்கருப்பப்பிள்ளையின் மகன் டாக்டர் பெ. மு. இரா. சகோபாலன் ஆர் ஐ.எம்.பி., அவர்கள் கொடுத்து உதவினர்கள். அங்காதிபாதம் என்னும் இந்நூலுடன் இணைத்து வெளியிடப் பட்டுள்ள நீர் நிறக்குறி என்னும் நூலை டாக்டர் மு. சௌரிராசன் அவர்கள் கொடுத்துதவினார்கள். இவ்விருவர்க்கும் குழுவின் சார்பில் நன்றி தெரிவித்துக் கொள்கிறோம்.

மேற்கண்ட அரிய நூல்களின் வெளியீட்டுப் பணிக்குப் பெருந் தொகை தேவைப்படுவதால், இப்பெரும் பணியை விரைவில் செயல்

படுத்த உளங்கொண்ட நம் தமிழக அரசின் நல்வாழ்வுத் துறை அமைச்சர் மாண்புமிகு பேராசிரியர் உயர்திரு. க. அன்பழகன் எம். ஏ., அவர்கள் பேரார்வங்கொண்டு மேற்படி பணி முட்டின்றி முடிவதற்கு அரசு நிதியிலிருந்து ஆண்டொன்றுக்கு ஐம்பதாயிரம் ரூபாய் வழங்க ஆணை பிறப்பித்தார். மேலும், அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங்காவலர் குழுத் தலைவர் உயர்திரு. பு. மனோகரன் அவர்களைக் கொண்டு முதல் தவணையாக மேற்படி திருக்கோயில் கருவூல நிதியிலிருந்து இரண்டு இலட்சம் ரூபாயை ஒதுக்கி வழங்கச் செய்தமையும், சித்த மருத்துவ நூல்கள் விரைவில் வெளியாக வாய்ப்புத் தேடித் தந்தமையம், காலஞ்சென்ற திரு. டாக்டர் ஜி. டி. நாயுடு அவர்களைக் கொண்டு காலஞ்சென்ற திரு. டி. வி. சாம்பசிவம் பிள்ளையவர்கள் தொகுத்து வைத்திருந்த மருத்துவப் பேரகராதியின் முதல் மூன்று பகுதிகளையும் பிற சித்த மருத்துவ இலக்கிய நூல்களையும் அச்சிட்டு வெளியிடச் செய்தமையும் அமைச்சர் பெருமகனார் சித்த மருத்துவ மறுமலர்ச்சிக்கு முழுமனதுடன் ஆற்றிவரும் செயற்கரிய ஆக்கச் செயல்களாகக் கூறிப் பெருமிதமடையலாம். இதற்குத் தமிழகம் என்றென்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது.

அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங்காவலர் குழு முன்னாள் தலைவர் உயர்திரு. பு. மனோகரன் அவர்கள் தமக்குள்ள பற்பல அறப்பணிகட்கிடையேயும் இக் குழுவின் கூட்டங்களில் பங்குகொண்டு, நூல் வெளியீட்டுக்கான பற்பல வழிமுறைகளையும் ஆலோசனைகளையும் வழங்கி வெளியீட்டுப்பணி ஊக்கமும் ஆக்கமும் பெற்றுத் தங்குதடையின்றி நூல்கள் வெளிவர, மேற்படி திருக்கோயில் நிதியிலிருந்து மேற்படி அறங்காவலர் குழுவினரைக் கொண்டு முதல் தவணையாக இரண்டு இலட்ச ரூபாய் வழங்கச் செய்ததோடு, சித்தமருத்துவக் கல்லூரி ஒன்று பழநியில் தோற்றுவிக்க உடன்பட்டமைக்கும் சென்னையில் மத்திய சித்த மருத்துவ நூலக மொன்றை நிறுவக் கட்டடம் கட்டித்தர முயன்று வருகின்றமைக்கும் இக்குழுவினரும், இதில் பணியாற்றி வருபவர்களும் என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டவர் ஆவார்கள்.

மேற்படி அறங்காவலர் குழுத்தலைவர் அவர்களுக்கு உறுதுணையாக இருந்து ஒத்துழைத்து வரும் மேற்படி திருக்கோயில் நிருவாக அதிகாரியாகிய உயர்திரு. சி. எஸ் தீனதயாளு பி,எஸ்ஸி., அவர்களுக்கும் இப்பணிகள் நிறைவுபெற ஆக்கிய தீர்மானங்களுக்கு ஒப்புதல் அளித்துவரும் இந்து சமய அறநிலையப் பாதுகாப்புக் குழுத் தலைவர் உயர்திரு. கே. எஸ். நரசிம்மன் பி .ஏ , ஐ. ஏ. எஸ்., அவர்களுக்கும் இக் குழுவினரின் உளங்கனிந்த நன்றி உரித்தாகுக.

இக் குழுவினர் பணியாற்றுவதற்கு ஏற்ற இடவசதியும் பிற வசதிகளும் தம் அலுவலகத்தின் ஒரு பகுதியில் கொடுத்து, பணி இடையீடின்றி நடைபெற வேண்டிய ஆலோசனைகளும் ஊக்கமும் அளித்துவரும் இந்திய மருத்துவத் துறை இயக்குநர் டாக்டர் பு. மு. வேணுகோபால், எச். பி. ஐ. எம்., அவர்களுக்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

அடக்க விலையில், அச்சடிக்கும் தாள்கள் சேஷசாயி பேப்பர் மில்சாரிடமிருந்து மிக விரைவில் கிடைக்கும்படி செய்த முத்தமிழ்க் காவலர் உயர்திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களுக்கு இக்குழு நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளது.

மற்றும், இந்நூல்களை அச்சியற்ற ஏற்றவண்ணம் மூலப்படிகளைத் திருத்தம் செய்வித்தும், அச்சுப்படிகளைத் திருத்தம் செய்தும் இக் குழுவுக்குத் துணைபுரிந்துவரும் தனி அலுவலர் டாக்டர் வி. விசுவநாதன், எல். ஐ. எம்., அவர்களையும் அன்னாருக்குத் துணைபுரிந்து வரும் டாக்டர். மு. பௌளரிராசன், புலவர்கள் வை. முரு. முத்துக்குமாரசாமி, வி. செ. விநாயகம், நா. மு. மாணிக்கம், தா. சிங்காரவேலு ஆகியவர்களையும் இக் குழு மனமுவந்து பாராட்டுகின்றது.

ஒவ்வொரு நூலையும் குறுகிய காலத்தில் அழகிய முறையில் அச்சியற்றிய திரிபுரம் அச்சகத்தாரின் சேவைக்கு இக்குழு மனமுவந்து பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்கிறது.

சான்றோர் மிகுந்த இவ்வுலகு இந்நூல்களில் காணும் குற்றங் கண்டு முனியாது நனியாதரவு தந்து எம்மை ஊக்குவிக்குமென்ற துணிவுடன் இந் நூல்களை வெளியிடுகின்றனம்.

டாக்டர் இரா. தியாகராசன், எல். ஐ. எம்.,
தலைவர்

அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்
சித்த மருத்துவநூல் வெளியீட்டுக்குழு.

இந்திய மருத்துவத்துறை
இயக்குநர் அலுவலகம்,
சென்னை-600029.

# பொருளடக்கம்

## நீர்நிறக்குறி

# அங்காதிபாதம்

## கடவுள் வாழ்த்து

### விநாயகர் காப்பு

பொன்னத்தா னததார் போற்றிப் புகழுமங் காதி பாதம்
என்னத்தா னுரைக்கு நூலை யினியசெந் தமிழாற் பாட
அன்னத்தா னத்தான் காண வருஞ்சிவ னளித்த யானைக்
கன்னத்தா னத்தான் செம்பொற் கழலிணை கருத்துள் வைப்பாம் (1)

### நடேசர்

அத்தனை யகில மீன்ற வன்னையா யழிவி லாத
நித்தனைச் சுத்த ஞான நிலையனைப் நிறைபே ரின்ப
முத்தனைய் மறைநான் கிற்கு முதல்வனை யுலகிற் கெல்லாம்
கத்தனைய் மன்று ளாடுங் கடவுளைக் கருதி வாழ்வாம் (2)

### சிவகாமசுந்தரி

கங்கையு மதியும் பாம்புங் கலந்தணி சடையெங் கோமான்
பங்குற விருந்தெந் நாளும் பல்லுயிர்த் தொகையைப் பார்மேல்
தங்குறப் படைத்துக் காக்குந் தாய்சிவ காமி யென்னும்
மங்கைசெங் கமலப் பொற்றுள் வழுத்தியே வணங்குவோமே (3)

### விநாயகர்

ஓங்கிய மறைகட் கெல்லா மோமெனும் பொருளா யுற்ற
காங்கெயன் றனக்கு மூத்த கரிமுகன் கருணைக் கண்ணன்
தீங்கறு குணத்தன் ஞானந் தேக்கியிட் டிழியுஞ் செவ்வி
தாங்குமும் மதத்துப் பிள்ளை சரணமே யாந மக்கே (4)

### சுப்பிரமணியர்

வள்ளிதெய் வானைக் கொத்த மணவாளப் பிள்ளை வாய்ந்த
புள்ளிமா மயிலி லேறும் புங்கவன் புலவர்க் காக
அள்ளிலை வேலாற் சூரை யட்டவ னறுமு கேசன்
கள்ளவிழ் கமலத் தாளென் கருத்தைவிட் டகல்கி லாவே (5)

### சரசுவதி

தொல்லை ஞால மதனிற் றெருகையிலாப்
பல்லு யிர்த்தொகை யாவும் படைத்தருள்
அல்லி யங்கம லத்தய ஞவில்வாழ்
வல்லி நேரிடை வாணியை வாழ்த்துவாம் (6)

### பாயிரம் (நூற்பொருள்)

சீர்வளர் கயிலை யென்னுஞ் சிலம்பினில் வாழெங் கோமான்
வார்வளர் கருணை தன்னுன் மாந்தருற் பவிக்கு மாறும்
பேர்வளர் நோய்கள் சேரும் பெற்றியும் பிணியின் கூறும்
ஏர்வளர் நாடிப் போக்கு வயித்திய னியல்பு தானும் (7)

தானமா முடம்பின் கூறுந் தசவாயுத் தன்மை யோடே
ஊனமி னரம்பின் கூறு முற்றதத் துவத்தின் கூறும்
மேனபூ தியத்தின் கூறும் விளம்புசாத் தியத்தின் கூறும்
ஈனமா மரணக் கூறு மேனவு மியம்ப லுற்றும் (8)

### அவையடக்கம்

இயம்புமிந் நூலின் கண்ணே யிலக்கண வழுவுற்ருலும்
பயன்படு பொருளுஞ் சொல்லும் பண்பொடு குணமின் றேனும்
வியன்படு சிறப்பின் றேனும் வெளிற்றுரை யேனுங் கல்வி
நயம்படு புலவர் குற்ற நாடாமற் கொள்வர் நன்றே (9)

கொள்ளுமே மறைகள் தம்மில் குறித்திடு பொருளையெல்லாம்
தெள்ளுசெந் தமிழி ஞலே சிற்றறி வுடைய பாலர்
தள்ளரு முணவின் மிக்கோர் தாமெலா மெளிதிற் றேற
உள்ளவா றெடுத்தி யானு முரைத்தன னுலகி லம்மா (10)

உலகினின் மாந்த ரெல்லா முணர்ந்தன ருய்யு மாற்ருல்
பலகலை தெரிந்து நாளும் பயின்றபண் டிதருக் கெல்லாம்
நிலவொளி போலக் காட்டு நானுறு விருத்த நேராய்
நலனுறு தொடையந் தாதி யாமுறை நாடிச் சொன்னேன் (11)

பாயிரம் முற்றிற்று

### செக உற்பத்தி

சொன்னநான் மறைகட் கெல்லாந் தூயநற் பதியா மீசன்
தன்னுறு சோதி தன்னிற் ருனேமெய்ப் பரத்தை நல்க
அன்னதோர் பரத்தின் கண்ணே யரியதோர் சிவமுண் டான
உன்னருஞ் சிவத்திற் சத்தி யுதித்துவந் தெழுந்த தாமே (12)

எழுந்திடுஞ் சத்தி தன்னு ளுதம்வந் தெய்தி நின்ற
அழுந்துமந் நாதந் தன்னில் விந்துவந் துதித்த வற்றால்
தொழுஞ்சதா சிவமுண் டான வதின்மயேச் சுரந்தோன் றுற்ற
மொழிந்திடு மயேச்சு ரத்தி லுருத்திர மூர்த்தி வந்த (13)

வந்திடு முருத்தி ரன்பான் மாயவன் றானும் வந்தான்
அந்தமா யவன்கண் வேதா வடுத்தன னவன்வா னத்தைத்
தந்தன னவ்வான் வாயு தனைத்தந்த வாயு தானும்
செந்தழ லதனைத் தந்த ததிலப்புச் சேர்ந்து நின்ற (14)

நின்றவப் புவினிற் றானே பிருதுவி நேர்ந்தங் குற்ற
துன்றுமங் கதனு லோசை தோன்றிய ததனு லன்னம்
ஒன்றிய விரத மற்று லுதித்தவ் விரசத் தாலே
மன்றநல் லுதிர முண்டாய் வளர்ந்தமா மிசத்தை தந்த (15)

தந்தமா மிசந்தான் மூளை தன்னையே யுதிக்கச் செய்த
தந்தமூ ளையினு லத்தி யாயதவ் வத்தி யாலே
முந்திய மேதை யுண்டாய் முளைத்ததம் மேதை மூலம்
வந்தசுக் கிலந்தன் னாலே சுரோணித மருவிற் றன்றே (16)

மருவுமிந் தியவித் தாலே வந்துதான் வளரு மிந்தப்
பொருவிலா வுடம்பு பார்க்கிற் புகழ்பரா பரமாய் மேவும்
ஒருவனு யுலகுக் கெல்லா முன்னரும் பரசி வன்றான்
அருவமாய் நின்று நாளு மாட்டுவ னருளி னாலே (17)

## பிறப்பொழிக்கும் வழி

அருளுடைக் கருவி தொண்ணூற் றுறிரு மூன்று தாரம்
மருவுமெய் யவத்தை யைந்து மண்டலந் தானோர் மூன்று
திருவெழுத் தைம்பத் தொன்று தெளிந்துநற் சிவத்தை யுள்ளே
உருவோடு கண்டு மாயப் பொறிபுல னொடுங்கு நண்ண (18)

நண்ணிடு கலைக டம்மை யொருகலை செல்ல நாடித்
திண்ணிய வாயி லேழுஞ் சேமமாய்த் தாழ்ப்பா ளிட்டுப்
பண்ணிடு நடங்கும் பிட்டுப் பரானந்த மயமாம் வீட்டை
எண்ணியே யோகஞ் செய்யி லிறப்பொடு பிறப்பும் போமே (19)

போமிரு வினையி னாலே புரிதரு பொல்லாங் கெல்லாம்
ஆமின்ப வீட்டின் பேறு மறிவொடு ஞான முண்டாம்
பூமனு மாலுங் காணப் புண்ணிய னருளு முண்டாம்
நாமுரை வழுத்தப் போமோ நாதனு ரியல்பைத் தானே (20)

## தத்துவம் 96

தான்முத லாகு மீசன் றந்திடு முடம்பின் றன்மை
ஆனது தொண்ணூற் ருறு தத்துவ வியக்க மாகும்
வான்வளி யனனீா மண்ணுய் வகுத்திடு பஞ்ச பூதம்
ஆனவை யாதி யான தத்துவ மறைத லுற்ரும் (21)

## அவற்றின் உட்கருவி 36

அறைதரு பூத மைந்து மடுத்தவிந் திரியம் பத்தும்
நிறைதரு கரண நான்கு நிகழ்தன்மாத் திரைக ளைந்தும்
உறைதரு வித்தை யேழு முயர்சிவ மைந்து மென்று
மறைபகர் முப்பத் தாறு மகமினிப் புறம்வ குப்பாம். (22)

## புறக்கருவி 60

புறத்துறு கருவி யைந்து பூதத்தின் கூறை யைந்து
நிறத்துறு வாயு பத்து நிகழ்தரு நாடி பத்து
மறுத்தவிர் குணங்கண் மூன்று வசனுதி யைந்து நான்கு
திறத்துறு வாக்கு மூன்ரு மேடணை யறுப தோதும் (23)

## சென்ம உற்பத்தி

ஓதுமிக் கருவி தொண்ணூற் ருறென வுரைத்தார் மேலோர்
தீதிலா மாந்தர் சென்ம வுற்பத்தி செப்பக் கேண்மின்
தாதையுந் தாயுங் கூடித் தழுவிய போகந் தன்னில்
ஆதியாம் விந்தி றங்கிச் சுரோணிதத் தடங்கு மன்றே (24)

அடங்குமவ் விரண்டுங் கூடி யுருவமா மதனுட் புக்கு
மிடைந்திடு பிராண வாய்வு மேற்றமாந் தானே மூடித்
திடம்பெறு விந்து தன்னை வளர்விக்கு முதானன் சேர்ந்து
கடம்படு கருவைக் காக்கும் பான்மைய காவல் சூழும் (25)

## கரு வளரும் முறை

காவல்சூ ழபான வாயு கருதிய வேலி போல
மேவியே சூழ்ந்து நிற்கும் விளம்பிய பிராணன் ருனும்
தேவன தருளினலே சிறந்துளே கலந்து வாழும்
பாவையே யஞ்சா நாளிற் பக்குவக் கருவாய்த் தோன்றும் (26)

தோன்றுமே பத்தா நாளிற் சொல்லுமோர் கட்டி யாகத்
தான்றிரண் டிருக்கு நாளோர் பதினைந்திற் சாற்று முட்டை
போன்றிடு மொருமா தத்திற் பொருந்திய சென்னி யுண்டாம்
ஒன்றிடு மதி யிரண்டிற் பிடரிதோண் முதுகு மெய்தும் (27)

எய்திடு மூன்றுந் திங்க ளியல்விலாத் தொடைகால் கையும்
மைதவிர் நான்காந் திங்கள் வயங்கிடும் வதன முண்டாம்
செய்யநற் றிங்க ளைந்திற் செவிநாசி வாயு முண்டாம்
பெய்மல சலத்து வாரம் பெரிதுண்டாந் திங்க ளாறில் (28)

திங்களங் கேழு தன்னிற் செறிமயிர் நரம்பு நாடி
தங்கிய தொப்புழ் சந்து சரமொடு குடரு முண்டாம்
பங்குறுந் திங்க ளெட்டிற் பலமிக வுண்டாய் மண்டை
யங்கதின் மயிருமுண்டா யன்னையுண் டிட்ட சாரம் (29)

சாரமங் குள்ளே செல்லத் தான்றெுப்புகழ் வழியு முண்டாம்
நேருமொன் பதுமா தத்தி னிறையறி வுணர்ச்சி பெற்றுப்
பாருறு கருப்பந் தன்னிற் பரிந்திடு பரிவு முண்டாய்க்
காருறு கண்டன் றன்னைக் கருதிய நிலைய தாகி (30)

நிலையதாம் பொருளா யெங்கு நிறைந்தபூ ரணமா யார்க்கும்
தலையதா யமல மாகிச் சராசரப் பொருளாய் நின்ற
தொலைவிலாச் சோதி வாழ்வே தோகைபங் காளா வென்றே
உலைவிலா விருகை கூப்பி யுன்பதந் தருவா யென்றும் (31)

என்னவே பத்தாந் திங்க ளீசனுர் கருணை யாலே
சென்னிதான் கீழே தாகச் சிறந்திடு மபான வாயு
துன்னியே யுதைத்துத் தள்ளத் தொல்லையி லுணர்ச்சி நீங்கி
மன்னிய பாரின் மீதே மதலைவந் துதிப்ப தாமே (32)

மதலையங் குதித்த போது வந்திடு மாயை தானே
கதுமென வளைந்து சுற்றிக் கலக்கிடத் திகைத்து விம்மி
இதமுட னழுவ தாகு மிப்பெரு மாயை யாலே
நிதமுமே பிறவி வந்து நேருநிச் சயம தாமே (33)

## ஆண்பெண் வேறுபாட்டிற்குக் காரணம்

ஆமது சுக்கி லந்தான் கதித்திடி லாணே யாகும்
நாமது சுரோணி தந்தான் கதித்திடிற் பெண்ணே யாகும்
தாமிவை யிரண்டுங் கூடிச் சமன்படி லிரட்டை யாகும்
பூமலி வையந் தன்னிற் புகல்வேத முறைமை யாமே (34)

முறைதரு கெர்ப்பந் தானு முன்னுறப் பொருந்தும் போதில்
அறைதரு பிராண வாயு வலத்திலே யோடி லாணும்
நிறைவுற விடத்தி லோடி நின்றிடிற் பெண்ணே யாகும்
குறைவற விரண்டு மோடி லலியெனக் குறுகுந் தானே (35)

குறுகிடு மிரத்த மத்தி கொழுந்தசை சுக்கி லந்தோல்
மறுவிலா மச்சை மேதை வகுத்தன வேழுங் கூடிப்
பெறுமொரு வடிவ மாகிப் பேசுறு சுவையுங் கூடி
உறுவினைப் பாலா லிந்த வுலகினி லுதிக்குந் தானே (36)

## அங்காதிபாதம்

உதித்திடு முடம்பு தன்னி லுண்டிடு மன்னந் தண்ணீர்
மதித்திடு மூன்று கூறாய் மலசலத் திரண்டு கூறும்
கதித்திடு மொருகூ றுந்தான் கருதிடு மிரத்த மாகி
விதித்தநன் முறைதப் பாமல் மெய்தனை வளரச் செய்யும் (37)

செய்திடு முடம்பில் ரோமஞ் செப்புமூன் றரையாங் கோடி
ஐயமி னீளந் தானு மங்குலந் தொண்ணூற் ருரும்
தையலே பருமை நாலெட் டங்குலந் தத்தங் கையால்
மெய்யினி லொன்ப தாக விதித்தன வாயி ருனே (38)

வாய்ந்திடு தசைப லந்தான் மதிக்கினூற் றறுபத் தைந்து
காய்ந்திடு விழிக டாமே கழஞ்சிரண் டாகுங் கண்டாய்
ஆய்ந்தநாற் கழஞ்சு கன்ன மன்னிறை யாகும் பித்துப்
பாய்ந்திடு நாசி மூன்று பகர்நாக்குக் கழஞ்சு நாலே (39)

நாலிரு பலமா மீர னவில்பழுப் பதினு ருகும்
தோல்பல முந்நூற் ருறு தொகுநிணம் பலந்தா னுறு
வாலிய பல்லெண் ணுன்கு வழுக்கைநாற் பலஞ்ச லப்பை
ஆலவேல் விழிநன் மாதே யதன்முழ மஞ்சு தானே (40)

அஞ்சுறு குடரி னீள மதின்முழ மைந்நான் காகும்
வஞ்சியே மூளை தன்னை வகுப்பர்முப் பலம தாக
எஞ்சிய வென்பு நூற்றுப் பதினெட்டுப் பலமா மென்ப
மஞ்சுறு மலப்பை யைஞ்சு முழமென வகுத்திட் டாரே (41)

இட்டதோர் முதுகந் தண்டு மீராறு கோவை யாகும்
முட்டிய வுதிர நாலு நாழியா முளரி மொட்டுத்
திட்டமா யைங்க ழஞ்சு செங்கைகா லசைவைந் தாகும்
தொட்டிடு நரம்பெ லும்பி னசைவினைச் சொல்லி னேழே (42)

ஏழுபத் துடனி ரண்டா யிரநரம் பிறுகி நிற்கும்
தாழ்விலாத் தாரை தானு மங்குல மெட்டாய்ச் சாற்றும்
நாழிமூன் ருகும் பித்தம் வாதமோர் நாழி யாகும்
பாழ்படு சேற்ப நாலு நாழியாய்ப் பகுத்தா ரன்றே (43)

பகுத்திடு மாங்கி ஷந்தான் பலமது நூறே யாகும்
தொகுத்திடு மேதை யெல்லா மிருநூறு பலமாய்ச் சொல்லும்
உகுத்தகெந் தம்ப லந்தா னேதுவ ரெட்ட தாக
வகுத்திடு மிரத மைந்தா யுரைசெய்தார் மறைவல் லோரே (44)

வல்லவேல் கயல்சே லம்பு வாளைவென் றிடுகண் ணோடு
வில்லையு நுதலாக் கொண்ட மின்னிடைமின்னே கேளாய்
சொல்லிய விவைக ளெல்லாஞ் சுருதிநூ லுரைத்த வாறே
நல்லியல் பணைத்து நாடி நயம்பெற வறிந்து கொள்ளே (45)

## பஞ்சபூதக் கூறு

கொள்ளுமிச் சடந்தான் பஞ்ச பூதியக் கூருய் நிற்கும்
அள்ளிலை வேற்க ணுளே பிருதிவி யப்புத் தேயு
விள்ளரும் வாயு மானம் விளிம்பிய பூத மைந்தாம்
தள்ளரும் பிருது விக்குச் சார்குணத் தன்மை கேளே (46)

தன்மைதான் மயிரெ லும்பு தசைநரம் போடு தோலாம்
சொன்னவப் பினுக்கு மச்சை சுக்கிலத் தோடி ரத்தம்
பன்னுநீர் மூளையாகும் பகர்தேயுக் குணஞ்சோம் போடு
மன்னிய பயமாங் கார மைதுனந் துஞ்ச லாமே (47)

துஞ்சலில் வாயுக் கூறு துள்ளியே நடத்த லோடல்
பஞ்சியாய்க் கிடத்த னிற்றல் பரிவுட னிருத்த லாகும்
மிஞ்சுமா காயக் கூறு வெய்யகா மியங்கு ரோதம்
வஞ்சியே மோக லோப மதமுடன் வகையோ ரைந்தே. (48)

ஓரைந்து பூதி யங்க ளொன்றினுக் கைந்து பேதம்
சேருமை யைந்தே யாகச் செறிந்திடு கருவி யாகும்
பார்நிறம் பொன்தா னுகும் பளிங்குநீர் பவளந் தேயு
கார்நிறம் வாயுவாகுங் ககனமும் வெண்மை காணே (49)

## தசவாயு கூறு

காணுநற் பிராணன் கூர்மன் கருதுதா னன்ச மானன்
மாணுறு தேவ தத்தன் வளமிகு கிரிக ரன்ருன்
பூணுறு முலையாய் நாகன் றனஞ்செயன் புகல்வி யானன்
சேணுறு மபானன் பத்துஞ் செப்பினர் வாயு வென்னே (50)

என்னவகுத் திடும்பிராண வாயுத் தன்மை
யியம்பக்கே ணீலவண்ண மூலா தாரம்
தன்னிலோங் காரவெழுத் தாகத் தோன்றித்
தானருந்து முணவையெல்லாஞ் சமிக்கச் செய்யும்

சொன்னசிர சினின் முட்டி விழிமை யத்தைத்
தொடுநாசி வழிவிரலீ ராறு பாயும்
மன்னுமெட்டு முள்வாங்கு மொருநான் குந்தான்
வறிதாக வெளிதனிலே பாயும் பாழே (51)

பாழான வபானன்றன் பரிசைக் கேளாய்
பச்சைநிறஞ் சுவாதிட்டா னத்திற் றேன்றிக்
கேளான போசனத்தைச் சுருக்கி நாளுங்
கீழ்நோக்கி மலசலத்தை யுறுமித் தள்ளும்
தாளான வன்னத்தின் சார மெல்லாஞ்
சடத்தினுக்கா தாரமுறச் சாரு விக்கும்
கீழான வயிற்றினுள்ளே யுலாவி நிற்குங்
கேட்டிடாய் வியான னுடை கெதியைத் தானே (52)

கெதியான பானிறமாய்த் தோளி லுற்றுக்
கிளர்ந்தெழுபத் தீராயிரமாம் நரம்பிற் சேர்ந்து
பதியான சர்வசத்தின் முடக்க நீட்டப்
பண்ணியே பரிசங்க ளறியச் செய்யும்
புதிதான கனேதவன மாக்கு விக்கும்
பொசிப்பிலுறு சாரமெல்லாம் பூரித் தெங்கும்
விதியான வுடம்புதனை நாள்க டோறும்
மிகவளரச் செய்யுமென விதித்திட் டாரே (53)

விதித்தவுதா னன்றனே மின்னின் வன்ன
மிகவிதயந் தனிலனலை யெழுப்பு வித்து
மதித்தபுசிப் புகளெல்லாஞ் செமிக்கச் செய்து
வளர்நாடி நரம்புகளி லூட்டு விக்கும்
குதித்துநிறுத் திடலெழுப்பல் கலங்கு வித்தல்
குறித்தகனு வருவித்த லிரும றும்மல்
கதித்துவருந் திடச்செய்த விவைக ளெல்லாங்
கண்டறிவா யுதானன்கா ரணத்தா னுமே (54)

காரணமாஞ் சமான னிறம் புட்ப ராகங்
கசிவாகி யறுசுவைசே ரன்னந் தண்ணீர்
பூரணமா யுடம்புதனிற் சமனு யெங்கும்
புகுத்தியே வாயுகளை மிஞ்சொட் டாமல்
தாரணையா யடக்கியே சமன தாகித்
தானிருக்கு மடிநாபி குய்யந் தன்னில்
வாரணமா முலையாளே கூர்ம னென்னும்
வாயுநிறம் வெண்மையென வகுப்பர் மாதோ (55)

வகுப்பான விலாடத்தி னின்றெ ழுந்து
வடிவான வுடம்பினுக்குப் பெலனுண் டாக்கித்
தொகுப்பான விழிகளினை யிமைத்து மூடித்
துறந்திட்டே காட்சியெலாந் தோன்றக் காட்டும்
உகப்பான நயனத்தாற் கண்ணீர் வீழ்த்து
முறையாமல் வாய்மூடு முலாவி நிற்கும்
மிகப்பாலிற் சுவைத்தமொழி மானே கேளாய்
விளம்புவே னுகனுடை யியல்பைத் தானே (56)

இயல்பான நாகன்பொன் னிறமே யாகு
மியம்புகலை யாகமங்க ளெல்லாந் தேரும்
பயில்வாயிற் கொட்டாவி விக்கல் பண்ணும்
படிக்குமித யத்திருக்கும் பண்ப தாகும்
செயலான கிரிகரன்றன் கரிய வன்னஞ்
சிந்தைதனி னின்றுபசி யெழுப்பு வித்தங்
குயர்வாக வநுபவித்த லிருத்தல் போத
லுண்ணுக்கு நாசிதனிற் கசிவுண் டாதல் (57)

கசிவுண்டா யிருமறும்மன் முடக்கி நீட்டிக்
காட்டுவித்தல் கிரிகரன்றன் கண்டு கொள்ளும்
இசைவான தேவதத்தன் படிக வன்ன
மியம்பல்படுத் திடலெழுந்து கோபஞ் செய்தல்
அசையாமல் விழிக்கும்போ தயர்வு நீக்க
லார்ப்பரித்தல் சண்டையிடல் தர்க்கம் பேசல்
நசையாகக் குய்யமிருப் பிடமே யாகு
நல்லதனஞ் செயனடத்துங் குணத்தைக் கேளே (58)

குணமான தனஞ்செயன்ற னீல வன்னங்
கூரியமூக் கினினின்றுந் தடிக்கு மெய்யை
வணமாக வீங்கிடவே பண்ணு விக்கு
மதிக்கரிய கன்னத்திற் சமுத்தி ரம்போற்
கணமான சுந்தரகோ சந்தா னுகிக்
கடிதாக நீர்வடித்துப் பிராண னேடு
மணமான வாயுவெலாம் போய்மூன் றுநாண்
மண்டைவெடித் தேவரிசை யாகப் போமே (59)

## தசநாடியின் கூறு

வரிசையாய்த் தசவாயுச் செயலீ தாகும்
வாயுவுகளுக் காதார மாயி ருக்கும்
துரிசில்லாத் தசநாடி தன்னைக் கேளு
சுழுமுனையோ டிடைகலைபிங் கலைகாந் தாரி

சரியான சிங்குவலம் புருட னத்தி
சங்கினிநற் குகுதனெடு வைர வன்ருன்
பிரியாமன் மூலத்திற் ரேன்றி நிற்கும்
பேசக்கேள் சுழுமுனையின் சூட்சந் தன்னை (60)

சூட்மாஞ் சுழுனைகுய்ய வடிமூ லத்திற்
ரேன்றியே கம்பமதா யெழுந்து மேற்போய்
ஆட்சியா யாதார மாறுஞ் சென்றே
யசைவற்றுச் சிரசளவா யமர்ந்து நிற்கும்
மாட்சியா மிடைகலைபிங் கலையி ரண்டு
மன்னியே கத்திரிக்கோன் மாய லாகி
நீட்சியாஞ் சுழுனைதனைச் சுற்றி யேறி
நெட்டிட்டே சிரசளவாய் நேருந் தானே (61)

நேரான மூக்குநடுப் புருவ நெற்றி
நின்றுமே நாசியிரு மூலம் புக்கும்
பேரான காந்தாரி நாபி யுற்றுப்
பெருநரம்பின் வழியாக வுலாவி யேறிச்
சீரான சிரசளவாய்க் கண்டஞ் சேர்ந்து
செப்பியவே ழிசைக்குருவாய் நாவி னின்று
நீரான தைப்பொழிந்து கசியப் பண்ணி
நிற்குமே சிங்குவத்தி நிகழ்த்து வேனே (62)

நிகத்துவேன் சிங்குவத்தி மூலந் தன்னி
னின்றுநரம் பெவற்றினும்போய்க் கலந்து லாவி
மகத்தான செவிகளிரண் டினிலுந் தொட்டு
வலமிடமாய்க் கண்களிலே மருவிச் சேர்ந்தே
அகத்தினிலே வருமவத்தை நான்கி னுள்ளு
மளவாகி நின்றிடுமங் கறிந்து கொள்வாய்
சுகத்தான வலம்புருடன் செய்தி கேளு
சுழித்திடுமுந் திக்கீழாய்த் தோன்றுந் தானே (63)

தோன்றியே நரம்புவழி விலாவூ டோடித்
தோளொடுகைக் குழிபுக்கு நயனத் துற்றே
ஆன்றசெவி தன்னிலிடம் வலமாய் நின்றங்
கறிவவச மாக்கியே யமர்வன் கண்டாய்
ஏன்றகுகு தன்னுபி தன்னி னின்றங்
கீரல்பற்றி யேகுடலைக் குமட்டி வித்தங்
கூன்றிய வாயாற் றண்ணீர் குழகுழத்தே
யோடுவிப்பன் சங்கினியி னுண்மை கேளே (64)

உண்மைகேள் சங்கினியா நாடி குய்யத்
துறுதியாய் நின்றுடலிற் றத்து வங்கள்
வண்மையாங் கருவிகளை மிஞ்சொட் டாமல்
வசப்படுத்திக் கொண்டிருக்கும் வரிசை யாக
வெண்மையாங் கலைநிறைந்த மதியம் போல
விளங்குமெழின் முகம்படைத்த மின்ன னாளே
திண்மையா நாடியிவை பத்தின் பேருஞ்
செய்கைகுணங் குறிகளையுந் தேர்ந்து பாரே (65)

## ஆருதாரம்

பாருநீ யாரு தாரப் பரிசது பகரக் கேளாய்
சீர்பெறு மூலா தாரஞ் செப்பிடு சுவாதிட் டானம்
ஏர்மணி பூர கத்தோ டனாகதம் விசுத்தி தேற்றம்
சேருமாக் கினையா றென்னத் தெரிந்தவர் செப்பி னாரே (66)

செப்பிய மூலா தாரந் தெரிவருஞ் சூட்ச மாகும்
ஒப்பிலா முக்கோ ணத்தாய்க் கமலநா லிதழ்கொண் டோங்கும்
தப்பிலா நடுவோங் காரந் தன்னிலோர் தம்பந் தோன்றி
அப்படிச் சிரமட் டாக வடுத்திடு மேரு வாக (67)

மேருவ தான வீட்டில் விளங்கிய கணேசன் றன்பாற்
சேரும்வல் லபையி னோடு சிறந்துவீற் றிருந்து வாழ்வன்
ஆருமங் கறியொ ணாவீ டருங்கதி கொடுக்கும் வீடு
நேரிலா மூல வீடு நித்திய மான வீடே (68)

வீடிது தனக்கு மேலாய் விளங்கிய சுவாதிட் டானம்
கூடித ழாறு நான்கு கோணநவ் வெழுத்தைக் கொள்ளும்
பீடுறு துரியா தீதப் பெரும்பதி பிரம னோடு
நாடிய வாணி யாங்கே நயந்துறைந் திடுவ ராமே (69)

உறைந்தவப் பதிக்கு மேலா யுறுமணி பூர கந்தான்
பிறிந்திடு மிதழீ ரைந்து பிறைவடி வாமக் கோணம்
அறிந்திடு மெழுத்து மவ்வா மடுத்திடு மரியி னோடு
சிறந்தலக் குமிதா னங்கே சேர்ந்துவாழ் துரிய வீடே (70)

துரியமாம் பதிக்கு மேலாய்ச் சுழுத்திவீ டனாக தந்தான்
உரியமுக் கோண மாகு மோங்கிடு மிதழீ ராறு
தெரியுமக் கரஞ்சிவ் வாகுந் தேவிருத் திரிதன் னோடு
பொருவரு முருத்தி ரன்றான் பொலிந்திடும் பதிய தாமே (71)

பதியதன் மேல்வி சுத்தி பகருஞ்சொப் பனவீ டாகும்
துதியுறு கோண மாறு சூழ்ந்திடு மிதழீ ரெட்டாம்
கதிகொளக் கரம்வவ் வாகுங் கருதரு மயேச்சு ரன்றுன்
துதிமயேஸ் வரியி னேடு சூழ்ந்துறை தலந்தா னமே (72)

தலமிதன் மேல தாகத் தங்குமாக் கினைதான் வட்டம்
உலையுமூன் றிதழா கார முரியசாக் கிரத்தின் வீடு
தொலைவறு சதாசி வந்தான் றூமனேன் மணியி னேடே
அலகிலா வருளி னேடு மரசிருந் தளிப்ப னமே (73)

அரசுசெய் பதிமே னுதை மங்குல மாறீ ராறில்
இரவிமண் டலமா மப்பா லிருக்குநா லங்கு லத்தில்
உரைசெயும் விந்தி யங்கி யொளிவெளி யாயி ருக்கும்
தெரிசனங் கண்டோர் மண்ணிற் செனித்திடாச்சென்ம மாமே (74)

சென்மமா முடம்பி னுக்குட் டிகழ்ந்து தெய்வீக மான
மன்னிய லாரு தார வகையிவை புகன்றே மாகக்
கன்னலை யமுதைத் தேனைக் கனியினைப் பாலை வென்ற
நன்னய மதுரத் தீஞ்சொ னங்கையே தெரிந்தி டாயே (75)

## நரம்பு நிலை

தெரிந்தவுந் திக்கீ ழாகச் செப்புமோங் காரந் தன்னில்
இருந்திடு மெழுபத் தீராயிரமெனு நாடி யெல்லாம்
திருந்திய நரம்புக் கொன்றுய்ச் செறிந்துட லெங்குஞ் சுற்றிப்
பிரிந்திடா தோடி யாலின் விழுதெனப் பின்னி நிற்கும் (76)

பின்னியே நரம்பு நிற்கும் பிரிவினை யுரைக்கக் கேளாய்
சென்னியி னரம்ப தேழா யிரமாகுஞ் செவியி ரண்டில்
கன்னமுட் படவே மூவா யிரமதாங் கண்க டம்மின்
மன்னியே நிற்கு நாலா யிரமூக்கின் வகையைக் கேளே (77)

மூக்கின்மூ வாயி ரத்து முந்நூற்று முப்ப தாகும்
தூக்கிடிற் பிடரின் கீழ்மேற் ரேளிலை யாயி ரம்தான்
ஊக்கமாங் கண்டத் தாரு யிரமுறுங் கையி ரண்டிற்
தாக்கமாய்ப் பார்க்கின் மூவா யிரமுண்டு தொண்டை தானே. (78)

தொண்டையின் கீழுந் தொப்புழ் மேலுமாய்த் தோன்று நாடி
ஒண்டொடி கேளா யொன்ப தாயிரத் தொருபத் தாறு
மண்டியே விலாவின் மூவா யிரம்வளர் முதுகந் தண்டில்
அண்டுமெண் ணுயி ரந்தா னிராயிரஞ் சந்தி யாமே (79)

சந்திடி வயிறி லிங்கந் தன்னிலே மூாயி ரந்தான்
பிந்திய கணைக்கால் பாதம் பெருந்தொடை யளவு நின்ற
அந்தவெண் ணுயி ரத்தோ டறு நூற்றைம் பத்து நாலாம்
முந்திய வாயி ரந்தான் மூலத்தி னிற்கு மாமே (80)

மூலமா முந்திக் கீழாய் முடிச்சுடை யுறியொன் றைப்போல்
மேலுறு கண்டத் தந்தம் விரவிய பிடர்க்கீழ்க் கோவை
ஏலவே யெழுபத் தீரா யிரநரம் பென்பு நாடி
சாலுமென் றசையிற் கூடிச் சமமாக விருக்கு மெங்கும் (81)

எங்குமே யெழுபத் தீரா யிரநரம் பெவற்றி னுள்ளும்
தங்கியே யுதிர மூறுந் தசைதனின் மருவி நிற்கும்
பங்கமி லெலும்பி னுள்ளே பரந்துதான் மூளை நிற்கும்
கொங்கைவெற் பணைய மாதே கூறிடுஞ் சித்த வேதம் (82)

வேதமாஞ் சென்னி யாதி விளம்பிடு பாத மீருய்
மோதியே யுடம்பு தன்னின் முடிச்சுறு மிடங்க ளெங்கும்
ஓதர சிலைதோல் போனு லுற்றிடு நரம்ப தென்னத்
தீதிலா நரம்பு பின்னித் தசையுடன் செறிந்து புக்கும் (83)

புக்குறு சென்னி கால்கை புருவநெஞ் சொடுமு ழங்கால்
கைக்குழி முழங்கை கண்டங் கணைக்காலிங் கிவையு டம்பின்
முக்கிய தான மாகு முடிச்சுறு மிடங்கள் பத்தும்
சிக்கியே நரம்பு நிற்குஞ் செழுந்தசை யொடுசெ றிந்தே (84)

## சுவாசம்

செறிதரு நாளொன் றுக்குச் சிறந்திடும் பிராண வாயு
அறிதர விருபத் தோரா யிரத்தறு நூறு நாசிற்
பறிதரு மதிலி ரண்டு பங்குமீண் டுள்ளே வாங்கும்
வெறியதா யொருபங் குந்தான் வீணிலே பட்டுப் போமே (85)

பட்டிடு சுவாச மேழா யிரத்திரு நூறு பாழில்
விட்டுநா ளுக்கு நாளாய் வீணிலே கழித்த லாலே
மட்டுறு மலர்ப்பூங் கோதாய் மங்கைபங் காள னிட்ட
கட்டளை தன்னாற் கால னுயிரினைக் காத்து நிற்பன் (86)

காத்திடு முடம்பி னுக்குக் கணக்குள வயது நூறு
பூர்த்திய தாயி ருக்கும் பூமியே முதலாம் பூதம்
ஆர்த்திரு பதுவாண் டுக்கொன் றுகவே யடுத்து மெய்யைச்
சேர்த்துநா டொறும்வ ளர்க்குந் திருமலி யணங்க னாளே (87)

அணங்கனுய் சென்ம மாதி யாண்டுபத் திளமை நீங்கும்
இணங்குநல் வளர்ச்சி யெல்லா மிருபது வயதிற் போகும்
மணம்பெறு மழகு முப்ப தாண்டுமட் டினிற்போ மேதை
நுணங்கியே குறைவு காணு நுவல்நாற்ப தாண்டி னுக்கே (88)

ஆண்டுதா னைம்ப தாகி லவனியப் புவைநெ ருக்கும்
தூண்டிடு மப்பு மேலே நோக்கலாற் றேல்சு ருங்கி
நீண்டரோ மத்து வார நீருறி வெளுக்கு மேனி
ஈண்டறு பதினி லப்புத் தேயுவை நெருக்கு மென்னே (89)

நெருக்கிடத் தேயு மேலே நோக்கிநின் றிடுத லாலே
பெருக்கமாங் கண்ணின் பார்வை யொளியின்றிப் பிரபை குன்றும்
செருக்கிள ரெழுப தாண்டிற் றேயுவா யுவைநெ ருக்கும்
தருக்குறு வாயு மேலே நோக்கலாற் றுன்சி றுக்கும் (90)

சிறுத்திடு மசன மெல்லாந் திடமின்றி நடையுங் குன்றும்
மறுத்தவாண் டெண்ப தாகில் வாயுவா காய நோக்கும்
குறித்திடு சுவாச நாசிற் குறைந்துமேற் கொண்டு நின்று
பிறித்திடு காதுமந்த மாய்ச் சத்தப் பிரதி குன்றும் (91)

குன்றிடு வயது தொண்ணூற் றினிலேயா காயங் கும்பித்
தொன்றுமான் மாவை நோக்கி யுறுநிலை கலக்க மெய்தி
மென்றிகழ் சகுட நீர்போன் மெய்யினிற் பற்று நீங்கி
மன்றநூ றுண்டி லான்மா வரும்வழி போவ தாமே (92)

## வயதளவு

போவதா மெய்யின் மூலச் சுழியினிற் பொலிபி ராணன்
ஆவதாம் வாய்வைக் கும்பித் தரியநேத் திரமை யத்தில்
தூவிரு நாசி பாயுஞ் சுவாசமூன் றுன்றைக் கட்டிற்
சாவதில் லாம லென்றுஞ் சகத்திற்சஞ் சரிக்க லாமே (93)

சஞ்சரித் தாரு தாரத் தத்துவ முடிவி னின்று
விஞ்சிய பரமா னந்த வெள்ளத்தி லாழ்ந்து மூழ்கித்
துஞ்சுதல் பிறத்த லின்றிச் சுகம்பாகந் துய்த்து வாழ்வார்
பஞ்சின்மெல் லடியி னுளே பரிந்திது பண்ணிப் பாரே (94)

பண்ணிய வுடம்ப தெங்கும் பரந்துதா னரம்பு நிற்கும்
அண்ணிய நாடி தன்னை யரியசாத் திரங்க ளெல்லாம்
எண்ணியே படித்தா ராய்ந்த வியல்புடை யறிஞர் சொன்ன
திண்ணிய குறிகு ணத்தின் செய்திகேள் தோகை மானே (95)

## நோய் உற்பத்தி

தோகையே யெழுபத் தீரா யிரமதாச் சொலுநா டிக்குள்
ஏகமாய் நாடி பத்தென் றியம்பின ரவைக்குண் மேலாய்
ஆகிய நாடி மூன்று மதின் வழி நோய்கள் சேரும்
பாகன மொழியாய் நோய்க ணிலைமையைப் பகரக் கேளே (96)

பகருவே னுலக மெல்லாம் படைத்தநான் முகத்தோன் றன்பால்
மிகுநகை மதிமு கத்து மேதினிப் பெண்சென் றேத்தித்
தகுமுயிர் பலவு மென்பாற் சஞ்சரித் திடுகை யாலே
அகமெலி வுற்றேன் றுங்க வல்லளோவைய வென்றுள் (97)

என்றுநின் றுரைத்துப் போற்று மெழில்கொள் பூ மாதை நோக்கி
நன்றெனக் கமல யோனி ஞாலமேற் பாரந் தீர்ப்பான்
வென்றிசேர் மிருத்து வென்னுந் தெய்வத்தை விதித்தல் செய்தான்
அன்றந்த மிருத்துத் தானே ரரிவையா யமர்ந்து நின்ற (98)

நின்றவம் மிருத்து நாம நிகழ்கல கண்டி யென்பாள்
சென்றெதி ரயனைப் போற்றித் தேவனே யடியா டன்னை
இன்றுநீ விதித்தல் செய்த தென்னென விரங்கிக் கண்ணீர்
பொன்றிகழ் முலைமேற் சோர வழுதிவை புலம்பிச் சொன்னாள் (99)

புலம்பிய மாதின் கண்ணீர் பொம்மென வுருத்து விம்மி
அலம்புரி மூவேழ் கோடி ரோகமா யடர்த்து மேவ
விலம்புரை புருவ நோக்கார் மெல்லியல் வெருவி யெந்தாய்
சலம்பயில் ரோக மென்பாற் சனித்திட்ட வகையே தென்றுள் (100)

ஏதென வணங்கி நின்ற மிருத்தையெண் கண்ண னோக்கிப்
போதவே பலசென் மத்துட் புக்குநீ சார்ந்து நின்று
வேதனை செய்யு நோயாய் விதிப்படி மாய்த்துப் பூவின்
மாதிட ரகற்று கென்றே மலரயன் விட்ட தாமே (101)

விட்ட வெம்பிணி யாவும் விரவியே
தொட்ட தெண்டிரை சூழுல கத்திடை
நட்ட மேயுற நல்லுயிர் யாவையும்
மட்டு லாவு மவைநவில் வாமரோ (102)

## நோயின் தொகை

நவிலும் வெம்பிணி நாலாயி ரத்தின்மேல்
அவமில்நா னூற்று நாற்பத்தெட் டாமவை
பலவு டம்பிற்ப யிலுங்க ணக்கினைக்
குவல யத்திற் குறிக்கு மனிதர்க்கே (103)

## ஒவ்வோரு உறுப்பிலுண்டாகும் நோய்களின் கணக்கு

மனிதர் சென்னி மருவுமுந் நூற்றேழு
கனிகொள் வாயிற் பதினெட்டுக் காணுறும்
இனிய நாசி யிருபத்தே ழாஞ்செவி
பிணிவ ரைம்பத் தாறெனப் பேசினர் (104)

பேசிய நோய்தான் கண்ணிற் பெருகிடுந் தொண்ணூற் ருறு
மாசிலாப் பிடரி தன்னின் மருவிடு நோய்பத் தாகும்
ஏசில்கன் னத்தின் முப்பத் திரண்டென வியம்பும் வேதம்
காசணி முலையாய் கண்டத் தாறென்பர் கலைவல் லோரே (105)

கலைவல்லோ ருந்தி தன்னி னூற்றெட்டுக் கைக டம்மில்
நிலைபெறு நூற்றி முப்ப தாமென்பர் நெடுங்கு தத்தில்
உலவுநோய் நூற்றென் ருகு மொண்டொடி மானே கேளாய்
வலமிகு தொடையிற் றெண்ணூற் றென்றென வகுத்திட் டாரே

வகுத்திடு முழங்கால் கெண்டை மருவுநோய் நாற்பத் தேழு
பகுத்திடு மிடைநூற் றைந்தா மிதயநூற் ருறு பற்றும்
தொகுத்திடு முதுகு தன்னி லைம்பதிற் றிரண்டாருச் சொல்வர்
சகத்தினி லெவரும் போற்றத் தகுமெழிற் றைய லாளே (107)

றையலே யுள்ளங் காலிற் சாற்றுநோய் முப்பத் தொன்றும்
ஐயமில் புறங்கா றன்னி லடையுநோ யிருபத் தைந்தாம்
மெய்யுறுப் பெங்கு மாக மேவியே யிருக்கு நோய்கள்
பையவே பார்க்கின் மூவா யிரத்தொடு பகரு நூறே (108)

நூறுமெய் யினிலெண் சாணு நுவனுலா யிரத்தின் மேலும்
கூறுநா னூற்று நாற்பத் தெட்டெனக் குறிப்பி னுலே
தேறுநூற் கடல்க டந்து தெளிந்தமா முனிவர் சொன்னுர்
மாறிலா வுலகந் தன்னில் வாழ்ந்திடு மாந்த ருக்கே (109)

மாந்தரா னவருக் கெல்லாம் வருப்பிணித் தொகையீ தாகும்
ஆய்ந்திவை பார்க்கும் போதி லந்தத்தா னங்க டோறும்
ஏய்ந்திடு வாத பித்த வையத்தி னிசைந்து தோன்றும்
வாய்ந்திடு முடம்பு தன்னை வருத்திடும் வன்மை கொண்டே (110)

## நோயின் வகை

கொண்டதோ ருடம்பிற் றேன்றுங் கொடியநோய் வகையைக்கூறின்
மண்டுவெஞ் சுரமே தோஷம் வருசன்னி வலியுள் வீச்சும்
அண்டொணு மூல நோயு மடுத்திடுங் கனையே சூலை
பண்டுள வக்க ரங்கள் பீனிசம் பகுத்துப் பாரே (111)

பாருநீ குட்ட ரோகம் பகர்மாந்த மெகுத்து வாயு
சோர்விலா துலேவு செய்யுந் தொய்விளேப் பீழை காசம்
சாரும்வா யுக்கி ராணி தங்கிடு சலக்க ழிச்சல்
வாருறு முலேயாய் சோகை வருத்திடு மேக நோயே (112)

மேகமாங் கரப்பன் மேனி வெதுப்புடன் சொறிசிரங்கு
தாகமே மிகுகா மாலே தங்கிடுங் கழிச்சல் மிக்க
சோகமே விளேத்து வாட்டுஞ் சுவாசநோய் வாத ரோகம்
ஆகுமிந் நோய்க ளன்றி யனேகமா நோய்க ளுண்டே (113)

உண்டுநோய் வாத பித்த வையங்க ளூறுதொந் திப்பால்
மண்டியே வருத்து மென்று மறைமொழி யுரைக்குங் கண்டாய்
கொண்டிடு குறிகு ணங்கள் கூறிய முறைவ ழாமல்
பண்டித ருணரும் வண்ண மலேமுனி பகர்ந்த தாமே (114)

பகர்ந்த நூல்கள் பலபல சாத்திரம்
உகந்து கற்ற வுணர்ச்சியி னுன்மீக
அகந்தெ ளிந்து மணிமந்த்ர மாதியால்
சுகந்த ரும்மெனச் சொற்றனர் திண்ணமே (115)

திண்ண மாம்பிணி சென்மத் தொடர்ச்சியால்
நண்ணி வெந்துயர் நல்குமி துண்மையே
எண்ணி டாதிடர் செய்யு மிறப்பினே
மண்ணு ளோர்சொல்லு வாரிம் மரபினல் (116)

மரபிற் பண்டிதர் வன்பிணி யாமென்பர்
பெரிய மந்திர வாதிகள் பேயென்பர்
உரிய சோதிடர் கோளென வோதுவர்
விரிவி னேர்கள் விதிப்பய னென்பரே (117)

## நோயில்லாவியல்பு

பயனுறு முடம்பி னுள்ள வங்கிதான் பகைகொளாமல்
வியனுறு காலொ டொத்து மேவியே சமான மாகில்
அயனமாம் புசிப்ப தெல்லா மடங்கியே சீர ணிக்கும்
வயனமாய் நோய்கள் வாரா மாண்புடன் சுகமுண் டாமே (118)

## நோய் தோன்றுமியல்பு

சுகமதாய்க் காற்றெ ழும்பிச் சொலிக்கவே யங்கி தன்னே
அகமதி லூது மாகி லதிகமாய்ப் பசியுண் டாகும்
மிகநெருப் பொடுகால் கூடி மீறியே மண்ணேச் சார்ந்தால்
பகர்தரு வாத நோய் வருமெனப் பன்னி னூரே (119)

பன்னிய மண்டான் மீதிற் பரிந்துவாய் வுடன்றெந் திக்கும்
பின்னிய காற்றுந் தீயும் வானுறிற் பித்த மீறும்
மன்னிய தீயுங் காற்று மப்புறி லைய முண்டாம்
வன்னியத் தியினைப் பற்றில் வந்திடும் பித்த நோயும் (120)

பித்தமாந் தீயுங் காற்றும் பெலத்துமூ லையினிற் புக்கின்
மெத்தவே நீர்க டுத்து மேகநோய் வந்து சேரும்
சத்திப நீர்கால் வன்னி சிங்குவை தானுங் கூடி
ஒத்துமூ லத்திற் சேர்ந்தாற் சன்னிவந் துருப்ப தாமே (121)

உருப்பதாஞ் சுழுனை யுற்றுக் காந்தாரி யோங்கித் தீயைப்
பரப்பிடி லுடலம் வற்றிப் பரிவுறு தாதுங் குன்றும்
மருப்பயில் கலையி ரண்டு மணிவிசை நரம்பி னுற்றுற்
பருப்பிள வைகள்புண் பற்றி நரம்பினைத் துளைக்கும் பாரே (122)

துளைத் திடு மங்கி காற்றுத் துன்னியே நீருங் கூடி
வளைத்துடன் விசைந ரம்பை மடக்கியே சன்னி தன்னை
விளைத்துயிர் மாளச் செய்யு மிகுவாதம் பித்த மையம்
இளைத்திடா தெழுந்து மீறி லிதுசன்னி யெனச்சொன் னாரே (123)

சொன்னகாற் றங்கி கூடி மந்தத்திற் றுன்னி நிற்கில்
பின்னமாய்ச் சுரங்க ளெல்லாம் விரைவாக வந்து சேரும்
மன்னுகாற் றுடனே தீயு மண்டையி லேறு மாகில்
துன்னுமே பீனி சம்மூக் கனேகநோய் சிரத்தி லாமே (124)

சிரத்தினிற் காற்று மீறித் தீயொடு நீரைச் சேர்த்துக்
கருத்துற வேற்று நீரைக் கான்மறித் திடுத லாலே
உரைத்தகண் ணொளிதான் குன்றி யுற்றிடு நயன நோய்
இரத்தமாஞ் சயநோய் வந்தே யேறிடு மங்கி யாலே (125)

அங்கிதா னெழுந்து மேலா யப்புவை யேற்ற லாலே
பொங்கிய மதுரம் வானி லூறிமண் டையுட்பொ சிந்து
தங்குநீர் கீழி றங்கிச் சார்ந்துநெஞ் சினிற்சு வாசம்
மங்கியே குறைத லாலே வருங்கய நோயு மாமே (126)

கயமான பெருந ரம்பிற் கலந்துடன் கால்வி சைத்து
வயமான தமரை விம்மி மடக்கியே நீரே முந்தாற்
பயமான சூலை நோய்கள் பலவும்வந் தடுப்ப தாகும்
நியமான குடலி லுள்ளே நெல்லுமி கல்லுத் தாமே (127)

கல்லொடு மயிர்நெல் லின்வால் கசடது குடலிற் பற்றில்
வல்லமா சதுவா யன்னஞ் செரியா தம்மாசி னாலே
புல்லிய கிருமி சேர்ந்து குன்மநோய் பொருந்து மென்க
அல்லிருங் குழலி னாளே யடுக்குநீ ரிழிவைக் கேளே (128)

இழிந்திடு நீர்தான் மாத ரிச்சையி னதிபோ கத்தால்
அழுந்தலம் புருடன் மூலத் தடுத்திடவாயு கீழாய்
விழுந்துதி ரத்திற் சேர மேவிடு மூலச் சூட்டால்
வழிந்துசின் னீரி ரத்தம் வருமினிக் கிரந்தி தானே (129)

கிரந்திதான் கபாலந் தன்னிற் கிளர்த்திடை கலையா நாடி
துரந்திட வாயு தானுஞ் சொருகியே சுழியைச் சேர
நிரந்தசீ யிரத்தம் பற்றி நீங்காமற் கோர மாகிற்
பரந்திடுங் கிரந்தி சூலை பற்சூலை விரவு மென்னே (130)

விரவிய நாக னத்தி கபாலத்தின் மீது மோதப்
பரவிய வன்னி கூடி விசைநரம் பதனைப் பற்றி
அரவுபோல் வளைக்க வூனங் குறுகியே யடைத்துக் காதில்
கரவதாய் நோய்கள் சேர்ந்து தொந்திக்குங் காதிற் றனே (131)

காதிய வன்னி மீறிக் கனன்றுதா னத்தி புக்கி
வாதியாய் மூலத்துற்றுன் மலசல மந்த மாகி
மோதியே கழுத்து ழைந்து முக்கியே யிரத்தம் வீழ்ந்து
பேதியாங் கிராணியாகிப் பெலன்கெட்டுச் சீதம் வீழும் (132)

சீதமா மபான வாயுச் சீயுடன் காலுங் கூடிப்
பாதமே சிரமீ றுகப் பற்றிநின் றெதிர்சொ லிக்கிற்
சேதமாய் மெய்தி ரைந்து சேர்ந்துமே கக்கூ டாகி
மோதியே கடுத்து நீங்காப் பிரமேக முதிர்ந்துண் டாமே (133)

முதிர்தரு வாத மெண்ப துறுமுரண் பித்த மையெட்
டெதிருறு சிலேற்ப னந்தா னிருபதென் றுரைத்தார் மேலோர்
பிதிர்சுணங் கணிந்து விம்மும் பெட்புடை முலையி னாளே
சதிசெயு நோய்க ளெல்லாஞ் சார்ந்திடு மாறு கேளே (134)

## நடக்கைப் பிழை

ஆறுகேள் பெண்கண் மேலே யதிகமா மோகத் தாலும்
கூறிய மருத்தீட் டாலுங் குறைவிலா நடையி னாலும்
மீறுடற் கடுப்பி னாலு மென்பனி நனைத லாலும்
சீறிய கோபத் தாலு மலசலஞ் சிக்கை யாலும் (135)

சிக்கென வுண்டு பின்பு தெண்ணீரின் முழுக லாலும்
மிக்குநீர் பருகை யாலும் வெய்யிலில் நடக்கை யாலும்
தக்கசீ தளத்தி னுலுஞ் சமிக்குமுன் னுண்கை யாலும்
ஒக்கவுண் டோட லாலும் பசிக்குண வில்லா தாலும் (136)

இல்லாத மிடிமை தான்வந் தெய்திய கவலை யாலும்
பொல்லாத முள்ளு நெல்வா லுமிமயிர் புசிக்கை யாலும்
மெல்லமுன் பயின்ற நெய்பான் முழுக்கிவை விடுத லாலும்
வல்லவா கனங்க ளேறி வருந்துட லுலைவி னுலும் (137)

உலைவறு நீரை யண்ணுந் துண்டிடு தன்மை யாலும்
தலைதனிற் சுமையி னுலுந் தடியடி படுகை யாலும்
தொலைவிலாக் கனல்சேர் கானற் சுனையிடை முழுக லாலும்
இலகிய காதின் மூக்கி னீவண்டு போகை யாலும் (138)

போகலா மந்தத் தாலும் பொல்லாத லகிரி யாலும்
பாகமாய்ப் பகற்கா லத்திற் பசுவின்பா லுண்கை யாலும்
வேகமாங் காலை வெய்யில் மெய்படக் காய்த லாலும்
சோகமாங் காற்றி னுலும் பரிமளந் துய்க்கை யாலும (139)

துய்த்திடாப் போச னத்தைச் சுகம்பெறத் துய்க்கை யாலும்
மெய்த்தநல் வாசங் குன்றி மடிந்தபூ முகக்கை யாலும்
வைத்திடு நிதிகள் கெட்டு வருந்துறு கவலை யாலும்
பைத்தபூண் முலையாள் போகத்திடக்கை கீழ்ப் படுக்கா தாலும் (140)

படுசரு கூறலான தண்ணீரைப் பருக லாலும்
வடுமிகு தனக்கு மூத்த மாதரை மருவ லாலும்
விடுமல சலத்தை நாளும் விடாமலே யடக்க லாலும்
நெடுநாட்சா தித்த தொன்றை நீக்கிடு பயிற்சி யாலும் (141)

பயிற்சியாந் தயிலந் தேய்த்து நாட்படப் படித லாலும்
முயற்சியாய் முடியா தொன்றை முடித்திட முயற லாலும்
அயர்ச்சியாய்ப் பகற்கா லத்தி லதிகநித் திரையி னுலும்
உயர்ச்சியாந் தாயபூ லம்மிக் குண்டிடு பொல்லாங் காலும் (142)

பொல்லாத பாஷா ணத்தின் புகைகண்ணிற் படுத லாலும்
நல்லதன் மரபுக் கெய்தாத் தீமைநண் ணுகையி னுலும்
தொல்லையூழ் வினையின் சென்மத் தொடர்ச்சியாங் கன்மத் தாலும்
வெல்லரி தான கால பேதத்தின் விகற்பத் தாலும் (143)

விகற்பமில் லாமன் முன்னோர் விளம்பிய பிழைக டம்மால்
புகப்படு நோய்க ளெல்லாம் பொருந்திமெய் தோன்றும் போதில்

மிகப்படு வாத பித்த சேற்பன மொன்றின் மேவி
அகப்படு முள்ளாய்ப் பஞ்ச பூதியந் தனைய டுத்தே (144)

## வாதபித்த சிலேற்பனத்தின் குறிப்பு

பூதிய பேத மாகப் பொருந்திய வுடம்பி னுக்குள்
ஓதுநா டிகளுக் கெல்லா முறுதியாஞ் சூட்ச நாடி
வாதபித் தத்தோ டையம் வகுத்திடு மூன்ற தாகும்
ஆதியாஞ் சிவன்மால் வேதா வாமிவை நிறத்தைக் கேளே (145)

நிறமிகு சேற்பம் வெள்ளை நிறை பித்தஞ் சிவப்ப தாகும்
திறமிகு வாத நீல வன்னமாய்ச் செப்பும் வேதம்
குறைவில்வா தத்தின் வீடு குய்யத்தின் கீழ தாகும்
உறைவிடம் பித்தங் கண்ட முச்சியி லைய மாமே (146)

ஐயமாஞ் சிலேற்ப னந்தா னெலும்பினை யடுத்து நிற்கும்
துய்யதாம் பித்தந் தோலிற் றுவன்றியே கலந்து நிற்கும்
செய்யவா தந்தான் சோரி தன்னிலே செறிந்து நிற்கும்
பையர வல்குன் மானே பரிவினுங் கேட்டி டாயே (147)

கேட்டிடாய் வாதங் காற்றுக் கிளத்திடு பித்தந் தீயாம்
மூட்டிய சேற்ப னந்தா னீரென மொழிவர் மேலோர்
காட்டிய புளிப்பு வாதங் கைத்திடல் பித்த மாகும்
தீட்டுவேல் விழிநன் மாதே தித்திப்புச் சேற்ப மாமே (148)

தித்திக்கு மொழியாய் வாதஞ் சேர்ந்திடு முதயந் தன்னில்
பத்துநா ழிகையா மப்பாற் பகருச்சிக் காலம் பித்தம்
எந்திய பத்துக் கன்னல் மேவிடு மையம் பத்தாம்
நித்தமு மிராப்ப கற்கு நிற்குமித் தன்மை காணே (149)

தன்மையாம் வாத கால முப்பதாண் டளவுதானும்
மன்னிய பித்த காலம் வருடமுப் பத்து மூன்றும்
பன்னிய வைய முப்பத் தாறெனப் பகர்வ ராண்டு
வன்னமெய் யிணையிம் மூன்றும் மருவியே வளர்க்கு மாமே (150)

மருவிய வயது முப்பான் மட்டுமே வளர்க்கும் வாதம்
விரவிய வறுபான் மூன்று மட்டுமே பித்த மேவும்
உரியநூ றுண்டு மட்டு முடம்பினை வளர்க்குஞ் சேற்பம்
வருமிவை மூன்றுங் கூடி வளர்க்குமிப் படியா மென்னே (151)

படிதவிர் வாதந் தானும் பகரிடை கலைய தாகும்
நெடியதோர் பித்தந் தானே நிகழ்த்துபிங் கலைய தாகும்

கடியதோர் சிலேற்ப னந்தான் கவின்சுழு முனைய தாகும்
பிடிபட வறிந்து முன்னோர் பேசினர் பெண்மை யாளே (152)

பெண்மையிற் சிறந்த மென்சொற் பிடிநடை மானே கேளாய்
வண்ணமின் மலத்திற் கூடிக் கலப்பது வாத மாகும்
திண்ணிய சலத்திற் கூடிச் செறிவது பித்த மாகும்
கண்ணிய சுக்கி லத்திற் கலப்பது சேற்பந் தானே (153)

கலப்பதா முயிரில் வாதங் கடும்பித்த முடம்பி னிற்கும்
சலத்துறு மருவி தானு மையத்திற் சார்ந்து நிற்கும்
வலத்துய ரரைய ரைக்கால் வாதங்கால் பித்த மாகும்
பெலத்திடு மரைக்கா லையமென முன்னோர் பேசி னூரே (154)

## வாதபித்த சிலேற்பனத்தின் வந்திப்பு

முந்திய வானி யாடி முதியவா தங்கோ டிக்கும்
பிந்துமா வணிபு ரட்டை பித்தம்வந் திப்ப தாகும்
தொந்திக்கு மைய மாசி பங்குனி தோன்று மென்க
இந்தவா ருக மூன்று மதிகரித் தேறி நிற்கும் (155)

நிற்குஞ்சித் திரைக்குந் தைக்கு நீங்கியே சமிக்கு மையம்
சொற்றனு விடபத் துக்குஞ் சோர்ந்திடும் பித்த மென்க
ஐப்பசி கார்த்தி கைக்கே யடங்கியே சமிக்கும் வாதம்
விற்புரு வத்தி னூளே மிஞ்சாம லொடுங்குந் தானே (156)

ஒடுங்கிய கலையி ரண்டு சுழுமுனை யோடிம் மூன்றும்
அடக்கிடும் வாத பித்தத் தத்திசிங் நுவைகாந் தாரி
இடம்படு வைர வன்ரு னிசைந்தசங் கினிகு குத்தன்
மடங்கலம் புருட னேமும் வாய்த்திடுஞ் சேடந் தானே (157)

சேடம்வெம் பித்தம் வாதஞ் செப்பிய மூன்றி னுக்கும்
வீடதா முடம்பி னுள்ளே வியாதியு மிவையாற் றோன்றும்
ஆடிடு சித்தி யெல்லா மிம்மூன்றி னூலே யாகும்
நாடியின் குணங்க ளெல்லா நங்கையே நயந்து கேளே (158)

## அட்டதானப் பரீட்சை

நயமுறு வாக டத்தோர் கையினு டியைநன் னுவை
வியனுறு கண்ணை மெய்யை விளங்குவான் முகத்தைப் பல்லைக்
கயமுறு மலச லத்தைக் கருத்துறக் கண்டு நாளும்
பயனுறத் தெளிந்தில் வெட்டும் பார்த்திடல் பண்பு தானே (159)

## நாடி பார்க்கும் விதம்

பண்புறு மாடவர்க்கு வலக்கரம் பாவை மார்க்குக்
கண்பெறு மிடக்கை யாகுங் கதித்தவங் குட்ட மூலத்
தெண்பெற நெட்டி வாங்கி யேறநெற் கிடைவிட் டப்பால்
நண்புடன் விரல்கண் மூன்றி னடியின் ஞெருந்தம் பாரே (160)

### நாடி நடை

தொந்தமாம் பிராண வாயுச் சொல்லிய கலைக ளோடு
வந்துதான் சுழுனை தன்னை வளம்பெறச் சூழ்ந்து காரின்
முந்திய காது விம்மி முடிச்சுறு கரங்கா றன்னில்
அந்தமாய்த் தோன்றி நிற்கு மசைவினி னடி பாரே (161)

பார்முதல் விரற்கீழ் வாதம் பகர்நடு விரற்கீழ்ப் பித்தம்
ஆர்தரு நடுவி ரற்கீ ழடுத்திடுஞ் சேற்ப மாகும்
சேரவிம் மூன்றுங் கூடித் தெளிவுறப் பின்னி யோடில்
கூர்தருங் கொடிய சன்னிக் குணமெனக் குறிக்கலாமே (162)

குறித்தறியு நாடிகளின் பரீட்சை கேளுங்
குக்குடமோ ணன்மஞ்ஞை முயலே யன்னம்
மறித்திவைபோன் மெல்லநடந் திடுகில் வாதம்
வயங்காமை யட்டைபுருத் தாராவென்ன
வெறித்துமிடுக் காய்நடத்தல் போலாம் பித்தம்
விளங்குமிளங் கிளிமொழியே வேலிமீதில்
கொறித்துநடந் திடுங்குருவி தவளை நாகங்
கொக்குறக்கம் போலையங் குதிக்குந் தானே (163)

### தொந்திப்பு

குதிக்கின்ற நாடிகடா மொன்றோ டொன்று
கூடிநடந் திடிலதுவே தொந்த மாகும்
துதிக்கின்ற வாதமிரண் டொன்று பித்தஞ்
சுமைசுமப்போ னிடுப்பசைவின் றேற்றம் போலும்
விதிக்கின்ற பித்தமிரண் டொன்று வாதம்
விரவிநடந் திடிற்பாம்பின் பிணைதல் போலாம்
மதிக்கின்ற சேடமிரண் டொன்று வாதம்
வாலரணை முறிபோலத் துடிக்குந் தானே (164)

துடிப்பான சேடமிரண் டொன்று பித்தந்
தூங்குபிள்ளைத் தொட்டிலசைத் திடுதன் மானும்
கெடிப்பான பித்தமிரண் டொன்று சேற்பங்
கிளிமொழியே துடியடிபோற் கிளந்தே யோடும்

வடிப்பான வாதமிரண் டொன்று சேற்ப
மற்கடத்தின் பாய்ச்சலென மருவி யோடும்
பிடிப்பாக மூன்றுந்தா னேடு மாகிற்
பேனரணை வான்முறிபோற் றேய்ந்து போமே (165)

### நாக்கு

தேய்வான வாதரோ கிக்கு நாக்குச்
சிதறிவெடித் துப்பிசைந்து கறுத்துமுள்ளாம்
ஆய்வான பித்தரோ கிக்கு நாக்கங்
கடர்ந்துபச்சென் றேவரண்டு சிவந்து காணும்
மாய்வான சேற்பனரோ கிக்கு நாக்கு
வழுவழுத்து வெளுப்பாய்நீர் வந்தே யூறும்
தோய்வான தொந்தரோ கிக்கு நாக்கு
சொல்லில்வரண் டேதிமிர்த்துச் சூடுண் டாமே (166)

### கண்

சூடுபெறு வாதரோ கிக்கு நோக்குத்
துரிசாக நொந்துகறுத் தேநீர் சோரும்
பாடுபித்த ரோகிக்குக் கண்ணெ ரிந்து
பச்செனவே சிவந்திருக்குஞ் சேற்ப ரோகிக்
காடியகண் வட்டித்துப் பீளை சாறி
யதிகவெளுப் பாயிருக்குந் தொந்தத் தோர்க்கு
வாடிமிகக் கண்சிறுத்துக் கருமை வெண்மை
மஞ்சளுமா மெனவுரைத்தார் மறைவல் லோரே (167)

### உடல்

மறைகூறும் வாதரோ கிக்குத் தேகம்
வளர்ந்துகுளிர்ந் தேநோவா யுதறி நிற்கும்
திறைவான பித்தரோ கிக்கு மெய்தா
னிமிர்ந்துமிக வெதும்பியுட்ட ணித்துச் சூடாம்
குறையாத சேத்துமரோ கிக்கு மெய்தான்
குளிர்ந்துசயித் தியமாகி வேர்வுண் டாகும்
முறையான தொந்தரோ கிக்குத் தேகம்
மொழிந்திடிற்பல் பேதமாந்தொட்டுப் பாரே (168)

தொட்டிட்ட வாத ரோகிக்கு நாளுஞ்
சொல்லுகிற்றுன் மிகவுநிறங் கறுத்தி ருக்கும்
மட்டிட்ட பித்த ரோகிக்குத் தானே
மஞ்சணித்து நிறம்பசந்து சிவந்து காணும்

கெட்டிட்ட வையரோ கிக்கு மெத்தக்
　　கெழுமிவெளுத் துடல்வற்றித் திரைவு காணும்
நெட்டிட்ட தொந்தரோ கிக்குத் தானு
　　நிறம்வெள்ளை மஞ்சள்மிக்க கறுப்புண் டாமே (169)

## சிறுநீர்

கறுக்கின்ற வாதரோ கிக்கு நீர்தான்
　　காணவே மிகத்தெளிந்து வெண்மை யாகும்
மறுக்கின்ற பித்த ரோகிக்கு நீரு
　　மஞ்சணித்துச் சிவந்துசொற்ப மாயி ருக்கும்
செறுகின்ற சேற்பரோ கிக்கு நீருஞ்
　　சிவந்துவெளுப் பாய்நுரைத்துச் சிந்தி வீழும்
நிறுக்கின்ற தொந்தரோ கிக்கு நீர்தா
　　னிறஞ்சிவந்து வீழுமிது நிசம தாமே (170)

## மலம்

நிறமான மலம்வாத ரோகிக் குத்தா
　　னெருங்கிநுரைத் தேபுளியாய்க் கறுத்துக் காணும்
வசமான பித்தமல மஞ்ச ளாகி
　　வந்துசிவந் தேசிறுகக் கைப்ப தாகும்
கசமான ரோகிமலம் வெளுப்பாய் மெத்தக்
　　கனத்துமுறிந் தேயுப்பாய்ச் சீதம் வீழும்
துசமான தொந்தமலம் பலபே தத்தாய்ச்
　　சுறுக்கிட்டு வரண்டுமிகக் கொதியுண் டாமே (171)

## சத்தம்

கொதித்துவரும் வாதரோ கிக்குச் சத்தம்
　　குளறுமற் சமமாகத் திக்கிப் பேசும்
மதித்தபித்த ரோகிக்குச் சத்த மெத்த
　　வலுவாக வேயதிக சுறுக்காய்ப் பேசும்
சதித்தவைய ரோகியுடை சத்தந் தானுஞ்
　　சலிப்பாக வுள்ளனுங்கிக் கம்மிப் பேசும்
பதித்ததொந்த ரோகியுடை சத்தந் தானே
　　பலவாகத் தொனிக்குமெனப் பாடி னரே (172)

பாடியதா யுள்ளவிந்த வட்ட தானப்
　　பரீட்சைதனைத் தெளிவாகப் பார்த்துத் தேர்ந்து
கூடியதோர் நாடிகளின் வகைய தான
　　குறிகுணங்க ளனைத்தினையுங் குறித்துப் பாரு

நாடியது சன்னிக்கு மந்த மாகி
நடுங்கியே பெண்போல நடந்து மெல்ல
ஆடியபம் பரம்போலச் சுழன்று பின்னி
அரணைவான் முறிபோலக் குறைந்து போமே (173)

குறைந்துபோம் வாதத்தின் மந்த நாடி
கொடுமத யானையி னடையும் பந்தும்போ லாம்
நிறைந்தபித்த மந்தத்தி னுடி தானே
நீண்டவிலைப் புழுவேங்கை போலே பாயும்
உறைந்தவைய மந்தமா நாடிதீபத்
துற்றசுடர்க் கொழுந்தசைவி னேடி நிற்கும்
அறைந்திடுபோ சனத்தாலே மந்தம் பற்றி
யாகியநோ யெல்லாவந் தடுப்ப தாமே (174)

## விகாரநாடி கருப்பநாடி

அடுத்தவரால் வாளைமச்ச மெனப்பாய்ந் தேறி
யானையின் மும்மகம் போலவார்ப் பரித்துக்
கடுத்துநிமி டத்தில்விட்டு நிற்கு மாகிற்
காமவிகா ரங்கொண்டோர் நாடி யாகும்
எடுத்திடுபோ சனஞ்செய்தோர் நாடி யாமை
யியக்கம்போன் மெத்தனவா யிருக்கு மென்ப
விடுத்தபுழு வெறும்பதுபோன் மெல்ல வூர்ந்தான்
மெல்லியர்க்குக் கருப்பமென விளம்ப லாமே (175)

## பூப்பு நாடி

விளம்புகின்ற கின்னரத்தின் மெலிவ தாகி
மெள்ளவே நீரோட்ட மாயி ருக்கில்
இளம்பருவத் தன்ன நடை மயிலஞ் சாய
லேந்திழையார் பூப்பான நாடி யாகும்
உளம்பரிவாம் நீர்படிந்தோர் நாடி மெத்த
வுள்ளடங்கிப் புழுத்தெறித்தா லென்ன வோடும்
தளம்பிவழி நடந்தோர்க்குங் களைத்தோ ருக்குந்
தருச்சுற்றுங் கொடியெனவே சாற்ற லாமே (176)

## பூத நாடி

சாற்றுகல்லுத் தணையோங்கி யெறிதல் போலுஞ்
சக்கரஞ்செக் குச்சுற்றுந் தன்மை போலும்
ஊற்றமுறுங் குதிரைகடாப் பாய்தல் போலு
மோங்கியடித் திடவெழும்பும் பந்தைப் போலும்

ஆற்றலுட னுயர்ந்தேறிக் குதித்தல் போலு
மடங்காமற் படபடெனப் பித்த மோடின்
மாற்றவரி தாம்பூத நாடி யென்றே
வாகட ரெல்லா முரைத்தார் வையமீதே (177)

## மரண நாடி

வையமிகு வாதமெனு நாடி தானே
வளைந்துமடங் கிப்பருத்தால் வாதை யுண்டாம்
செய்யபித்த நாடியது புரண்டு விம்மிச்
சிலும்பியே திரண்டிடுகிற் சேரு நோய்கள்
ஐயமா கியநாடி தனித்தே யோங்கி
யசைந்திடுகிற் பலநோய்வந் தடுப்ப தாகும்
பையவே தொந்தமா நாடி பின்னிப்
பதறிடுகின் மரணமெனப் பறைய லாமே (178)

பறையக்கேள் வாதமது முன்னும் பின்னும்
பாய்ந்துவளைந் தோடிலெட்டு நாளிற் சாவாம்
நிறைபெற்ற கயிற்றூசல் வீச்சுப் போல
நின்றோடிற் பக்கமொன்றில் விறைத்தே யோடில்
குறைவுற்ற நாண்மூன்றின் மரண மாகுங்
குதிரைப்பாய்ச் சலைப்போலக் குமிறி யோடில்
மறைவுற்றே நாளிரண்டின் மரண மாகு
மயிர்ப்பேன்போ லோடிலுடன் மரிப்ப தாமே (179)

மரித்திடவே வரும்பித்த நாடி பாம்பு
வளைந்தோடல் போனிற்கிற் பக்க மொன்றும்
தெரித்திடுதேள் கொடுக்கானேற் றிங்க ளொன்றிற்
றீண்டுசுடர்க் கொழுந்தென்னி ளுண்மூன் றுகும்
பெருத்துமிகப் படபடத்தா லெட்டு நாளிற்
பிசகில்லை யரணைவாற் றுடிப்போர் நாளாம்
அரித்திடுநீர் தவளையெனக் குதிக்கு மாகி
லாறுநாட் செல்லமுன்னே மரணந் தானே (180)

மரணந்தா னுகுமைய நாடி தானே
வயங்குதுடி யடிபோல நிற்கு மாகில்
விரணமதாய் நாளெட்டின் மரண மாகு
மிகவுமுயல் போனிற்கி லொருநா ளாகும்
தரணமதாய்ப் பேன்போல வோடி நிற்கிற்
சருப்பத்தின் பிணைச்சலெனிற் சாவோர் நாளாம்
அரணைவாற் றுடிப்பாக வோடு மாகி
லைஞ்சுநா ழிகைதனிலே சாவுண் டாமே (181)

சாவுண்டாம் வாதந்தா னொளொன் றேடிற்
றப்பாமன் மூவாண்டின் மரண மாகும்
ஆவதிரு நாளோடி லாண்டி ரண்டா
மடுத்துநாண் மூன்றேடி லாண்டொன் ருகும்
போவதிது வெனவாறன் மறைநூல் வல்ல
புண்ணியர்க ளுரைத்தபடி புகன்றேன் யானும்
வாவுபிடி யனநடையு மிடையா மின்னும்
வயங்குபெண்ணே மரணத்தின் வகையி தாமே (182)

வகையாகும் பித்தமது நாளொன் றேடின்
மறலிநகர் தனிலாறு மதியிற் செல்லும்
பகையாக நாளிரண்டு தானே யோடிற்
பதிவிட்டு மும்மதியிற் சாவுண் டாகும்
தொகையாக மூன்றுநாட் படப டத்துத்
தொடர்ந்தோடி னுறைப்த் தைந்திற் சோரும்
மிகையாகப் பித்தமிந்தப் படியே நின்ருல்
விரைவாக நமனுலகின் மேவு வாரே (183)

மேவுசிலேற் பனநாடி நாண்மூன் றுக்கு
மீளாம லோடிலைந்து நாளிற் சாவாம்
வாவியே நாளிரண்டுக் கோடு மாகின்
மரணமது வந்தெய்தும் பத்து நாளில்
பாவியொரு நாண்முழுது மோடு கிற்ருன்
பதினைந்தா நாண்மரணம் வந்து சேரும்
கூவியநா ழிகைமுப்ப தோடு மாகிற்
கூற்றுவனூர் நாளெட்டிற் கிட்டு வாரே (184)

கிட்டியே கைபிடித்துப் பார்க்கும் போது
கிளர்ந்தெழுந்த நாடிகடாந் தொங்கித் தொங்கி
அட்டமதாய்ப் பதறியெழுந் தோடு மாகி
ஐயமில்லைக் காலனூர் நணுகிச் செல்லும்
தொட்டதுதான் மேலெழுந்து விரைந்து கீழாய்த்
துரிதமிட்டுச் சுழன்றுதா னிற்கு மாகில்
எட்டுநாட் செல்லுமுன்னே யுயிர்விட் டேகு
மேந்திழையே நாடிகளி னியக்க மீதே (185)

இயம்பியதோர் வாதமா நாடி தானு
மெழும்பியே பித்தத்தின் வீட்டைச் சேர
மயங்குபித்த நாடியது மெல்லச் சென்று
மன்னுசிலேற் பனவீட்டை மருவிச் சாரத்

தியங்குசிலேற் பனநாடி தனது வீட்டைச்
சேரவிட்டுக் கண்டமதிற் செல்லு மாகில்
வயங்குசெம்பொற் குடமனைய முலேமின் னுளே
மறலியூர் தனிற்சென்று வசிப்பர் தாமே (186)

## நாடி நிதானிக்கக்கூடாதோர்

வசியாம லோடியிளேத் திட்ட பேர்க்கும்
வாகனமா திகளேறி மெலிந்து ளோர்க்கும்
பசியாக நெடுநேர மிருந்த பேர்க்கும்
பலநாளும் வியாதியினி லழுந்தி னோர்க்கும்
நசையுண்ட வுடனெண்ணெய் முழுகி னோர்க்கு
நன்னயமாய்க் கீதங்கள் பாடி னோர்க்கும்
கசிவான மழைநீரின் முழுகி னோர்க்குங்
கடிதான வேலேசெய்து களேகொண் டோர்க்கும் (187)

களேயாத கூத்துவிளே யாடி னோர்க்குங்
கன்னியரைக் கூடியின்பங் களித்து ளோர்க்கும்
இழிவான பழிக்கஞ்சி யேங்கி னோர்க்கு
மிரவுசய னத்தினிலே துயில்செய் வோர்க்கும்
ஒழியாத பேதிகண்டு கழிந்திட் டோர்க்கு
முயர்ந்துகுதித் திட்டறிவு மயங்கி னோர்க்கும்
அழிவான மரணந்தான் கிட்டி னோர்க்கு
மறிந்திடுவாய் நாடிசம னுகு மன்றே (188)

## மூன்று நாடிகளின் பேதம்

சமனுக வாதபித்த நேராய் நிற்கிற்
றங்கியநோ யெட்டுநா டன்னின் மீளும்
கமனுக மீறியே பதறி யோடிற்
கனத்தநோய் வருமெனவே கண்டு கொள்வாய்
எமனுக வையமுடன் வாத மீறி
னீரைந்து நாழிகையி லிடரே செய்யும்
திமனுகப் பித்தமது பிசகா தோடிற்
றீங்கில்லே நெடுநாளிற் றீருந் தானே (189)

தானென்ற பித்தமுட னேயங் கூடிச்
சமனுக நடந்திடுகி னேய்க டேரும்
தோணவே நாகம்போற் றத்து மாகிற்
சுறுக்காகத் தீராது தொந்த மாகும்
பேணவே மதயானே போலே நிற்கிற்
பிடிப்புடனே பலநோய்க ளடுப்ப தாகும்

நாணவே சிறுத்தடங்கி யூரு மாகி
ஞளொன்றின் மரணமென நாடு வாயே (190)

நாடுவாய் பித்தமது கொதித்துப் பாய்ந்து
நற்றவளே போனிற்கிற் பயித்திய மாகும்
வாடியே புரண்டுமயில் போலே யோடில்
வந்தபிணி விரைவாக மாறு மென்க
கூடியே திரண்டுநெடுத் தோடு மாகிற்
கொடியசுரம் வந்துமிகக் கோட்டி செய்யும்
ஆடியே மெல்லவசைந் தோடு மாகி
வடங்கிவிடுஞ் சணத்தில்வந்த பிணிக ளாமே (191)

பிணியான சிலேற்பனந்தா னன்னம் போலே
பிசகிநடந் திடுகினேய் பிலனய் நிற்கும்
துணிவான காகம்போற் றத்து மாகிற்
சுகமில்லை யத்திதனிற் சூடுண் டாகும்
தணிவாக வட்டையைப்போ லூரு மாகிற்
றரிப்பில்லை யமனுலகிற் சார்வ தாகும்
அணியான சிலேற்பனத்தின் கொள்கை யீதென்
றறிந்திடுவாய் வாகடநூ லடக்க மென்றே (192)

அடங்கியே வாதந்தான் பதறு மாகி
லதிகமாய்ப் பழமலஞ்சிக் காகு மென்க
துடங்கியெழுந் தேநிற்கின் மந்த மாகிச்
சுரத்துடனே தீன்மறந்து சுகமின் றாகும்
மடங்கியே மெல்லவசைந் தோடு மாகில்
வயிற்றெரிப்புப் பலவிதனம் வந்து சேரும்
நடுங்கிவிறைத் தேநெடிதாய் நிற்கு மாகி
ஞண்மூன்றிற் சன்னிவந்து கூடுந் தானே (193)

கூடியே வாதங்கோ பித்தான் மந்தங்
கொண்டெழுந்து வாயுதனிற் குமிறி நிற்கும்
ஓடியே புழுப்போல வோடு மாகி
லுண்மூச்சுப் பிசத்தலிவை தோட மாகும்
வாடியே ம்டங்கிவிர லுள்ளாய் நிற்கில்
வாயுவுடன் சுரமடுத்து வருவ தாகும்
நாடிதான் பாய்ந்துபுழுப் போல நின்று
னங்கைவயிற் றினிற்கருப்ப மாமென் றேதே (194)

ஓதியவிட் டில்லைப்போல வாத நின்று
லுற்றகருப் பம்மூன்று மாத மாகும்

பேதியாத் திங்களது பத்து மட்டும்
பெலக்காம லுட்பதுங்கி மெல்லப் பாயும்
மோதிவெடித் துச்சிதறி வாத மோதின்
முந்துசுரோ ணிதமடவார் வயிற்றிற் றங்கி
வேதனைசெய் தேயிடுபபு வலித்து மாத
விடையதனை மறித்துமிகக் குத்துண் டாமே (195)

குத்தியெழுந் தேபாயுங் குதிரை போலக்
கோபித்து வாதமது குமிறி நிற்கின்
நித்தியமாய்க் குதிரைவலி மூன்று நாளி
னேரிட்டு வந்துபொல்லா வருத்தஞ் செய்யும்
சத்தியமாய் நாண்மூன்றுக் குள்ளே கொல்லுந்
தலையிரிற் பேன்போலத் தணித்தே யோடின்
மெத்துநா ளில்லையிரு கடிகை தன்னுள்
விட்டுயிரை யமனுலகில் விரைந்து போமே (196)

விரைவாகப் பித்தந்தான் பெலத்தே யோடில்
மிகமூளை தானுருகி வரட்சி காணும்
திரைவாகப் புலிபோலச் சீறி நிற்கிற்
சிரசு தனிற் கிறுகிறுப்பாய் வற்றுந் தேகம்
வரைவாக மந்தித்து நிற்கு மாகில்
வன்சுரமாய் மண்டைதனிற் குத்துண் டாகும்
நிரையாக விலைப்புழுப்போ னிற்கு மாகி
னீங்காத பிரமேக நெடிதுண் டாமே (197)

நெடிதான பிரமேகம் வரட்சி சூடு
நீர்க்கடுப்போ டனல்வெக்கை நெருங்கி நிற்கும்
கொடிதான பித்தமது மடங்கி யோடிற்
கூக்குரலாய்ப் பிதற்றிக்கை கொட்டி யாடிக்
கடிதான பயித்தியந்தான் வந்து சேருங்
கனத்தபித்த மதுதிரண்டு நெடுத்தே யோடில்
வடிவான மெய்வெதுப்பு மெலிவு நாளும்
வந்துமிக நலிவுசெய்யு மங்கை யாளே (198)

மங்கையே சிலேற்பனமா நாடி யோங்கி
வலுவாக வேதனித்து நிற்கு மாகில்
தங்கியே யிருமலிழைப் புடனே விக்க
ருன்சேரு மிறுகியே தடித்து நின்றல்
தொங்கியே மூச்சுழை பொல்லாக் காசஞ்
சுருங்கியே சழிவரண்டு பலவுங் காட்டும்

சிங்கியே திரண்டோடிற் பீனி சங்கள்
சிரநோய்நீர்ப் பாய்ச்சலிவை வருவ தாமே (199)

வருவதுதான் சிலேற்பனத்திற் பலதொந் தங்கள்
வந்தாலு மாருது மடிவே செய்யும்
வெருவுறுமச் சிலேற்பன ந்தான் கடின மெத்த
விதியதுவே யென்னமறை விரித்துப் பேசும்
பெருவாதை தீரவென்ருற் றன்ம தானம்
பேணியே சிவபூசை குருவின் பூசை
ஒருவாத கன்மத்தை நிவர்த்தி பண்ணி
யுற்றதவ விரதங்க வொருங்கு செய்யே (200)

## வாதத்தாலுண்டாகும் நோய்கள்

செய்யவே வாதத்தால் வருநோய் சொல்வேன்
சிக்கிமல சலங்கடுத்த லூதல் குத்தல்
நையவே கண்கறுத்துக் கண்ணீர் வீழ்ந்து
நாச்சிதறி வெடித்துவாய் திக்கிப் பேசல்
மெய்தடித்து மிகநோதல் பொருமல் கொள்ளல்
விந்துவலி தான்குறைந்து மந்த மாதல்
பையவே குளிர்ந்திருத்த லான வெல்லாம்
பலவாகக் கண்டறிந்து சிந்திப் பாயே (201)

## பித்தத்தாலுண்டாகும் நோய்கள்

சிந்திப்பாய் பித்தத்தால் வருநோ யைக்கேள்
தேகமெலாம் வெச்சென்று சிரசிற் சூடாய்ச்
சந்திப்பாய் நாக்குப்பல் வரண்டு கைத்துத்
தலைசுழன்று கண்ணெரிந்து தாகஞ் செய்யும்
தொந்திப்பாய்க் குழறிமிகப் பிதற்றிப் பேசுஞ்
சோருமல சலஞ்சிவந்து மஞ்ச ணிக்கும்
வந்திப்பாய்ச் சத்திசெய்து துயிலா தூணு
மறந்துதிரிந் திடும்பித்தச் செயலீ தாமே (202)

## சிலேற்பனத்தா லுண்டாகும் நோய்கள்

செயலான சேற்பனத்தி னேயைக் கேளுஞ்
செப்புடம்பு நாக்குப்பல் வெளுத்துக் காட்டும்
இயலான வாயினிக்கும் வேர்வை யுண்டா
மிருமல்விக்கல் கக்கல்தொய்வு மூச்சு முண்டாம்
மயலான மிடறுதனைக் கம்மிப் பேசும்
வாயூறி வழுவழுக்கு மலச லாதி

மயில்வாக வெளுத்துநுரைத் துடனே வீழும்
பரீட்சிப்பாய் சேற்பனத்தின் பாங்கைத் தானே (203)

## வாதம் மீறிஞல் குணம்

பாங்காக வாதந்தான் மீறு மாகிற்
பருவயிறு சுவாதமுடன் குக்துக் கோழை
நீங்காத பிடிப்புளைவு வாயு தொந்தம்
நீர்வெடித்துப் பாய்தல்மந்தம் விடமிப் பாதல்
தூங்குசன்னி வாதசுர மதனிற் தோடந்
தொகுத்தகிரா ணிக்கழிச்ச லுதர தோடம்
வாங்குபல வலிகுளிர்ச்சி குன்ம வாத
மலசலங்கட் டிடல்வாத வந்திப் பாமே (204)

## பித்தம் மீறிஞல் குணம்

வந்தித்த பித்தமதி கரித்து நின்ருல்
வாயுவுடன் வெப்பிரத்த ரோகஞ் சூலை
தொந்தித்த குன்மமுடன் குடனேப் மிக்க
துயர்புரி மூளையிற்சூடு சிரவ ரட்சி
நிந்தித்துப் பேசிடுத லாடல் பாடல்
நித்திரையற் றுப்பயந்து கோபங் கொள்ளல்
சந்தித்த காமாலை பலவும் பித்தஞ்
சாதிக்கு மதிவதனத் தைய லானே (205)

## சிலேற்பனம் மீறிஞல் குணம்

தையலே சிலேற்பனந்தான் மீறி நின்ருற்
சத்திவிக்க லிளைப்பிருமல் சயமே யாவி
உய்யலிலா வுளைமாந்தை வரட்சி வெப்போ
டுண்மூச்சுத் தொய்வுமுட்டுக் கம்மிப் பேசல்
பையவுடன் மெலிந்தசனஞ் சிறுத்துக் காட்டல்
பலகாலும் வேர்வைகொளல் நெஞ்ச டைத்தல்
நையமிக வெலும்புதனைப் பற்றி நாளு
நலமிலாப் பலபிணிக ணண்ணும் பாரே (206)

## தொந்தத்தின் குணம்

### வாதபித்தத் தொந்தம்

நண்ணுகின்ற வாதமிரண் டொன்று பித்த
நலமாகத் தொந்தித்தாற் றலைக னத்துத்
திண்ணமதா யுடம்பெங்கும் குத்தி நோவாஞ்
செமியாமல் வயிறூதிப் பொருமிக் கொள்ளும்

கண்ணதனிற் றுயிலுண்டாய்த் தலைநீர் கொண்டு
காலகைபொருத் துகள் மிகவு முளைவுண் டாகி
ஒண்ணு நலார் போகத்தில் விருப்ப மாகு
முண்மையிது வெனவாராய்ந் துறுதி காணே (207)

## பித்தவாத தொந்தம்

உறுதியாம் பித்தமிரண் டொன்று வாத
மோடியே தொந்திக்கிற் பிடரி நொந்து
வெறிதாகச் சிரம்வரண்டு குத்துண் டாகி
விழிகளிரண் டும்பருக்கக் கெரிப்ப தாகும்
வறிதாகச் செவியிரைந்து விறைத்து நொந்து
வலியவுடம் பெங்குமே தினவுண் டாகும்
அறிவாயிக் குணம்பித்த வாத மென்றே
யதிமதுரச் செழுங்கனிவா யழகார் மானே (208)

## சிலேற்பனவாத தொந்தம்

அழகான சேற்பமிரண் டொன்று வாத
மடுத்திடுகி லதிகமாய்ப் பசியுண் டாகும்
விழைவாகப் விளைப்பதுவு மதிக முண்டாம்
மெய்யெங்கு மசமசப்பாய்த் தினவு காணும்
குழைவாக நீர்த்தாகந் தானுண் டாகுங்
கூறியநா வழுவழுத்துக் குரலுங் கம்மும்
தழைவான மிடறுபுகைந் திருக்கு மாகிற்
சார்ந்திடுசேற் பனவாதங் கண்டி டாயே (209)

## சிலேற்பனப் பித்த தொந்தம்

கண்டிடுவாய் சேற்பமிரண் டொன்று பித்தங்
கலந்தோடிற் சிரமதிகங் கனத்து நோவாம்
உண்டவச னங்களெலாஞ் செரியா தாகு
முற்றுவிழி மூக்குகளாற் றண்ணீர் பாயும்
மண்டியெழுஞ் சன்னிதோ டங்கள் கூடும்
வாய்கனக்கு முடன்முழுதுங் குளிரே காணும்
வண்டுளக்கி மதுவுண்ணுங் கருமென் கூந்தன்
மடமானே சேற்பபித்த மதித்தி டாயே (210)

## பித்த சிலேற்பனத் தொந்தம்

மதிக்கவரும் பித்தமிரண் டொன்று சேற்பம்
வந்திடுகி ணுக்குமிக மதர்த்தி ருக்கும்
கதித்துவயி றதுவலிக்கு நோவுண் டாகுங்
கடுப்பாகி நீர்சிறுத்துச் சிவந்து வீழும்

கொதித்துமிக நெஞ்செரித்து வாய்கைப் பாகிக்
கொள்ளாது தீவனந்தான் புளித்தேப் புண்டாம்
உதிக்குமதி யணையமுக யடமின் ஞளே
யோதுபித்த சேற்பமென வுரைத்திட் டாரே (211)

## வாதசிலேற்பனத் தொந்தம்

உரைத்திடவே வாதமிரண் டொன்று சேற்ப
முற்றமுறை தான்கூடி நிற்கு மானல்
நிரைத்தமயிர்க் கூர்ச்சாகி மெய் குளிர்ந்து
நீர்த்தாக மிகவுண்டாய்ச் சோம்ப லாகித்
திரைத்தவயி றதுநொந்து மந்த மாகிச்
சிக்கியே நுரைத்துமலங் கழிந்து வீழும்
அரைத்தபரி மளச்சாந்த முலைமின் ஞளே
வாதசேற் பனகுணமென் றறிந்தி டாயே (212)

## திரிதோடத் தொந்தம்

அறிந்திடுவாய் நாடியிவை மூன்றுங் கூடி
லச்சமாய்க் கண்டுங்கு மறிவு கேடாய்ச்
செறிந்தவுடம் புள்ளழன்று வேர்வை காணுஞ்
சிலீரிட்டுச் சூடாகித் தாக முண்டாம்
மறிந்திடுகால் கைவிறைக்குங் காத டைக்கும்
வலுத்தசுரந் தோடமதாய்ச் சன்னி தோன்றும்
பிறிந்திடா திக்குணங்கள் பலவு முண்டாய்ப்
பேதமுறும் பலதோடம் பேணிப் பாரே (213)

## வாதவுடம்பின் குணம்

பேணுத காரியத்தின் மிகவி சாரம்
பெருக்கிநிற்றல் பேசாது பேசல் நாளும்
நாணுது பொய்யதனை மெய்ய தாக
நவின்றிடுத றீயதனி ஞட்டம் வைத்தல்
கோணுது களுவதனின் மெய்வ ருந்தல்
குளிர்க்குடைதல் கூசிமனஞ் சலிப்புக் கொள்ளல்
தூணுக வேயுடம்பு பொருமிக் காட்ட
ரேகையே வாதவுடற் சொயமி தாமே (214)

## பித்தவுடம்பின் குணம்

சொயமாக மெய்ம்மெலிதன் மலந்தான் சிக்கல்
சொல்லுமுறை மெத்தெனவா யினிமை யாதல்
நயமாகிப் பெண்களுடன் மகிழ்ச்சி கொள்ள
ஞடியே கருமத்திற் கூர்மை கொள்ளல்

வயமான விளமைதனின் மயிர் நரைத்தல்
வலியவுடல் சூடாகி வெச்சென் றிட்டல்
பயனான பலகலைகண் மிகப்பா ராட்டல்
பயித்தியமா முடம்புடைய பாக மீதே (215)

## சேற்பனவுடம்பின் குணம்

பாகமா முடம்பிறுகன் மலந்தான் சிக்கல்
பலபுகழ்பா ராட்டல்கனுப் பரிந்து காணல்
போகமா னதைவெறுத்தல் பொறுமை யாதல்
பொய்களவா திகணீத்தல் புலவோர்ப் போற்றல்
தாகமாய்ப் போசனத்தி லாசை வைத்தல்
தலைமயிர்நீண் டிடலறிவு தன்னைக் கூடல்
யோகமாய்த் திருமடந்தை யருளைச் சார்ந்த
லுற்றசிலேற் பனவுடம்பின் மிகுதி காணே (216)

## மேற்கூறியகுணங்கள் மாறுபட்டுத் தோன்றுதற்குக் காரணம்

மிகுதியா மிக்குணங்கள் குறைந்துங் கூடி
மேற்பட்டுத் தானிருக்கும் விதங்க ளெல்லாம்
பகுதியாங் காலத்தின் பேதத் தாலும்
பகரிளமை மூப்பான பருவத் தாலும்
புகுதியா மனக்கனப்புச் சலிப்பி னாலும்
பொருந்தியதோர் நாடி குணம் பேத மாகும்
தகுதியா மாந்தருடை மரணக் கூற்றின்
தன்மையினை யுரைக்குமுறை தனைத்தே ராயே (217)

## மரணக்குறி

தேராயிரு கண்கள் சுழன்றுமிகத்
தெளிவின்றி யுடம்பு வரண்டுவர்வாய்க்
கூராகிய மூக்கு மலர்ந்துசுழிக்
கொண்டேவிடு நீள்பெரு மூச்சுடனே
பேராதிரு கால்கை யெடுத்தெறியும்
பெருகச்சுழி நெஞ்சினி னின்றிறுகும்
தீராத விளைப்பொடு முட்டுமிகுந்
தெளிவாயிது தான்வதை செய்திடுமே (218)

வதையாகவுண் மூச்சு மிகப்பொருமி
வசனிக்கவி டாதுசெவ் வாய்குளறி
விதையாகிய ரண்டு முளேசொருகி
மிகநெஞ்சு வரண்டு நரம்புமெழீஇப்

பதையாமெய் யயர்ந்து தணீர்பருகிப்
பஞ்சிட்டிரு கண்களும் வாய்கருகித்
ததையாதுகை கொண்டு முகந்தடவுந்
தடையின்றி யிறப்பது மெய்மயிலே (219)

மயினேரியல் சாயன் மடக்கொடியே
மையத்திரு கண்க ளுறச்சொருகி
இயல்பாக மயங்கி யெழுந்து விழுந்
தெழுவார்பிடி யென்ன மதர்ப்பதுவாய்த்
துயிலாதிரு காது மடைத்துமுகஞ்
சோம்பாயிரு நாசியி னீர்சொரியும்
பயிலாதுக முத்தடி வேர்வைகொளும்
பண்ணுங்குண மாவி பறந்திடுமே (220)

ஆவிக்கிட மாகு முடம்புதனில்
லங்கைவிழி மூக்கிரு காதுநகம்
மேவுச்சியண் ணுக்குட னுந்தியுமே
வெளுப்பாயுளங் காலு மிருந்திடுகின்
நாவுக்கினி தாயமர் வாணியுட
னளினத்தினி ருந்தரு ணுலுமகத்
தேவுற்றெதிர் வந்து விலக்கிடினுந்
தென்பாவிய மன்பதி சேர்ந்திடுமே (221)

சேரும்விழி மேலுற வேசொருகிச்
சேடத்தொடு மூச்சுமுள் விக்கலுமாய்ச்
சோருஞ்சட மெங்கு நடுக்கமுறுஞ்
சொல்லும்வச னங்கண் மிகத்தவறும்
வாருஞ்சல மிக்கு மலங்கருகி
வாய்பல்லு வரண்டு கறுத்துலர்வாம்
கூரும்மிரு கைகொடு கும்பிடுகிற்
கூற்றுனவ னூர்குடி யேறிடுமே (222)

ஏறுங்கரமோ டிருகா லுதறி
யெய்ப்பாகியுண் மூச்சி வரட்சியதாய்
மீறும்விழி பஞ்சடை வாயிருமி
மிகவுந்துயிலற் றுணர்வுங் குறைவாய்ச்
சீறுஞ்சழி கண்டம துற்றுறையுஞ்
சேரத்தடு மாறிய டிக்கடியே
காறும்முணர் வற்று மயங்கிடுமேற்
காலற்கிரை யென்று கரைந்தனரே (223)

கரைவாயிரு கண்களி னீர்சொரியிற்
கைநாசியில் வைத்து முகந்தடவில்
விரைவாய்வச னித்தல் பிதற்றலுடன்
வெறிக்கத்திசை யெங்கும் விழித்திடுகில்
தரைமீது படாம னிலந்தடவிற்
றரியாது திடுக்கிடி லேங்கியெழில்
திரையாமென வெங்கு முழத்திடுகிற்
செகமீதி னிராது சிதைந்திடுமே (224)

சிதைவாகிய வுந்தி மிகப்பொருமித்
தெளிவற்றிரு கால்கை பதைத்திடுகில்
மதியுந்தி நரம்பு தெரிந்திடுகின்
மார்பிற்புடை கொண்டு பருத்திடுகில்
பதிவாகிய வன்னம் வெறுத்திடுகிற்
பலகாலுமுண் மூச்சு மடங்கிவரில்
அதிதாகிய மாயவ னூர்வரினும்
மவராவியி னீங்குவ ரம்புவியே (225)

அம்முஞ்சிறி தேனு மலஞ்சலமற்
றச்சம் பெரிதாகி மயக்கமுமாய்ச்
செம்முங்கணி ரண்டினு நீர்சொரியுஞ்
செல்லாதச னங்கள் சிறுத்துவரும்
கொம்மென்றிட நெஞ்சை யடைத்திறுகிக்
குத்தோடிரு மிச்சழி கக்கியிடில்
இம்மென்றிட முன்ன மிறந்துவிடும்
மிழைபோலிழை மென்சொ லிளங்கிளியே (226)

கிளியேயுறு நாக்குண் மதர்த்திருமிக்
கிளரும்விழி பொங்கி முகங்கருகித்
தெளிவாயுரை யாமன் மிகத்துயராய்த்
திக்கென்றிட நெஞ்சுடல் தானுளைவாய்ச்
சளிதீர வரண்டுகை காலதுவுஞ்
சரியாக விருக்க விடாதுடலும்
நெளியாவிரு கண்கள் சிவந்திடுகின்
னிலையாயுயிர் நிற்பது தானரிதே (227)

அரிதாக வெழும்பி விழும்பலகா
லடரும்புரு வங்க ளழித்திருகண்
பெரிதாக நிறங்கரு கிக்குழியும்
பேசாதுகி டந்து மிகக்கழியும்

புரிவாகிய நீர்தனில் வேட்கையுறும்
 புவியிற்கிட வாது புரண்டுருளும்
பரிவாக வுடம்பு மதர்ப்புறுமேற்
 பதறிக்கெடு மாவி பசுங்கொடியே (228)

கொடிநேரிடை கேண்மல மானதுவுங்
 குமிறிப்பல வாக மிகக்கழியும்
அடியோடுகை மெல்ல நடுக்கமுமா
 யதிரும்படி நொந்து மயக்கமுடன்
இடிபோன்மிக நெஞ்சு வரண்டுவரும்
 மெதிரேவரின் மேற்படு கோபமுடன்
குடியாமன் மருந்துகள் வாந்தியுறிற்
 கொல்லும் மரணக்குறி யோர்கணமே (229)

கணமாகும பான மறக்கொதியாய்க்
 கருகிக்கழி யும்மல முஞ்சலமும்
நிணமானது சீத முடன்கழியுந்
 நெடிதாமிடை வற்றி யொடுங்கிவிடும்
இணையாமிரு கால்கை தளர்ந்துவரும்
 மென்புந்தசை மேலெழ வேறிமிரும்
பணமேநிக ரல்குன் மடக்கொடியே
 பகரிக்குண மாவி படுந்திடனே (230)

திடமாகிய கால்கை புறம்வலியாய்ச்
 செவிரண்டு மிரைச்சல் குரைச்சலுடன்
விடமேயென மெய்யில் வருத்தமுறும்
 மிகநாவும் வரண்டுட லுங்கனமாய்த்
தொடுமார்பு குளிர்ந்துமெய் தோறசையுந்
 துடித்தேவிழி சோர்ந்து சிறுத்திடுகிற்
கடன்மேற்றுயில் மாயவ ஞர்வரினுங்
 காலன்பதி யேகி விடுங்கடிதே (231)

கடிதாயிரு காலொடு கையுதறிக்
 கழறும்மொழி தானு மிகக்குழறி
நெடிதாகிய மூச்சு வரட்சியுட
 னெஞ்சங்க மழன்று முகங்கருகிக்
கொடிதாகிய சத்தி குணுக்கமுடன்
 கொட்டாவியு டன்பல் கறுத்துவரும்
வடிவெங்கணும் வேர்வை மிகப்பொசியும்
 மரணக்குறியென் றறிவர் பிளமாமயிலே (232)

வாயாறுரை கக்குதல் விக்கலுறல்
வயிறுப்பி மலங்கழி வெய்திடுதல்
பேயாமென வேபல கோட்டியுறல்
பெருகக்கண் மலர்ந்து விழித்திடுதல்
ஓயாதுபி தற்றுதல் நெஞ்சுவரண்
டுண்மூச்சொடு கால்கை துடித்தல்
நீயேயறி யிக்குண மானவெலாந்
நிலையற்றுயிர் பற்றற நீங்கிடுமே (233)

நீங்காது குளிர்ந்துடல் வேர்வையதாய்
நெடுமூச்சுட னீர்மிகு தாகமதாய்
வேங்காடென மெய்கரு கித்திறமாய்
மிகவுஞ்சளி கண்டம துற்றிருமிப்
பாங்காகிய கண்கள் கலங்கிமுகம்
பச்சென்று பதைத்து வருந்திடுமேல்
போங்காலமி தென்ன வறிந்திடுவாய்
புவனத்திலி ருப்பிலை போமுயிரே (234)

உயிர்த்தேமிக நெட்டுடல் வற்றியுலர்ந்
துதிரத்தொடு நாரியும் வீக்கமுறீச்
செயிர்த்தேவிழி வாந்தி கழிச்சலுமாய்ச்
செப்பும்வச னங்களு முட்டுளதாய்
மயிர்ப்பேன் றலைநின்று வழிந்துவரு
மாருதிது வேமர ணக்குறிதான்
குயிற்பேடையை யொத்த மொழிந்திருவே
கூறுங்குண மிங்கிவை கொன்றிடுமே (235)

## வைத்தியனியல்பு

கொன்றிடுங் குறியி னோடு நாடியின் குணமு மெய்யில்
நின்றிடும் பூத மாதி தத்துவ நிலைமை தானும்
அன்றியு நோயின் பேத மனைத்தையுந் தெளிந்த றிந்த
வென்றிசேர் வயித்தி யன்றன் முறைபுரி விதியைக் கேளே (236)

விதிமுறை யாக சித்தமா மறையின் றன்மை யெல்லாம்
மதியுறு குருமுன் பாக மரபினிற் படித்தோ னாகி
அதிகமாய்க் குருவைத் தேவை யன்பொடு வணங்கு வோனாய்த்
துதிபுரிந் தெவரும் போற்றுந் தூயநற் குணமுள் ளோனாய் (237)

தூயநற் செய்கை யுள்ளான் சொலுமனத் திண்மை யுள்ளான்
தீயவஞ் சனையி லாதான் செகமெலா மதிக்குஞ் சீரான்
ஏயமெய் யன்றிப் பொய்யை யியம்பிடான் குணங்கண் மூன்றில்
சாய்வில்சாத் துவித மான குணத்தினிற் றலைமை யுள்ளான் (238)

தலைமையா மினத்தான் மிக்க தகுதியான் ரேற்ற முள்ளான்
அலைவறு சிங்கம் போலு மாண்மையா னுறுப்பிற் சற்றும்
நிலைமைசேர் குறைவி லாதானி தியுளா னிரக்கம் பெற்றோன்
தொலைவிலாக் கோப மற்றோன் றெழுதகு மினத்திற் சார்ந்தோன்

இனமிகு மனையா ளன்றி யாரையுந் தாயென் றெண்ணும்
கனமுறு நீதி கொண்டோன் காசினி யுயிரை யெல்லாம்
தனதுயி ரென்னக் காக்குஞ் சற்குண நயாளன் சீலன்
மனமது சோரவி லாதான் மாட்சிமைச் செவ்வி பெற்றோன் (240)

செவ்விதா யிலங்கு கையிற் சிறந்த சங் கிரேகை யுள்ளான்
அவ்விய மழுக்கா றில்லா னண்டினர்க் காக்குஞ் சீரான்
எவ்வகை யாக வேனும் பிறர்பொருட் கிச்சை வையான்
நவ்விநோக் குள்ளா மின்னார் மோகத்தா னலிவு கொள்ளான் (241)

நலிவுறு மிடியோர்க் கெல்லா நன்னய மிகவுஞ் செய்வோன்
பொலிதரு புகழின் மிக்கோன் புந்தியாற் சிறப்புப் பெற்றோன்
பலகலை பயிற்சி யுள்ளோன் பரனடிக் கன்பி செய்வோன்
மலிவுறு மினைய சீரான் வயித்திய சீல னாமே (242)

சீலமரம் வயலிற் செய்ய விருப்பெனும் விதைதெ ளித்து
வாலிய பொறை நீர் விட்டு வளர்பவக் களையை நீக்கிக்
கோலிய தவமாம் வேலி கொடுபுல மிருகங் கொன்று
சாலியாம் சிவம்வி ளைத்துத் தண்ணளி பெற்றோ னாகி (243)

பெற்றிடு மென்பு காலாய்ப் பேசுகை வளைய தாக
வற்றிடு பழுப்பாச் சாக வரிச்சுக ணரம்பதாகச்
சுற்றிய தோலால் வேய்ந்து சுவரெனத் தசையை வைத்துப்
பற்றுடற் பிணியைக் காண்பான் பண்டித னென்னு நூலே (244)

நூலதா யுள்ள சித்த மாமறை நுட்ப மெல்லாம்
பாலென வுண்டு நித்தம் பயின்றதன் பயனை யெல்லாம்
மேலுமா ராய்ந்து கண்ட வைத்திய னிருப்பா னாகில்
ஞாலமேல் விதியில் லாம னணுகிடா துன்பந் தானே (254)

துன்பம தகற்றத் தக்கோர் தூயவே தியர்பூ பாலர்
அன்புறு வசியர் பின்னோ ராய்ந்தநல் வாகடத்தை
இனபமாய்க் கற்றுத் தேறி யியல்பாக மருந்து செய்யில்
முன்புதான் மொழிந்த வேத முதன்மையாந் தருமந் தானே (246)

## விலக்கப்பட்டவர்

தருமமா யுள்ள வேதந் தன்னையவ் வியன்ற னேடு
பிரதிலோ மன்வி ராத்தியன் பேர்பெறு மந்த ராளன்
தெரியனு லோம னின்னோர் தெரிந்துவா கடத்தைக் கற்கில்
வருவது பாவ மன்றி மத்திம மரபுக் காகா (247)

ஆகாமல் விலக்கி னோர்க ளக்கசா லையய்யர் பட்டர்
ஏகாலி குறவர் செக்கா ரியம்புசே ணியர்கு லாலர்
தோகாயிங் கிவர்ம ருந்து செய்திடிற் றோட மாகும்
போகாத நரகிற் போவர் பொசித்தவர் மருந்தைத் தானே (248)

## பிறர்க்குச் சொல்லத்தகாதன

மருந்துட னுண்மை தெய்வ மந்திர மாதர் கூட்டம்
பொருந்திய வின்பங் கல்வி போற்றிய குருவின் வாய்மை
வருந்தியே பெற்ற செல்வம் வயதுதான் புரிந்த தன்றித்
திருந்திய மொழியா யார்க்குஞ் செப்பிடிற் றீதா மன்றே (249)

## நோயாளியின் கடமை

தீதுசெய் நோயைத் தீர்ப்பான் செகத்தினிற் றெய்வம் போல
வாதிதன் மகனு யுள்ள வயித்தியற் கொண்டு வந்து
போதவன் ருளிற் றூவிப் பொருந்திட வழிபா டாற்றி
நாதன்மற் றிவனே யென்ன நயபபுடன் றவிசி னேற்றி (250)

தவிசின்மே லேற்றிப் பின்பு தன்கையாற் றெழுத லன்றி
நவிலுப சாரஞ் செய்து நற்றீப தூபங் காட்டித்
தவமுறப் பூசை செய்து தயவாக முகமன் கூறிப்
பவநோய்க டீரவென்றே பணமும்வெற் றிலையும் வையே (251)

## வைத்தியன் கடமை

வைத்துப்பண் டிதனை நோக்க மென்பிணி யெட்டி லோர்கூ
றற்றிடு முன்ப தாக வன்புட னிருந்து மெல்ல
மொய்த்தெழு பிணியின் வாதை மொழிந்திடக் கேட்டுப் பின்பு
கைத்தலம் பிடித்துப் பார்த்தல் வயித்தியன் கடமை தானே (252)

## நாடிபார்க்கும் விதம்

கடனதாய் நாடி பார்க்கிற் கைதனி னெட்டி வாங்கி
உடனதா யங்கைமூலத் தோர்விர லடைவு தள்ளி
நெடுவிரன் மூன்றும் வைத்து நின்றிடு மசைவு நோக்கி
நடைமுறை யசாத்தி யங்கள் நாடுசாத் தியங்கள் பாரே. (253)

சாத்திய மன்றேல் விட்டுப் போவதே தகுதி யாகும்
தீர்த்திடத் தக்க தென்னிற் செப்பிய பராயங் காலம்
பார்த்துடற் பெலனிந் நான்கும் பண்பு கினறிந்து பின்பு
வாய்த்தநோய்ப் பெலனுஞ் செய்பு மருந்துடை பெலனு நோக்கி

நோக்கிய பிணிம ருந்து நுட்பங்க ளனைத்து நன்ருய்த்
தூக்கியே தேவ பூசை சொல்லிய குருவின் பூசை
ஆக்கியா துலர்தங் கட்கே யன்னதா னங்க ளீந்து
தேக்கிய மருந்து செய்யச் சிறப்பிது பரிகாரிக்கே (255)

## நோய்தீர்ந்தபின் பணம்பெற

காரிய குணவீ னத்தாற் கனவுபா திகளைச் செய்யும்
பாரிய பிணியைத் தீர்க்கும் பண்டிதன் பாதம் போற்றி
நாரியே நோய்தீர்ந் துள்ளோ னன்முக மகிழ்ச்சி யோடு
சீரிய வெகுமா னங்கள் செய்திடன் மாணப தாமே (256)

## வைத்தியன் தீமை

மாணபதாய்ப் பெறுத லன்றி மாற்றமு னிம்மி யேனும்
காண்பதாய்ப் பொருளைப் பெற்றுங் கண்டொன்று காணு தொன்று
வீண்பல பிதற்றி னுலும் வியாதியை யேற்றி னுலும்
பாண்குழி நரக மந்தப் பண்டிதர்க் கிடம தாமே (257)

இடமிகு மனமொன் ருகி யியலொன்ருய் வசன மொன்ருய்
மடமுறு குணத்தின் மூத்து வருந்திடு நோய்மாற் ருது
படிறதாய் மருந்து செய்யும் பண்டிதன் பெருமை கெட்டுச்
சதியாய் நிலைமை நீங்கி நரகினுஞ் சாம்பு வானே (258)

## நாடிபார்க்குங் காலம்

சாம்புநோ யாளர்க் கெல்லாந் தாதுபார்த் தறியுங் காலம்
சோம்பில்சித் திரைவை காசிக்குச் சூரிய னுதிக்கும் போதாம்
தீங்கில் மார் கழிதைக் குந்தான் செப்பிடு மாலைக் காலம்
ஆம்பல்வாய் மானே யானி யைப்பசி யாடி தானே (259)

ஆடிகார்த் திகைநா லுக்கு மாதப னுச்சிக் காலம்
பாடிலா வணியி னேடு பங்குனி புரட்டா திக்கும்
கூடிய நடுச்சா மத்திற் குறித்திடிற் றெளிவா மென்று
நாடிபார்க் கின்ற கால நவின்றனர் நலங்கொள் பூவாய் (260)

## நாடியின் அசைவு

பூவையே கலையி ரண்டும் பொருந்திய சுழுனை தன்னே
டாவியாம் பிராணன் கூடி யங்கமெங் கனும்ப ரந்து
தாவிய நரம்பூ டோடி முடிச்சுடைத் தானம் பத்தும்
பாவியே துடிப்புக் கொண்டு பரந்துநின் றசையு மாமே (261)

அசைவினி ஞடி மூன்று மதிரவே தொந்திப் பாகிப்
பசையுறு பிராண வாயும் பங்குமூன் றினுக்கு மாகும்
இசைபெறு மயிலஞ் சாய லேந்திழை முலேமின் ஞளே
வஸசயறு நாடி மூன்று மனத்திறை றளிந்தி டாயே (262)

தெளிவுறு வாத பித்த சேர்பன தொடங் கண்டு
களவுபொய் கொலேகட் காமம் கனவிலு நினேவில் லாமல்
வளமுற மருந்து செய்தல் வயித்தியன் முறைமை யாகும்
உளமகிழ் வோடு பார்க்கு முறுப்புச்சூத் திரத்தைக் கேளே (263)

## உறுப்புச் சூத்திரம்

சூத்திரந் தன்னேக் கேளா யிடதுள்ளங் கால்சூ டாகி
ஏத்திடும் வலக்கா றண்ணீ ரென்னவே குளிர்ந்தி ருக்கில்
பேர்த்தொரு மருந்தி ஞலும் பிழைத்திட லரிதா மென்று
சாத்திர மறிந்த முன்னேர் சாற்றின ரிதுபொய் யாதே (264)

பொய்யல்ல விடதுள் ளங்கால் பொருந்திய குளிர்ச்சி யுண்டாய்
வெய்தென வலக்கால் சூடாய் விரவிய தலேதான் வேர்த்துத்
தொய்யுறு முடம்பு முற்றுஞ் சூடுகொண் டிருக்கு மாகில்
ஐயம தில்லேச் சொன்னே னவருயிர் பிழைப்ப ராமே (265)

பிழைப்புறு தலேதான் வேர்த்துப் பெருகவே விலாவிற் சூடாய்க்
குழைச்சுகள் பொசிந்து நீர்மெய் குளிர்கொண் டே யிருக்கு மாகில்
மழைத்தமே னியனுங் காலன் வாவெனத் தென்பு லத்துக்
கழைத்திட லுண்மை யாமென் றறிந்திடா யன்ன மின்னே (266)

அன்னமே கண்கள் வட்டித் தடிவயி றதுகு ளிர்ந்து
வின்னமாய் நாரி வீங்கி மெய்யது மிகச்சூ டாகிக்
கன்னமுள் வாங்கி விக்கல் காணுமேற் கால னூரின்
மன்னவீற் றிருப்ப ரென்று வாகடர் வசனித் தாரே (267)

வசனிக்கு நாப்ப சந்து வலதுள்ளங் கைசூ டாகி
இசைவுறு மிடதுள் ளங்கை நீர்கசிந் திருக்கு மாகில்
அசைவிலா நோய்க ளெல்லா மாதபன் றணேக்கண் டோடும்
நிசியெனக் கலங்கி யேங்கி நிற்குமோ நிலவு மானே (268)

ஏர்பெறு நெற்றி சூடா யெங்குமே யுடல்வெ துப்பாய்ச்
சோர்வுறு பிடர்கு ளிர்ந்து சுற்றியே கழுத்து வேர்த்துப்
பாரிய வுச்சி நீராய்ப் பசைப்புக்கொண் டிருக்கு மாகில்
நாரியே யிக்கு ணங்க ணலலது சாவு மின்றே (259)

நல்லகண் ணீல மாகி நாமிக வரண்டு நெற்றி
மெல்லவே குளிர்ந்து கண்டம் பிடரிதோள் வேர்வை யுண்டாய்ச்
சொல்லிய சேட நெஞ்சிற் சுற்றியே யிறுக்கு மாகில்
அல்லியங் கோதை நல்லா யறுநாளிற் சீவிப் பாரே. (270)

சீவிய தலையிற் சூடாய்ச் செறிந்திடு முளங்கை பள்ளம்
மேவியே குளிர்ந்து நீர்தான் மிகவுநா சியினுற் பாய்ந்து
பாவிய தொண்டை தானும் பரவியே கரக ரக்கில்
ஆவிபோ மென்ன முன்னே ரறைந்தன ரவனி மீதே (271)

அவனியின் மாந்தர்க் கெல்லா மரியமூட் டடிசி வந்து
பவனவாய்க் குளிர்ந்து நாசின் பக்கமே சூட தாகித்
தவனமு மின்றிச் சூடாய் வலதுள்ளங் கால்தான் மேவில்
புவனியிற் பிணிகள்வீங்கிப் புகுவர்பொன்னிடையி னுளே (272)

இடையொடு நாரி சற்றே யிரைப்பொடு சூடு முண்டாய்த்
துடையுட னுள்ளங் கால்கள் சூடற்றுக் குளிர்ந்து நீராய்
அடைவுடன் காதி ரண்டு மடைத்தடி யிரைப்புக் காணில்
தடையில்லை யிரண்டு நாளிற் சாதனிச் சயந்தா னுமே (273)

நிச்சய மாக நெற்றி நெஞ்சுகால் கைசூ டாகி
மெய்ச்சட மெங்குந் தானே வெய்யில்சுட் டதுபோற் காணில்
இச்சக மதனி லேய்தீர்ந் தெய்துவர் சுகத்தை யென்னுப்
பொய்ச்சிட லில்லா மேலோர் புகன்றன ரச்ச மற்றே (274)

## வயித்தியனுறுப்பு

அச்சமி சிலாத்த வயித்திய மறிந்தநல் வயித்தி யோர்க்கு
மெச்சுகண் மூன்று நான்கு தலைமிக்க முகந்தா ஊைந்து
உச்சிதக் கையு மாறு சரீரமெட் டுறுகால் பத்து
நிச்சய மிவைய றிந்து கொள்வதே நெறியா மன்றே (275)

நெறிகுண மருந்து சுத்தி மூன்றுநேத் திரம தாகும்
பிறிவுறு சேட வாத பித்தந்தொந் திப்பு நான்கும்
அறியுநாற் சிரயா நாடி யைந்துமே முகங்க ளாகும்
குறிதரு சுவைக ளாறுங் கூறினுர் கைக ளென்றே (276)

கைமுத லட்ட தானப் பரீட்சைதான் காய மெட்டாம்
உய்வுறு நாடி பதுதுங் காலென வோதி னுர்கள்
செய்யுறு வயித்தி யன்பேர் நந்தியந் தேவ னுகும்
வெய்யரோ கியின் பேர்ராகு விளம்பு கல்விழு மனுமே (277)

விழுமிய கயிறு நாக பாசமாம் விரல்கண் மூன்றும்
நெறிகொண் மும் மூர்த்தி யாகு முலைப்பானீ டமுத மாகும்
குறைவிலா மருந்துப் பைதான் குறிக்கின்வை குந்த மாகும்
மறுவக லறிவன் வாதி மகன் வயித்தியனு மன்றே (278)

## வயித்தியஞ் செய்யலாகாதவர்

வயித்தியஞ் செய்ய லாகா மாந்தரை யுரைக்கக் கேண்மின்
செயிர்த்துமற் றுயிர்க்குத் தீமை செய்பவர் பொய்யர் கோளர்
பயித்தியர் தான தன்மஞ் செய்திடாப் பாவி யானோர்
மயக்குறு காம தூர்த்தர் வயித்தியம் வீணென் போர்கள் (279)

வீணகத் தம்மைத் தாமே வியப்பவர் நன்றி யில்லோர்
தோணிய பத்தி யத்தைக் கெடுப்பவர் சொற்கே ளாதோர்
காணநோய் தீர்ந்துந் தீரா தென்னுமா ரீசக் கள்வர்
பாணியான் மருந்தின் னோர்க்குச் செய்யினும் பலித்தி டாதே (280)

## நோயாளர்க்குப் புத்தி

பலித்திடுஞ் செய்ம ருந்தைப் பத்திய முறையாய்க் கொள்ளில்
சொலித்தெழு நோய்கள் விட்டுத் தொலைந்திடுஞ் சுகமுண் டாகும்
வலுத்தநோ யாளி ராசா வாகிடின் மருந்து மில்லைக்
செலுத்துநற் றுதிவ ணக்கஞ் செய்தருந் துகம ருந்தே (281)

அருந்துநோ யுடனே தீரு மல்லாத பேர்க ளுக்கு
மருந்தினைக் கொடுத்த லாகா வறியநோ யாளி யென்னில்
திருந்திய வயித்தியன் கை மருந்துதான் செய்ய வேண்டும்
பொருந்துவெம் பிணியைத் தீர்க்கிற் புண்ணியம் புகழு முண்டே

புண்ணிய மில்லான் றன்பாற் போய்வாயில் காத்து நின்றே
பண்ணுறு மருந்து செய்யிற் பலித்திடா நோயா ளன்போய்
எண்ணிய வயித்தி யன்றன் வாயில்காத் திருப்ப னாகில்
நண்ணிய நோய்க ளெல்லா நாடாம லகலப் போமே (283)

## நோய்தீரப் பேருதோர்

அகல்வுருப் பிணிவந் துற்று லருந்தெய் வநீயே யென்பார்
இகலுநோய் தீரத்தீர வேனென் றுங் கேட்க மாட்டார்
புகலவு டதந்த னக்குப் பொருள்கேட்டாற் கோபஞ் செய்வர்
சுகமிலா திறக்கிற் கொன்றானிவனெனத் தூற்று வாரே (284)

தூற்றுமிவ் விதமாந் தர்க்குத் துன்புறு நோய்தீ ராது
ஏற்றமாங் கலிகா லத்தி னியற்கையிவ் வண்ணமாகச்
சாற்றுவ ரென்று முன்னந் தமிழ்ப்பெருங் கடலை யுண்ட
தோற்றமாம் பெரியோ னுண்மை சொற்றனன் சோம்பி லாதே (285)

## தூதுவனி லட்சணம்

சோம்புநோ யாள னேவுந் தூதுவ னிலக்க ணத்தை
யாம்புவி தன்னில் யாரு மறிந்கிட வுரைப்பக் கேண்மின்
மேம்பட வந்த தூதன் மிக்கசென் னியிற்கை வைக்கில்
சாம்பிய நோயா ளன்றுன் சாவது கடிகை மூன்றே (286)

மூன்றுநா ழிகையா முச்சி மயிர்தனைத் தொடின்முன் னெற்றி
தோன்றுமூ வாண்டிற் சாவாஞ் சொல்லிய புருவந் தீண்டில்
ஆன்றநா ளொன்ப தாகு மடுத்தகண் ணுறு நாளாம்
ஏன்றநெஞ் சதுநாட் பத்தா மெறிற்கன்ன மெட்டு நாளே (287)

எட்டியே முதுகைத் தீண்டி லிறப்பது நாளஞ் சாகும்
கிட்டிய காது மூக்கேற் கேடாது மூன்று நாளில்
முட்டிய கழுத்தஞ் சாநாள் முழங்கால்கை மாத மாரும்
தொட்டிடிற் புறங்கா லுக்குத் துஞ்சுவர் மாத மாறே (288)

ஆறிய தூதன் றனே யலறிக்கூப் பிட்டா னாகிச்
சீறிய முகத்தோ னாகிச் சென்னியை விரித்தோ னாகிக்
கூறிய போர்வை செய்ய வாடைய னாகிக் கும்பிட்
டூறுநீர்த் தலையன் மொட்டை யுறுமொற்றைக் கண்ண னாகி (289)

கண்ணிலான் மயிர்க ளைந்தான் கரியபோர் வையினன் கையில்
எண்ணிய கயிறு கத்தி யாயுத மெடுத்தோ னாகி
விண்ணினைப் பார்ப்போ னாகி விழியினீர் சொரிவோ னாகி
மண்ணினைக் கீறு வோனாய் மயிர்க்கெண்ணெய் வார்த்தோ னாகி

வார்தரு குருதி பொங்க வந்திடல் சார்ந்து நிற்றல்
ஆர்தரு காலைப் பின்ன லங்கையை விரித்துப் பேசல்
ஓர்விலா துறுக்கிப் பேச லுயரத்தி லேறி நிற்றல்
சோர்வுற மெய்ந டுங்கல் துரிதமாய்த் தருக்கம் போசல் (291)

தருக்கினே டிருவர் வந்தே யழைத்திடல் தடிகை யூன்றல்
பெருக்கமாம் வியாதி யாளர் பெண்களிற் கைம்மை யானோர்
உருக்கமா யழைத்த லின்ன வோதிய குணங்கள் கண்டால்
வெருக்கொளக் கால னூரின் மேவுவர் மின்ன னாளே (292)

## மருந்தின் பாகம்

மின்னனாய் மருந்தின் பாகம் விழியினில் நாலு துள்ளி
துன்னவே நைய மாறு துள்ளிகா தினிலு மாறு
உன்னிடு குழம்பு லேகிய முருகுங்கை யளவாய்க் கொள்ளு
பன்னுகண் டூட மத்திற் பாதிபக் குவமாய்ப் பண்ணே (293)

பக்குவ மாங் குடிநீர் பகர்கைகொண் டளவ தாகும்
நெக்குறு சூர ணங்கள் வெருகடி நிறைய தாகும்
தொக்குறு குளிகை நன்மாத் திரைகள்சொன் னளவாய்க் கொள்க
மிக்கவஞ் சனமு முந்தின் பாதியாய் விழியிற் றீட்டே (294)

## மருந்தின் வயது

தீட்டிடு மருந்தி னங்கள் திங்கண்மூன் றதற்பின் கொள்க
சூட்டினின் மூலி வெந்த குடிநீரொன் றரைநா
கூட்டுசர்க் கரைதேன் னெய்சேர் குழம்புதா ளுறு மாதம்
மாட்டிய தயில நெய்தான் வருடமொன் ருவ தாமே (295)

ஆவுறு மோர்பா லெண்ணெ யாநெல்தேன் பழவர்க் கங்கள்
தேவையாய்ச் செய்த ஷாய மிரண்டுநாட் சென்ரு லாகா
தாவறு நிணமி றைச்சி சார்கொழுப் புறுக ஷாயம்
வேவுறு மொருசா மந்தான் வேண்டிடு மேலா காதே (296)

மேலதாந் தயிலத் திற்கு வேண்டிய வயிர மாகில்
ஏலவே குடிநீ ரெல்லா மெட்டுநா ளூற லாகும்
சீலமாங் கொடி க ளெல்லாந் தினமது மூன்றுக் காகும்
சாலவே மூல வர்க்க மூன்றுநாட் சத்து மாமே (297)

சத்துமாம் பீசப் பத்திரஞ் சார்ந்திடு புறவங் கந்தம்
மத்திய காமபு தோலு மேவிய பலமு மெல்லாம்
வற்றிடக் குடிநீர் செய்யும் வாறுகேன் சாமமொன்று
சித்தமுற் றுணர்ந்த மேலோர் தெளிவுயத் திரட்டி னரே (298)

திரட்டிய புட்ப சாதி செப்பிடில் வயதாண் டொன்ரும்
வருட்டிய விரையி னுயுள் வருடமைந் தாகு மென்ப
முருட்டிய தோல்பட் டைக்கு வருடமூன் ருகு மண்ணில்
பிரட்டிய கிழங்கு தண்டு பேசிடில் வயதி ரண்டே (299)

இரண்டுமூன் ருகு மாண்டென் றியம்பிடும் பிசினுக் கெல்லாம்
முரண்டமா மேதைக் குத்தான் மும்மதி யாகச் சொல்லும்
திரண்டவேர் வகைகட் கெல்லாஞ் செப்புவர் வருட மொன்ருய்
மருண்டமா னேக்கி னலலாய் வயதுமற் றிவையா மென்னே (300)

## கணக்கு நுட்பம்

இவையுட னிளநீர் நெல்லுப் பொரித்தவித் திடுநீர் தண்ணீர்
கவினுறு கோம யந்தான் காடிநீ ருடனே சாரம்
செவையுள நாழி முப்பத் திரண்டுமுப் பலமாச் செப்பும்
சவையுற வதற்குப் பாதி தான்பத்துப் பலமா மென்னே (301)

பலமதா மெள்ளி னெண்ணெய் பசுவினெய் யுடனே தேனும்
நலமதா யிருப தென்னு நாழிநற் பலமே கொள்க
சலமதாந் தயிரு நாழி தான்பல மிருபத் தஞ்சாம்
குலமதாம் பசுப்பா னுழி கொள்பல முப்ப தாமே (302)

முப்பழ வர்க்க மோடு முதியசர்க் கரைப லந்தான்
தப்பிலீ ரெட்டுப் பத்து நாழியாந் தாழ்வி லாமல்
செப்புமிக் கணக்கி னுட்பந் தெளிவுற வறிந்து செய்க
வெப்புறு முக்தக் காசு மிளகுவேர்க் கொம்ப தாமே (303)

கொம்பொடு சாத்தா வாரி கூறிய தசமூ லந்தான் கந்தம்
பம்பழக் கணங்க டுக்காய் பஞ்சமூ லங்கள் கந்தம்
வெம்பிய மூல வர்க்க மேற்றோலிவயிரந் தள்ளி
நம்பியே மருந்து செய்யி னன்மைய தாகுமானே (304)

## எண்ணெய்ப் பதம்

மானேகேள் மந்த மாகும் பதமது வாதத் துக்காம்
ஈனமில் மத்தி பந்தான் பித்தத்திற் கிணங்கு மென்க
தேனே தாம் பீத மாகிற் சேற்றுமந் தனக்கா மென்பர்
தானிது பதமூன் றுகுந் தைலயலே தயிலத் திற்கே (305)

தயிலந்தான் மந்த மாகிற் றுன்வழு வழுத்துக் காட்டும்
இயல்புறு மத்தி பந்தா னிறுகியே மெழுகு போலாம்
செயல்பெறு *பீத மாகிற் சேர்ந்திடா துருண்டு தூளாம்
குயிலனுய் தயிலம் வைக்கக் கூறிய பதங்க ளாமே (306)

பதமது மந்த மாகிற் பானமே பண்ண லாகும்
நிதமுமே பொருத்தி மூழ்கச் சமபாகம் நேர்மை யாகும்
விதமிகு பீத மாகில் வெடித்திடு புண்ணிற் காகும்
பதமெண்ணெய் செயினே யெல்லாம் பதறியே யேங்கிப் போமே

## தைலம் பொருத்துங்காலம்

ஏங்கிய வாத மீறி லிருளது விடியற் காலம்
தாங்கிய பித்த மீறிற் சாற்றுவ ருச்சிக் காலம்
வாங்குசேற் பனந்தான் மீறின் மாலையாங் கால மாகும்
பாங்குடன் றயிலம் வைக்க வெம்பிணி பாறிப் போமே (308)

பாறிடு மானி யாடி பகருமார் கழிதை நான்கும்
கூறிய கடிகை யாறு கூனியற் பசிபு ரட்டை
மாறிலா வணியி னேடு மாசிகார்த் திகையோ ராறும்
தேறிய கடிகை மூன்று சித்திரை வைகா சிக்கே (309)

காசிதா மீரண்டி னிற்குங் கடிகைநா லதுவே யாகும்
பூசியே தயிலந் தன்னைப் பொருத்திவெந் நீரில் மூழ்கி
ஆசியாய் நீர்து வட்டி யசனம்பின் னருந்து வோர்க்கு
நாசமாய் வியாதி யெல்லா நடுக்கமுற் றோடுங் காணே (310)

## புடத் திட்டம்

ஓடிய வெருப்பு டத்தின் கணக்கினை யுரைக்கக் கேளாய்
கூடிய கவுதா ரிக்கு மூன்றெருக் கோழிக் குத்தான்
வாடிய வெருப்பத் தாகும் வராகத்துக் கைம்ப தாகும்
காடைக்கு வெருவொன் றுகுங் கசத்துக்கா யிரந்தா னமே (311)

## எரிப்புத் திட்டம்

ஆயிர மாம்ப ரிக்கே யடுத்திடு மெருநூ றுகும்
காய்தரு மெருவி னீள மகலங்கைத் தடிப்புச் சாணும்
மாயிரு விறகின் றிட்டம் வகுத்திடுந் தீரந் தாமென்
றேயின கமலம் ரண்டு கானினுக் கின்ப நான்கே (312)

## விறகினளவும் வகையும்

இன்பமாம் விறகி னீள மீராறங் குலம தாகும்
வன்புறு பருமை தன்னை வகுப்பரங் குலமி ரண்டாய்
அன்புறு தீத்தி றத்தின் விறகிது வாகு மென்பர்
நன்புள விறகின் சாதி நாட்டினுர் வேம்பைத் தானே (313)

வேம்புநா யுருவி வன்னி வேங்கைமா விலங்கு காயாக்
காம்பொடு கருவே லாச்சாக் கருங்காலி புளியி லுப்பை
நாம்புக லின்ன தாக நல்வயி ரத்தோர் சாதி
தேம்புபா லிலாவி ருட்ச விறகுதான் றேடு வாயே (314)

## கல்வத் திட்டம்

தேடுவாய் கல்வத் திட்டஞ் சேர்கபா லத்தைப் போல
நாடுமங் குலந்தா னீள நாற்பதா மகல முப்பான்
வீடுமுள் ளாழம் ரண்டு விரல்விளிம் பதுவி ரண்டாம்
கூடுநீ ளத்தி ரண்டு மூக்கதாங் குழவி கேளே (315)

## குழவித் திட்டம்

குழவிதா னீள மீரெட் டங்குல மளவாய்க் கூறும்
அளவுறு திரட்சி வட்ட மணிவிர லுலு வீதி
சுழலுறுங் குழவி யம்மி தோற்றமா வுடையார் லிங்கம்
பழியிலா மருந்து செய்யும் பண்பிது பண்டி தர்க்கே (316)

# குகைத் திட்டம்

## வச்சிரக் குகை

பண்டித நூலிற் சொன்ன குகைத்திட்டம் பகரக் கேள்[illegible]
கண்டிடு மிருப்புக் கிட்ட முமிக்கருக் காடைச் சாம்ப[illegible]
விண்டிடு கழுதை லத்தி வெவ்வேறு பலமி ரண்டாய்
நண்டுறு குழிமண் ணீரெண் பலமதாய் நாட்டி யாட்டே (317)

## பஞ்ச சுண்ணக் குகை

ஆட்டியே கடுக்காய் தன்னை யவித்தநீர் விட்டு மைபோல்
மாட்டியே குகையுஞ் சில்லும் வரிசையாய்ப் பிடிப்ப தாகும்
தீட்டிய வைந்து சுண்ணக் குகையைக்கேள் சிப்பி யண்டத்
தோட்டுட னத்தை நண்டு சங்கைந்து மொக்கக் கூட்டே (318)

ஒக்கவே சமனுய்க் கூட்டி யோதெருக் கம்பா லாட்டி
மிக்கவட் டாப்ப்பி டத்தில் வெந்துசுண் ணும்ப தாகில்
குக்குடத் தண்ட வெள்ளை யெருக்கம்பால் கொண்டு மைபோல்
சிக்கென வரைத்தெ டுத்துக் குகையுடன் சில்லுஞ் செய்யே (319)

## ஊத்துமுறை

சில்லுடன் குகையில் வைத்துச் சரக்கெலாஞ் செவ்வே நீற்று
மெல்லிய மருந்தி னூத்து முறையினை விளம்பக் கேளாய்
சொல்லிய சரக்குக் கெல்லாந் துருத்தியொன் றுருக்கி னத்திற்
கொல்லையிற் றுருத்தி ரண்டா முறுதியை யோர்ந்தி டாயே (320)

ஓர்ந்திடாய் சத்து வர்க்கத் தூதிய துருத்தி நாலு
சேர்ந்திடும் முறைய தாகச் செப்பினுர் மருந்தின் பாகம்
சார்ந்தவைப் பசிதேள் வில்லுத் தையுருக் கினத்திற் காகும்
வார்ந்தெடு கால மாகு மாசிசித் திரையு மாமே (321)

## குருமுடிக்குங் காலம்

சித்திரை பங்கு னிக்குஞ் செறிந்திடு வைகா சிக்கும்
மெத்திய குருமு டிக்குங் காலமாய் விளம்பு வார்கள்
உத்தம மாணி வாடி புரட்டையா வணியு மோதும்
சுத்தமாஞ் செந்தூ ரங்கள் செய்திடத் தொடங்க லாமே (322)

தொடங்கிடுங் குளிகை யோடு மாத்திரை சொல்லும் வேனில்
தடம்படு குப்பி செய்நீர் தான்பனிக் கால மாகும்
வடம்படு மெண்ணெய் நெய்கள் வைப்பது கூதிர் காலம்
திடம்படு மருந்தி தெல்லாஞ் செய்திடு கால மாமே (323)

## பத்தியம்

காலுறு பிணியா ளர்க்குப் பத்தியங் கழறக் கேளாய்
நீலுறு கடன்மச் சத்தி னெய்த்தலி சுருக்கி ளக்கன்
சீலுறு முரல்வி லாங்கு திரளிகட் டாமீன் வாளை
ஏலுறு மிவைநன் றுகு மியம்புமா மிசத்தைக் கேளே (324)

சேளுமூர்க் குருவி காடை கிளத்திடு கானுங் கோழி
காளுடும் பொடுவெள் ளாடு கவுதாரி கோட்டா னுள்ளான்
கோழியின் முட்டை வெள்ளைக் கருவிவை கூட்டலாகும்
நீளிய முருங்கை தன்பூப் பிஞ்சிவை நேர்த்தி யாமே (325)

நேர்த்தியாம் பொன்னுங் காணி நெருஞ்சியின் கீரை பூலா
வாய்த்தநா யுருவிக் கீரை வட்டுக்காய் சுண்டை யின்காய்
பூத்திடு பூவன் பிஞ்சு புகன்றிடு மத்திப் பிஞ்சு
காய்த்திடு முள்ளி லதைக் கனியொடு தூது மாமே (326)

தூதுபத் திரிகாய் பிஞ்சு துளிர்பழம் பூந்தோ லாகும்
சீதமி லிஞ்சி நெல்லிக் கனிசிறு கீரை சீயா
ஓதிடு மிலையி சங்கி லுறுதளிர் நாவ லின்ன
வீதமாய்க் கொள்க வென்றே விளம்பினர் வியப்பாய் மேலோர் (327)

## அவபத்தியம்

வியனுறு மருந்துக் கெல்லாம் வேண்டாத பத்தி யங்கேள்
பயனுறு மவரை மொச்சை பருத்தபூ சினிக்காய் தும்பை
துயரறு கடுகி னோடு வெண்காயந் துவரை தேங்காய்
தயிரிள நீர்பிட் டப்பஞ் சமைத்தகூழ் களிவி லக்கே (328)

விலக்கிடு கோழி பன்றி நெய்த்தமீன் வெள்ள ரிக்காய்
உலப்பில்செம் மறியாட் டுப்பா லுற்றிடு தயிர்மோர் நெய்தான்
கலப்புறு மெண்ணெய் காட்டு மரைமேதி கைப்பி னிப்பு
நலப்புறு மாத ராசை புளிபுகை நல்ல பீர்க்கே (329)

பீர்க்கொடு மாங்காய் பாகல் புறத்தின்முட் பொதிப லாக்காய்
ஏர்க்குறு வாழை யின்காய் பயற்றங்கா யெலுமிச் சங்காய்
ஆர்க்கமாம் பசுவின் பாலோ டாவினெய் புடோலு முந்து
வார்க்கனி முலையி னுளே மருந்தினுக் கிவைகள் தள்ளே (330)

தள்ளிடு சுரைக்காய் சேம்புத் தண்டுடன் கீரை யாகா
கொள்ளுடன் முயல்மான் றுராக் கொம்மடி காட்டு மாங்காய்
வெள்ளையாங் கத்த ரிக்காய் விளவின்காய் பறங்கிக் காயும்
எள்ளள வுட்கொண் டாலு மருந்தெலா மிழப்பர் தாமே (331

## புளி உப்புக் கூட்ட

இழப்பலா மருந்தி னுக்குப் புளியுப்பி னியல்பைக் கேளாய்
பழப்புளி விதையைப் போக்கிப் பருத்திடு மெட்டி தன்னைத்
துளைத்ததி னுள்ளாய் வைத்து மேற்சீராய்க் கொண்டு மூடிக்
கிளத்துமண் டலத்தி னப்பாற் கொள்கவுப் பியல்பைக் கேளே (332)

உப்பினை யரைத்து நாளொன் றாதியே மேரிச் சாற்றில்
தப்பிலா தடுப்பி லேற்றி வறுத்தது தன்னைக் கூட்டச்
செப்பின ரிசங்கு மல்லாற் செறிபசுப் பாலை விட்டு
வெப்புறச் சாம மொன்று வெந்திட வறுக்க லாமே (333)

வறுத்திடு முப்பு நீறுய் வந்திடு பருவந் தன்னில்
நிறுத்தியே யிறக்கி யாற்றி நேர்த்தியாய் வைத்துக் கொண்டு
மறுத்தவிர் கலைசேர் வெள்ளை மதிநிகர் முகமின் னாளே
திறுத்தியாய்க் கறிக ளுக்குச் சேர்த்துநீ கொடுத்தி டாயே (334)

கொடுக்கும்பத் தியத்திற் கிந்தப் புளியுப்புக் கூட்ட லாகும்
அடுக்குநோ யெல்லா முண்ணு மருந்தினு லகன்று போகும்
தடுக்கரும் வேகத் தோடு சாரும்வெம் பிணிக ளெல்லாம்
விடுக்குநாட் பலனைச் சொல்வேன் விளங்குமேல் வியன்மின் னாளே

## நாள் பலன்

மெல்லிநல் லாளே கேளாய் விளம்பசு வதியி னேய்நான்
புல்லிடி லெட்டு நாளிற் போய்விடும் பரணி யென்னிற்
கொல்லுங்கார்த் திகைநா டன்னிற் கூடிய நோய்க ளெல்லாம்
சொல்லிய விருபத் தொன்பா னாளினிற் சுத்த மாமே (336)

சுத்தமா முரோக ணிக்குச் சொல்லுநா ளெட்டிற் றீரும்
மெத்துமா திரையி னேடு மிருகசீ ரிடமோ ரைந்தாம்
ஒத்திடு புனர்த மெட்டா முறுபூசம் பதினென் றாகும்
வைத்தவா யிலிய நோய்கள் வந்திடிற் சேத மாமே (337)

சேதமின் மகமீ ராறிற் றீர்ந்திடும் பூர மாதில்
ஓதுநாட் பதினைந் தாகு முத்திரம் பத்தா மென்பர்
ஏதமி லத்த மாகி லேழுநா டன்னிற் றீரும்
பேதமாஞ் சித்தி ரைக்குப் பிசகில்லைச் சோதி கேளே (338)

சோதியிற் பிணிவந் துற்றாற் சுகர்வர நெடுநாட் செல்லும்
நீதியாய் விசாக மாகி னீங்கிடு மிருபத் தாறில்
வாதையாப் பெண்ணை நாளில் வந்தநோ யீரா றாகும்
தீதுறு கேட்டை மூவொன் பதுவன்றேற் றீரா தாமே (339)

திருமொன் பதுநாண் மூலஞ் சிறந்தபூ ராடத் துற்ருற்
பாருநா ளிருபத் தொன்றிற் பறந்திடும் பிணிக ளெல்லாம்
கூருமுத் திராடத் திற்குக் குறித்தநா ளெழுமூன் ருகும்
ஆருமே யறியச் சொன்னே மோணத்திற் காறு நாளே (340)

நாளிதிற் றீரா தாகி னங்கையே மரண மாகும்
கேளுநீ யவிட்டத் திற்கு நாண்முப்பான் கிளத்தி ளுர்கள்
ஆறிய சதய மாகி லொன்பதி லகன்று போகும்
கோளுறு புரட்டை யெட்டிற் குறுகுநோய்த் துயரம் போமே (341)

துயரறு மூவைந் தாநாட் சொல்வருத் திரட்டா திக்குப்
பயமுறு மிரேவ திக்கு நோய்வரிற் பகைத்துக் கொல்லும்
வயமுறு மினைய நாளில் வன்பிணி வந்து தோன்றில்
செயமுறு தான தர்மஞ் சிவபூசை செய்து போற்றே (342)

போற்றிய பக்கந் தன்னிற் புகறுவா தசியே சட்டி
சாற்றிடு நவமி யோடு சதுர்த்தியாந் திதிக டம்மில்
ஏற்றமாஞ் சனிசேய் வார மிரவியி னேய்கள் வந்தால்
மாற்றுத லரிய தாகு மரணமு மண்ணி தாமே (343)

## மருந்துண்ணும் நாள்

அண்ணிய பூசஞ் சோதி யவிட்டஞ்சித் திரையே யோணம்
பெண்ணமான் றஸ்யு ரோணி பேசிய சதய மத்தம்
எண்ணுமுத் திரங்கண் மூன்று மிரேபதி பதிநாள் புந்தி
நண்ணுபொன் வெள்ளி சோம னயிறு கன்னி யாமே (344)

கன்னியே மகர மேடங் கற்கட கந்தூக் கென்னும்
மன்னுமிந் நாட்க டம்மின் மருந்தையு ளருந்து வீரேல்
இன்னல்செய் வாத பித்த சிலேற்பனத் தெழுந்து சாரும்
சொன்னவெம் பிணிக ணீங்கிச் சுகம்பெற்று வாழு வாரே (345)

வாழ்வுறு மாயில் கேட்டை மருவிய செங்கை மூலம்
தாழ்விலா வியாழ னேடு சனிவார மிருத்தை தன்னிற்
சூழ்வுறு கடக மேடந் துலாமெனு மிராசி தன்னில்
வீழுநோய் பரிக ரித்துப் பார்த்திடன் மெத்த நன்றே (346)

மெத்திய வோணங் கேட்டை விளம்புமுத் திரமே செங்கை
ஒத்தசங் கிரமஞ் சென்ம நாண்மூன்றி னுடனு வார்கள்
சுத்தமாம் பக்கந் தன்னிற் றுவாதசி துதிகை சட்டி
அத்துடன் பதினொன் றொன்று மாகிய விவையா காதே (347)

ஆகாத திரிநா ணீக்கி யம்புலி ரவிவா ரத்தில்
ஓதுநற் சுபதி னத்தி லுற்றிடு நோயா ளிக்குத்
தீதிலா வெண்ணெய் தேய்த்துத் தெண்ணீரில் முழுக நன்றும்
காதலாய் வாக டத்தோர் கருத்துறக் காட்டினரே (348)

காட்டிய விருத்தை சென்மங் கலந் தநாண் மூன்று வாக்கள்
நாட்டுசங் கிரம கால நயமிலா நாச யோகம்
தீட்டிய கிரக நீசஞ் செப்புமிங் கிவைக ணீக்கிக்
கூட்டிய சுபதி னத்திற் கோணிலே யுச்ச மாக (349)

உச்சமாய்த் தீக்கோள் பார்வை யுருதநல் லோரை தன்னில்
அச்சமாங் கால நீக்கி யட்டமஞ் சுத்தி யாக
வைச்சுநன் மருந்தை யூட்ட மஞ்சன மாட்ட வெட்ட
இச்சையா யிரட்சை செய்ய விசைத்தனர் திருத்தமா (350)

## உணவுகொள்ளும் முறை

திருத்தமாய்ப் போச னங்கள் செய்திடு முறையைக் கேளாய்
பருத்தவுந் தியினை நான்கு பங்கது வாகக் கண்டே
அருத்துநீ யிருகூ றன்ன மப்பொரு கூற தாக
விருத்தொரு கூறு வீணில் விடுவது மேன்மை யாமே (351)

மேன்மையாம் போச னங்கள் மிகுசுவை யமுதொப் பென்னும்
பான்மையா யருந்தி நூருய்ப் பகரடி நடந்து பின்னர்
வான்மிகு தாம்பூ லங்கண் மரபிறை் றுய்த்தது மஞ்சத்
தேன்மலி குழலா ரோடு துயில்பவர்க் கில்லை நோயே (352)

நோயிலை யங்கி நீர்கால் நுடங்குடம் பொத்து நிற்கில்
ஆயுவுஞ் சுகமு முண்டா மன்னமப் படைவிற் சேரும்
ஏயசிந் தையினி லின்ப மிசைந்திடு மகிழ்ச்சி யெய்தும்
சேய்மனை வாழ்வி னோடு செல்வமுஞ் சிறக்கு மன்றே (353)

## தாம்பூலம் தின்ன

சிறந்ததாம் பூல மன்னந் தின்னுமு னேழ தாகும்
உறைந்திடு மன்னந் தண்ணீ ருண்டபி னெட்ட தாதும்
நிறந்தருங் கங்குற் காலை நித்திரைச் சயனந் தன்னில்
அறைந்தன ரைங்கா லாமென் றுதியி னுதனரே (354)

நாதனு ரைரயி னேற நயந்ததாம் பூலங் கொள்ளின்
ஓதுமெய் வெளுப்புக் காட்டிப் பாண்டுநோ யுறுவ தாகும்
தாதுவுங் குறைந்து கண்ணி னொளிபல்லுந் தான்பா ழாகும்
மாதுகே ளிந்நோய் தீர மருந்தில்லை மதுவென் பாரே (355)

## உணவுகொண்டபின்

மதுமலர்க் குழன்மின் னுளே மனமுற வுண்ட பின்பு
சதமடி நடவா விட்டாற் சமியாமற் சலன் முண்டாம்
அதிகமாய் நடக்கில் வாய்வா மடுத்தோடின் மரண மாகும்
இதமுறச் சயனஞ் செய்யி னெழுநோய்கண் மீறு மென்னே (356)

## இளநீர்கொள்ள

மீறிடா துண்ட பின்பு மிக்கதெங் கிளநீர் கொள்ளின்
மாறிடா வாத பித்த சேற்பனஞ் சமமாய் மன்னும்
பாறுமுள் வரட்சி வெக்கை பற்றிய சூடுந் தீரும்
மாறிடு மலச்சிக் கெல்லா மனந்தின்ன மணமுண் டாமே (357)

தின்னிதத் தோடு மேனி சிறந்தெழில் சிறந்து காட்டுங்
உன்னத நோய்கண் மாறு முந்தியிற் பசியுண் டாகும்
தன்னுடன் மகிழ்ச்சி யுண்டாந் தக்ககண் குளிர்ச்சி யாகும்
மன்னிய மொழியி னுளே யதிசுக மடைந்து மன்னும் (358)

## பால்கொள்ள

மன்னிர வுண்ட பின்பு வற்றக்காய்ச் சிடுமா வின்பால்
நன்னிய மாகக் கொள்ளி னயனநோய் நாடா தோடும்
பன்னுதீ பனங்க ளெல்லாஞ் சமித்திடும் பலநோய் மாறும்
வன்னமெய் தடித்து விம்மி வளர்ந்திடும் வடிவுண்டாமே (359)

வடிவுறுங் கனல்கு றைந்து வளர்ந்திடுந் காது விம்மிக்
கடிவுறு வாத பித்த கபஞ்சமன் கொண்டு காணும்
படியினிற் சுகம னேகம் பசுவின்பா லுண்ட பேர்க்குப்
பிடிநடை மயிலஞ் சாயல் பெற்றநற் பேதை யாளே (360)

## நெய்கொள்ள

பேதையே சுடுசா தத்திற் பசுவினெய் பிசைந்து தின்றுற்
தாதுவும் வலுக்கு முந்தி தனிவாகும் பசியுண் டாகும்
சீதமா முடம்பு ரத்த மடங்கிடும் வெப்புத் தீரும்
வாதைசெய் மலங்க மூன்று மடிவுறுந் தாகந் தானே (361)

தாகமா முடலந் தன்னிற் றரத்ததா திக முண்டாம்
சோகமில் லாமல் நல்ல சுகமுடற் றெளிவுண் டாகும்
போகமு மிகவ லுக்கும் புத்துருக் கியநெய் யுண்டால்
வாகுறக் குளிர்ந்து கண்ணு மண்டைநோய் மாறிப் போமே (362)

## சுகந்தம் பூச

மாறிலாச் சுகந்த மணமுள வருக்க மெல்லாம்
தேறவே யுடலந் தன்னிற் சிறப்பாக வணியிற் றுதங்
கூறியே வாத பித்த கபங்களுட் டணங்க டிரும்
வாறிதென் றறைந்தார் முன்னோர் மலர்மணக் கூந்தன் மானே (363)

## பூச் சூட

மணமுள புட்ப சாதி வகைசூடின் மண்டை நோய்கள்
குணமதாம் வெட்டை மேகங் குறைந்துகண் ணொளியுண் டாகும்
கணமதாம் வாடை தன்னைக் கண்டிடல் மருந்து பாழாம்
பணமதா நிதம் மன்னப் படைத்தபொற் பாவை யாளே (364)

## நீருண்ண உணவின்பேதம்

பாவையே நீரண் ணுந்து பருகிடிற் செவியி ரண்டும்
நோவதாய் மந்தம் பற்றிக் நுடங்கிடு நோய்கள் சேரும்
நாவினுற் கறிமிக் குண்ணி னண்ணிடுங் காச ரோகம்
வாவுமீன் கறிக டின்ரு லதிபித்தம் வயங்கு மாமே (365)

வயங்குசீ தளவூண் கொள்ளில் வாதம்வந் திப்புக் காணும்
இயங்கிய கோழி யுண்டா லெழுந்திடும் பித்த மென்க
நயங்கொள்பா னெய்மோ ருண்டா னடந்திடும் வாத மென்க
பயங்கொணற் பழவர்க் கங்கள் பழகினும் வாத முண்டே (366)

வாதமாங் களிபிட் டாதி மந்திப்பு வளருங் காலை
ஓதுநீ ராகா ரத்தை யுண் ணினும் வாத முண்டாம்
பேதமி லிறைச்சி முட்டைக் கறிபித்த வாத மாகும்
சீதமாங் கீரை தன்னைத் தினில்வாதம் நடக்குங் காணே (367)

நடக்குஞ்செம் மறியி னெய்பா னற்கறி வாத மாகும்
துடக்கில்வெள் ளாட்டு நெய்பால் சொல்லிய கறிக ளெல்லாம்
அடுக்குற வுண்ணில் வாத பித்தம்போ மழகா மேனி
திடப்படு மருந்துக் கெல்லாஞ் செப்புநற் கறிதா னமே (368)

கறியதாய்ச் சமைத்த நல்ல காய்கறி யுண் ணில் வாதம்
பிறிவின்மற் றவையிற் பிஞ்சு பேசிடிற் சமமா மென்றே
அறிகுதி கந்த மூல மருந்திடில் வாத மாகச்
செறியுமென் றுரைத்தா ராயுண் மறைகண்டார் செகத்தி லம்மா

## சுகநெறி

செகத்தினிற் பிணியி லார்தந் தேகத்திற் சவுக்கி யங்கேள்
வகுத்தமுப் பொழுது நித்தம் வதனத்தைச் சுத்தி செய்தல்
தொகுத்தருச் சதனற் பல்லை முக்காலுந் துடைத்துக் கொள்ளல்
அகத்தியஞ் சலமோ ராறிற் கழிந்திட லதிக மாமே (370)

அதிகமாய்ப் பசிவந் தாலு மளவறிந் தசனஞ் செய்தல்
மெதுவதா யுடன டத்தல் வெந்நீரிற் குளித்தன் மூழ்கல்
நிதமும்பால் மோர்ப ழங்கள் நெய்யுட னினிதா யுண்டல்
புதியவிங் கிவைக்கு வெந்நீ ருண்டிடல் புத்தி யாமே (371)

புத்தியாம் வாலி பஞ்சேர் பூங்கொடி மாரைச் சேர்தல்
மெத்திர வினிற்பா லுண்ணல் வெய்யின்மா லையினிற் காய்தல்
சொத்துறு சுகந்த கந்தம் பரிமளங் கூட்டிப் பூசல்
முத்திய கிழக்கோ லத்தின் முதுமைபோய் வாலை யாமே (372)

வாலையா மிள நீ ருண்போ மலசலந் தனைய டக்கோஞ்
சீலமார் மணங்கு ளிர்ந்த தெளிவான நீர்கு டிப்போம்
கோலமாங் காலை யுண்டி கொள்ளுவோ மரைத்த சந்தோ
டேலகிற் புகையுங் கொள்வோ மிடமில்லை நமனு ருக்கே (373)

நமதாகு மனையா ளோடு நற்பகற் சேர மாட்டோம்
சமனதாய்த் தென்றல் வீசித் தடவவீற் றிருத்தல் செய்வோம்
கெமனமாம் புணர்ச்சி யின்கண் வலக்கைகீழ்க் கிடக்க வொட்டோம்
எமன் றனக் கிருப்பி டந்தா னே துநம் மூரிற் றுனே (374)

ஊருநீர் சுருக்கி மோரைப் பெருக்கிநெய் யுருக்கி யுண்போம்
சீர்பெறு மாடை தன்னைத் தினந்தினங் கழுவிச் சேர்ப்போம்
வாருநீ ராறு தும்மல் மலம்வாயு மூன்று செய்வோம்
பாருமென் பிடிமின் னுளே பயமிலை யெமக்குத் தானே (375)

எமக்குறு மனைவி யன்றிப் பிறர்மனைக் கேக மாட்டோம்
அமக்கமாய் நீரி னுள்ளே முழுகுவோ மதிக மோடோம்
சமிக்குமு னுண்ண மாட்டோ மிரவுறைத் தயிரை யுண்ணோம்
சமுக்கமா யிருப்போ மாகி லென்செயுங் கால னூழே (376)

## கன்ம நிவிர்த்தி

ஊழ்வினைத் தொடர்பி னுலே நோய்பலவு ண்டா மென்க
சூழுமந் நோய்க ளெல்லாந் தொந்தமாய் வாதை பண்ணும்
வாழுறு வாணுள் போக்கு மருந் தினுற் றீர மாட்டா
பாழுறு முடம்பை வாட்டும் பற்றிய் கன்மத் தாலே' (377)

கன்மத்தால் வந்த நோய்கள் காலனுக் கிரைய தாகும்
கன்மத்தை நிவிர்த்தி செய் தா னுேபெலாங் கலங்கிப் போகும்
கன்மத்தின் பகுதி தன்னைக் கண்டிட லரிய தாகும்
கன்மத்தைத் தீர்க்க மாட்டார் கன்மசண் டாளர் தாமே (378)

சண்டாளப் பிறப்பி னேர்க்குத் தான்கன்ம வினைதீ ராது
மண்டியே வளர்ந்து கொல்லு மற்றவர் செய்கை யாலே
அண்டிய கன்மந் தானே யவர்க்குறு பகையாய் நிற்கும்
கொண்டிடு கன்ம மெல்லாங் கூட்டிய வினையான் மேவும் (379)

வினையறு சூட்சந் தன்னை விதிமுறை விளம்பக் கேளாய்
கனியுறு நாத விந்தைக் கருதுமோங் காரத் தாலே
நனியுற வளையச் சூழ்ந்து நடுநேராய்த் தலைபி னேற்றி
முனையதிற் சூல மிட்டு மேலினி மொழியக் கேளே (380)

மொழியுறு சூலத் துள்ளே மூலமாம் விட்டெ முத்தோ
டழகுற விடா தெழுத்து மிரண்டையு மட்சரித்தே
வழுவற நுனியதன் மேல் வயங்கிடச் சுத்திபிட்டங்
கெழுதுமிச் சூட்சத் தைச்சூழ்ந் திடவொரு வளையம் போடே (381)

போட்டிடு வளைய மீதிற் பொருந்திய தளமீ ரெட்டுக்
காட்டியே சோட சத்தைக் கதிக்கவோர் வளைய மிட்டுத்
தீட்டிடு மிதழ்க ளெட்டிற் றிக்குப்பா லகரைப் போற்றி
நாட்டிடுஞ் சதுர வாயி லுலுதிக் கினுமெ டாயே (382)

எடுத்தநால் வாயில் தோறு மெழில்பெறு கணேசன் சந்தன்
வடுத்தவிர் காளி வீர வாகுநால் வரையும் பூசித்
தடுத்திடு வெள்ளி செம்பொன் னைதோர் தகட்டிற் கீறித்
தொடுத்திடு கிரிகை தன்னைச் சொல்லுவன் றெருகுத்துக் கேளே

தொகுத்திடு மண்ட பந்தான் சொல்லிய சதுர மாக
வகுத்துநால் வாயில் போக்கி மரபாகக் கோல மிட்டுப்
பகுத்தமேற் கட்டி மாவி னிலை தூக்கிப் பண்பி யாவும்
மிகுத்தமண் டபத்தி னுப்பண் விளங்கவோர் மேடை போடே (384)

மேடையி னுயர மெட்டு விரனீளஞ் சதுர மாகப்
போடுவாய் முழமி ரண்டு பொருந்தவே சுத்த மாக்கித்
தேடுநெல் லரிசி பாசிப் பயறோடு திலம்ப ரப்பி
வீடரு ளியந்தி ரத்தை மேல்வைத்துப் பூசிப் பாயே (385)

பூசிப்பாய் மஞ்ச னந்தான் புனுகுடன் பஞ்ச சுத்தி
ஆசிப்பாய்த் தூப தீப மரியசந் தொடுசு கந்தம்
நேசிப்பாய் புட்ப சாதி நிவேதனம் பலவு மாக்கி
வாசிப்பாய் வாயி ரேறும் வைத்திடு நாலு கும்பம் (386)

கும்பத்திற் சலம்பூ ரித்துக் கூர்ச்சமிட் டாடை சாத்திப்
பம்புற்ற சூத பத்ரம் பரப்பிநற் றேங்காய் வைத்து
நம்புற்று மாலை சாத்தி நறியதாம் பூலம் வைத்து
வம்புற்ற மலர்தூய்ப் போற்றி வயங் தமெண் டிக்கிற் றுனே (387)

திக்கினி லட்ட கும்பந் தெய்வீக மாக வைத்து
முக்கிய முடைய வட்ட பாலரை முறையாய்ப் போற்றிப்
புக்க தோரிரவி வாரம் புலரியிற் றுனம் பண்ணித்
தக்க வெக்கிய மோமத் தொடுரு லட்சந் தாக்கிடாயே (388)

தாக்கியே பிணியா ளன்றன் சரீரத்தைச் சுத்தி செய்து
நீக்கரும் பிணியை நீக்கு நியமமாய் முன்பு வைத்துத்
தேக்கிய வன்பிற் பூசை செய்வன வெல்லாஞ் செய்து
பாக்கிய நீறு சாத்தப் பவப்பிணி பறந்து போச்சே (389)

போச்சது நோயா ளிக்குப் பொருந்திய பிணிக ளெல்லாம்
விச்சுறு குருவி னூலே மிக்கயந்தி ரத்தைக் கட்டி
வாச்சுதென் றயனு மாலும் வருந்தியுங் காண வொண்ணுத்
தீச்சுடர் வடிவாந் தேவ சிவநம வென்று போற்றே (390)

சிவத்தைமுன் னுக மாறிச் செபிக்குமட் டாட்ச ரத்தால்
அவத்தமாங் கன்ம நோய்க ளடுத்தபேய்ப் பிசாசுந் தீரும்
தவத்தொடு தான தன்மந் தயவுடன் மிடியோர்க் கீந்தால்
நிவப்புற வளர்ந்து கன்ம வினைகளு நிவர்த்தி யாமே (391)

நிவிர்த்திய தாகு மிங்கு நிகழ்ந்திடுங் கன்ம மட்டோ
பவத்தினுக் குறுவித் தாய பாழிருண் மலமுந் தீரும்
தவித்திடு மாந்தர்க் கெல்லாஞ் சார்ந்திடுங் கன்மந் தன்னைப்
பவித்திரஞ் செய்யா விட்டாற் பாவம்பண் டிதனைச் சுற்றும் (392)

சுற்றிய தோஷத் தாலே வயித்தியன் றூய்மை கெட்டுப்
பற்றுதீ நரகில் வீழ்வன் பழிவழி யாக நிற்கும்
உற்றசந் ததியு மற்றே யொழிவிலாக் கன்மஞ் சேரும்
முற்றுமீ துணர்ந்து செய்யும் வயித்தியன் முதன்மை யானே (393)

முதன்மையாம் வைத்தியன் கன்ம முதலிலே நிவர்த்தி செய்தல்
அதுதனக் குறுதி யென்றே யறிந்துடன் செய்து நாளும்
மதியணி சடையெங் கோமான் மலரடி பணிந்து போற்றில்
கதுமெனப் பிணியுந் தீருங் கன்மமோ சனமு மாமால் (394)

மோசன மாமு ரோக முறைப்படி வகாரஞ் செய்யிற்
காய்சின வியாதிக் குற்ற குறிகுணங் கண்டி டாமற்
பேசிய கிரியை தப்பிப் பிசகாக மருந்து செய்வோர்
நீசராய்ப் பிறந்து மண்ணினெடுந்துய ருழப்பர் தாமே (395)

உழப்பதா நோய்கட் கெல்லா முறுதியா மருந்து செய்யிற்
களைப்பற நீங்கிப் போகுங் காலபே தங்கள் கண்டே
திளைப்புறு குறிகு ணங்கள் செவ்வையாய் நன்ரு ராய்ந்தே
இளைப்பறு மருந்தை யீந்தா லேங்கியே மாயு மென்னே (396)

மாயமாய் மருந்து தப்பின் மறுபடி நோயுண் டாகும்
ஏயநோய் வந்த நாட்கோ ளெய்திய வலிமை கண்டே
ஆயதோர் சுகாசு ளாய்ந்துணர்ந் தவற்றைப் பார்த்துச்
சாய்வற வயித்தி யஞ்செய் வதுமிகத் தக்க தன்றே (397)

தக்கதோர் மருந்துக் கெல்லாஞ் சாற்றிய மருந்து சுத்தி
பக்குவஞ் செய்ய வேண்டு மல்லது பலித்தி டாது
மிக்கதாம் பத்தி யங்கெட் டிடுகிலு மீறிக் கொல்லும்
ஒக்கவே மருந்துண் டோர்க்கு முறுபிணி யொழிந்தி டாதே (398)

ஒழிந்திடும் பிணிக ளெல்லா முரியபண் டிதனைக் கண்டால்
விழைந்திடும் வயித்தி யோனை மிகமனம் வருந்தச் செய்தால்
அழுந்திய பிணியா ளன்றா னதிகமா யுபாதிப் பட்டுச்
செழுந்திருப் பொலிவு நீங்கிச் சேர்குவ னரகி லம்மா (399)

நரத்துவ மில்லா தார்க்கு நோயுறி னன்மை யாகா
துரத்துநின் றிடுந்தி யான செபதபத் துண்மை யாலே
பரத்துவ முணர்ந்து பின்னைப் பரிகாரம் பண்பிற் செய்யில்
வருத்துநோய் தீர்ந்து போகும் வளர்மலை மலையன் றனே (400)

மலைவுறு நோய்கள் வந்தால் வயித்தியஞ் செய்ய முன்னே
அலைவறு கணேச னுக்கு நிவேதன மவலெள் ளுண்டை
தொலைவறு பணிகா ரங்க டுய்யமோ தகம்ப ருப்பு
நிலவிய பொங்க லாவி னெய்யுட னப்ப மாமே (401)

அப்பம்பிட் டுடனே தோசை யரியதோர் நாளி கேரம்
முப்பழ மிளநீ ராவின் முதியபால் பொரிக ரும்போ
டொப்பிலா வடைதே னுதி யுரியதாம் பூலத் தோடு
செப்பிய மலர்தூய்ப் பூசை சிறக்கச்செய் தேத்தி டாயே (402)

ஏத்தியே தான தன்ம மின்பம தாகச் செய்து
காத்திர மாக வேதான் மருந்தினைக் கருதி யுண்ணிற்
தீத்திற மதனிற் பட்ட பஞ்செனத் தேகத் துற்ற
நோய்த்திற மெல்லாந் தீரு நூல்போனுண் ணிடையி னுளே (403)

## நூல் வழி

நுண்ணிய விந்நூலைப் போனூலெங்குங் கிட்டி டாது
மண்ணுளோர்க் கிரங்கி யெங்கண் மலைமட மாது போற்றி
அண்ணலை வணங்கிக் கேட்க வருளும மறையின் தன்மை
உண்மையைக் கேட்டு வேதற் கோதினுர் நந்தி தானே (404)

நந்தலின் வேதன் மேக நாதனுக் குரைத்த தந்த
இந்திர னிடத்திற் பெற்ற குறுமுனி யிப்பார் மீதில்
வந்தநை மிசர்க்குச் சொன்ன வகைவழு வாமற் கூறும்
முந்திய கவிநா னூறு முற்றுறச் சொன்ன தாமே (405)

# அங்காதிபாதம்

(இரண்டாம் பிரிவு)

## வாகட தத்துவம்

வன்னியு மறுகுங் கொன்றை மாலைபு மதியும் பாம்பும்
சென்னியி லணிந்த முக்கட் டெய்வநற் களிற்றின் ருள்கள்
உன்னியே வழிபா டாற்றி யுரைபெறு மாமறைகள்
தன்னிலே வாகடத்தின் றத்துவஞ் சாற்று லுற்றேன் 1

காணுறு கண்மூன் ருலுங் காண்பவர் காண்பா ரத்தைப்
பூணுறு சிறியோ ராலே புகலு நற் கெளிய தாமோ
நாணுறு தசைக ளாதி நரம்பினை நிறுத்துக் கட்டும்
மாணுறு பொய்யு மெய்யும் வகையுமே யுரைக்குந் துய்யோன் 2

துலங்கிய விருபத் தோரா யிரத்தறு நூறு சுவாசம்
இலங்கிய நாடி நாட்டி லெழுபத்தீ ராயி ரங்கள்
விளங்கிய ரோம பேத மூன்றரைக் கோடி வீரும்
நலங்கிளர் கலையோ ரெட்டா நாலெட்டுப் பழுவாந் தன்மை 3

தந்தங்க ளுலெட் டாகுந் தளர்வினை வொருநான் காகும்
அந்தமா மறுமை யிம்மை யளவிலா மனஞ்சொற் காம்ம்
நிந்தையேழ் குற்றம் வாய்மை நீளவாம் பொய்மை கோபம்
முந்திய கிலேச மைந்தா மூவொன்பான் குணமு மன்னும் 4

### பஞ்ச பூதக்கூறு

மண்ணினிற் கூரு மென்பு நரம்புதோல் மயிரி றைச்சி
தண்ணீரின் கூறு சோரி சாருநீர் நிணமே மூளை
எண்ணமில் லூன் மென்ப வெரியினின் மறப்புத் தாகம்
பெண்ணுறு புணர்ச்சி கோபம் பேசுறு முறக்க மைந்தே 5

கிடைநடை யிருத்த லோடல் கிளரவே நீட்ட லைந்தும்
தடையிலாக் காற்றின் கூருந் தளர்விலா வானின் கூரும்
இடைவிடாக் காமங் குரோத மெழுமதம் லோபங் கோபம்
புடைபெய ராய வைந்தும் புக்கவே பூதக் கூரும். 6

கூறிய தொண்ணூற் ருறு தத்துவக் குழாங்க ளோடங்
கேறிய பிராண வாயு வெண்ணிய பிராண ஞகி
ஏறியே ருது போன்றங் கியல்பினை யுணர்த்து நாடி
தேறிய சுவையுண் ணுது செய்வினைப் பயனுண் டாகும் 7

## முப்பிணியினியல்பு

ஆகிய வியாதி மூன்று மணிபெற வுட லிற் றங்கி
ஆகிய புசிப்பி ஞலே யவ்வுயிர்க் கின்பங் காட்டி
ஆகிய முனிவுங் காட்டி யழிந்திடப் பிரித்துக் காட்டும்
ஆகிய வுயிரா கத்துக் கபிமானி யாவ தாமே 8

ஆக்கையிற் பிணியே கூறி லாதியாம் வியாதி தானும்
தாக்கிய வாத பித்தந் தளர்வில்சேற் பனமே யாகும்
தேக்கிய வாயு தானுஞ் செப்பிய மூலா தாரம்
நோக்கிய பித்த மங்கி நுண்கப மனிலத் தன்பாம் 9

அனிலமே கறுப்ப தாகு மானதோர் பித்தஞ் செம்மை
பனிநிறப் பளிங்கு போலும் பாவுசேற் பனத்தின் மேனி
நனிபெற நாடி யோடே நயந்துநின் றுடற்கு ணுளும்
முனிவுநற் குணமு முண்டா முறையறு சுவையுண் வாய்ப்பால் 10

வாதமே யப்பி ஞேடே மருவிய மூலம் பற்றிப்
போதவே சுழுனை யோடு பொருந்திமெய் தோய்ந்து நிற்கும்
நீதமா யங்கி மீது நின்றும ருத்தோ டொன்றிச்
சீதமே யன்றிப் பித்தச் செயல்கள்வெவ் வேருய் நிற்கும்

நின்றிதை யத்துட் காற்றி னேர்கபங் கலந்தங் குன்னி
நன்றிய கபமுஞ் சீத நயந்துபி னியாமத் தெய்தும்
கன்றிய வாதத் தோடுங் கனலுறு பித்தத் தோடும்
ஒன்றினே டொன்று மொன்றி யிரண்டுட னுபிர்போமொன்ருய் 12

ஒன்றிய காலை பித்த முயர்நடுப் பத்து மையம்
கன்றிய மாலை வாதங் கங்குலிற் கபமுன் பற்றும்
நன்றிய நடுவே யான நாழிகை பத்தும் பித்தம்
வென்றிட விடியப் பத்து மேவிடும் வாத மெய்தி 13

எய்திய வாதக் கூறங் கிடையள வாகு மற்றும்
வெய்தழற் பித்தக் கூறு விரவிய கண்ட மட்டாம்
ஐயதிற் கூறு மெய்யி லானதோர் சிரமே யாகும்
மைதிகழ் வியாதிக் கெல்லா மன்னரொப் பாகு மூன்றும் 14

மூவர்போன் முதன்மை யாகி முதன்மைமுத் தொழிலே யாகி
யாவதும் படைத்த ளித்தங் கழிப்பதுந் தாமே யாகித்
தேவர்போல் வியாதி யெல்லாந் திரண்டு சூழ்ந்திடத்தா மோங்கிப்
பாவகம் பலவுங் காட்டி மீண்டுதம் பதிக்கு ளாமால் 15

ஆமதா மரையில் வாத மனுதின மாகி நாபிக்
காமமார் பிடையிற் கையிற் கதித்தவென் பினில்மேற் ரேலில்
நாமமார் நாடியெங்கு நடந்து மெய் யளவுங் காட்டித்
தூமமார் பரிச மெய்தித் தொடருமிந் திரிய மெய்யாம் 16

ஐயதாநாடி தானு மங்குல மிரண்டுக் கப்பால்
துய்யதாம் பித்த மெய்தித் துவழ்ந்திடுங் கனவிற் காட்டி
வெய்யதா மெய்யி ரத்த மேவிய நரம்பிற் றண்ணீர்
செய்யதாங் கண்கள் நாடிச் சிலேற்பன மிருக்குங் காணே 17

கானமார் கபத்திற் காற்றுக் கழுத்தினிற் கலந்து சந்தில்
நானமார் சிரத்திற் பற்றி நண்ணூமூளைக்கு ளுன்னி
ஊனம தாகும் பைய வுள்ளுற்ற தாவுண் மேதை
கோனமார் முற்க பத்திற் கூடியே திரமாங் கோழை 18

## வாதரூபம்—தொழில்

கோலுறு வாத ரூபங் குறித்திடிற் சுவாசந் தங்கி
மேறுலு வெப்ப மற்ப மேவிய சீத மிக்காம்
காலுறு தொழிலே தென்னிற் கண்களைத் திறத்தல் மூடல்
தாலுறு மசைவு கைகால் தரித்தல்நின் ரேடல் நீட்டல் 19

நீட்டலு முடக்க லும்பின் னீளுறு சுவாசங் கீழ்மேற்
காட்டலும் படுத்த லுஞ்சொற் கடுத்தலு முவப்பும் வீரம்
கூட்டலு முயற்சி யுஞ்செய் கொடுமலஞ் சலம்விந் தாக்கை
வீட்டலு மெடுத்த லுங்கை விதானமுங் காலின் செய்கை 20

## வாதகோபம்

செய்கையாந் துவர்ப்பிற் கைப்பிற் சென்றிடும் வாத கோபம்
பொய்கையாந் தரத்துட் டேகம்பொருந்து நீர்மலத்தைத் தாக்கிச்
செய்கையாஞ் சுவாதஞ் சோகஞ் சுரங்குளிர் நடுக்கந் துன்பம்
மெய்கைவா யெழும்பா வண்ண மெலிவுற வணக்கிக் கட்டும் 21

கட்பெரு மலங்கள் மந்தங் கறட்டென நோதல் வற்றல்
கொட்பெரு வெயர்வு ரோமங் கூர்ப்புதல் குளிர்தல் காற்றும்
உட்புற முலாவல் சந்தி னூடுநோப் பிடிப்பு மாதல்
வெட்கையால் வாத சன்னி மேவிடு மென்று கூறே 22

## வாதம் கோபித்தற்கு ஏது

கானடை யாலச் சத்தாற் கடும்பசி யாற்கோ பத்தால்
ஊனமி லிரவில் வார்த்தை யுரம்பெற விரைக்க லாலூண்
ஆனபின் முனிவால் மாரு தடுத்தடுத் துரைக்குஞ் சொல்லால்
ஈனமி லிகழ்ச்சி யான விகல்வாத கோபங் காணும்; 23

## வாதம் கோபித்தகுறி

காற்றுறு கோபத் தால்வாய் கசப்பிலா தினிப்புப் பெய்தும்
தோற்றுறு புத்தி மந்தஞ் சொல்லுரை காட்டுங் கண்ணல்
தேற்றுறு வாய்மை நீங்குஞ் சிரரோகக் கோப முண்டாம்
கூற்றுறு கால மான குணமுநற் குணமும் பண்பாம் 24

## வாதசரீரத்தின் குணம்

பதிபெறு வாதத் தாலே பற்றிய குணங்கள் செப்பில்
மதிபெறப் புரியுஞ் செய்கை மல்லென வெனவ மூத்தி
அதிகவெம் பொய்யுங் கூறு மையுற வுழல்வ தாகும்
விதிதலை மயிரே யற்பம் வெந்நீரின் புற்றே தேடும் 25

உடலது கருமை செம்மை கன்னமெய் யுறுப்புத் தூலம்
திடநெறி யறிவு போதஞ் செபநிலை கருணை நீதி
மடமயி லனையார் மீதின் மயக்கம்வஞ் சகத்தாற் றேடல்
படைபடச் சலித்தல் போரிற் பதறியே புறங்கொ டுத்தல் 26

கொடுத்திட லோப ஞானங் குருவுற வறிஞர் தம்பால்
அடுத்திடா துள்ள தின்ப மானதோர் கனவு தன்மேல்
எடுத்தெறிந் திடவுங் காண்ட லினியதண் புனல்வேண் டாமை
தொடுத்தது முடியாத் தன்மை தோன்றுமா ருதத்தின் செய்கை 27

## பித்தரூபம்—தொழில்

எடுத்திடும் பித்த ரூப மியம்பிடின் மதியி ராகம்
கொத்திடு நினைவு நன்மை குறித்திடும் பார்வை சூட்சி
தொடுத்திடுங் கிரியை வீரந் தூய்மலர் மேனி பொன்னும்
அடுத்திடு மழகு காந்தி யதிகவெம் பசிக ளாமால் 28

## பித்தகோபம்—குறி

ஆயுறு பித்த கோப மதிசெயம் வெப்புத் தாகம்
தோய்வுறு மயர்வு மூச்சுச் சொன்மதம் புத்தி பேதம்
பாயுறு முனிவு வீரம் பரவிய புளிப்பி லின்பம்
வாயுறு முதிரங் கண்கள் மலஞ்சல மஞ்ச ளாகும் 29

குணம்பெறு முகங்கள் மேனி கூர்சிரந் திரங்கி வற்றல்
கணம்பெறு மனம்வே ருகக் காட்டிடுங் குளிர்கா லத்தில்
மணம்பெறு சலமேற் ருகம் வைத்துநா டிடும்பின் வெப்பால்
நிணம்பெறு மதிசா ரத்தை நீட்டிடு முனிவாய்ப் பித்தம் 30

## பித்தம்கோபித்தற்கு ஏது

பிணிதரு பித்த கோபம் பெருகவுண் டாகு முண்டி
கணிபெறு மழற்சி யுப்புப் புளிப்புறைப் பதிகத் தாலும்
பணிதரு மதுவினுலும் பாரண மிகுத லாலும்
மணிதரு வெயர்வு வெய்யில் வழிநடை முனிவி னுலும் 31

ஆனவெம் பித்த கோப மாமடி படுமுக் காலம்
ஆனசொற் பனம் வீழ் கால மதிபசி தாக காலம்
ஆனமெய் வெயர்வு மூர்ச்சை யழிமுனி வெய்துங் காலம்
ஆனமங் கையர்மே லாசை யணிசுக மடையுங் காலம் 32

காணுறு பித்த கோபங் கதித்திடிற் பெருத்த காலம்
காணுறு கண்ணிற் பார்வை கலங்குதல் தெளியுங் காலம்
காணுறு புளிப்புத் தித்திப பழற்சிகள் சுவைக்குங் காலம்
காணுறு மெய்யி லேப்பங் கலந்திடக் கலக்குங் காலம் 33

காலொடு கபமுங் கூடிக் கலப்பினுங் கனல்சேர் பித்தம்
காலொடு கலவா துற்றே கதித்திடிற் கனத்த வாயு
காலொடு கலந்தங் குண்ணக் கருத்தொடு பசிகண் டுண்ணில்
காலொடு கலவா தென்றுங் கடும்பசி விளைத்து வெப்பாம் 34

ஆலமார் பித்த கோப மாயிடி லத்தி மீது
கோலமார் வெப்புத் தோன்றிக் கொதித்தெழுந் தண்ணீர்த் தாகம்
ஞாலமா ரிராக்கா லத்தி னண்ணுமத் தியானத் தின்பின்
சீலமார் நிசிமூ வைந்து சென்றநா ழிகையிற் செய்யும் 35

## பித்தசரீரத்தினியல்பு

செய்யவே பித்த முற்ற செய்குண மறிந்து செப்பில்
மெய்யுரை ஞானங் கேள்வி மிகுபொறை புகழ்சொல் செம்மை
ஐயுற லறிவா சார மடக்கமைந் தடக்க லாண்மை
பொய்யற லழகு நன்மை புகல்நிறை நெறியி னிற்கை 36

நிறைநெறி ஞானத் துண்மை நேர்மையாய்த் தேறல் நீர்மை
குறைவற மடவார்க் கொத்த குணமிக விளமை தன்னில்
கறையற நரைத்தல் நாளுங் கனமுற வெயர்த்தல் கண்கள்
முறைகெடல் சிவத்தல்மேனி வெளுத்தல் சொன்மிக மெத்தென்றல்

என்றுநாற் கலேக ளோதல் யாவரும் போற்றல் சித்தம்
அன்றியே யிருத்தல் நாளு மறிவுடை யோரைப் போற்றல்
நன்றியே யறிதல் நாணல் நயத்தல்சிக் கனமாய்ப் பார்த்தல்
கன்றியே கனவி லங்கி காய்தல்சேர் பித்த மாதம் 38

## சிலேற்பன ரூபம்

ஆக்கிய கபரூ பத்தை யறிந்திடு முறைமை செப்பில்
தேக்கிய குளிரே யற்பந் தீயவெப் பதிகங் கண்டம்
தாக்கிய கோழை யாலே தளர்விலாத் திடமுண் டாகித்
தூக்கிய புத்தி யன்றித் துயருறு கெடுதி காட்டும் 39

## சிலேற்பனத்தின் தொழில்

காட்டிய கபமே நாளுங் கருதிய தொழிலேக் கூறில்
ஓட்டிய வாயுப் பின்னு முவட்டியே கபத்தைத் தள்ளும்
வாட்டிய பித்தந் தள்ளும் மருவியே யுடலின் முற்றும்
கூட்டிய சந்துக் கெல்லாங் கொளுநரம் பிறுகி நிற்கும் 40

நின்றிடு மகமெய்ப் பூசை நீங்காமற் ருனே தாங்கி
நின்றிடுந் தித்திப் போடு நிறைந்திடு முணர்வு கொள்ள
நின்றிடு நேய நாளு நிகரிலாப் பொறையுண் டாகி
நின்றிடும் பழைய வுப்பி னிரசம்போ னெஞ்சிற் காணும் 41

## சிலேற்பன கோபம்

காரண காரி யத்தாற் கதித்திடுங் கபத்திற் கோபம்
ஆரணச் சேர்க்கை யாலே யாயிடும் பண்பு கூறில்
பூரண வசந்த காலம் போதுமத் தியானத் துள்ளும்
வாரண நிசிமூ வைந்தி னுள்ளுமூண் மருவ லாகா 42

காணுறு கபகோ பந்தான் கனமது மகர மாதம்
காணுறு சலமே யுண்ணக் கருதிய மந்தந் துஞ்சக்
காணுறு கன்ன லெள்ளுக் கடும்புளிப் புறைப்புப் போடு
காணுறுந் தித்திப் பான கறிமுத லன்னங் கொள்ளே 43

கொண்டிடுங் கபகோ பத்தாற் குமிறிமூக் கடைத்து வீசக்
கண்டிடுந் தினவு வாந்தி காசமே சுவாசம் வெப்பு
மிண்டிடுங் கபோல மொட்ட மிகுதடிப் பாய்வாய் வெள்ளை
அண்டிடு மதுரஞ் சீத மற்பநித் திரையோ டாக்கை 44

ஆக்கையிற் பிராணனுன வனிலமோ டமருஞ் சந்து
ஆக்கையாற் பெலத்துக் கட்டு மைந்ததாந் தொழிலே யாதும்
ஆக்கையா லேக தேசத் தன்னிய மில்லை யென்றும்
ஆக்கையா மனிலம் பித்த மதிற்சிலேற் பனமுஞ் சேர்ந்தே 45

## சிலேற்பன தேகத்தினியல்பு

சேற்பன குணமே செப்பிற் சிவப்புமெய் மனஞ்சிக் கென்றல்
ஏற்றுறும் பொய்கே ளாமை யேந்திழை யார்க்கின் பெய்தல்
மாற்றிய கனவில் நீரை மருவுதல் மகப்பே றுண்டால்
நேர்த்தியா யற்ப நீண்டு நிற்பதாங் குணத்தி னாலே 46

## வாதபித்தரூபம்—தொழில்

ஆதியாம் வாத பித்தத் தடைந்திடும் ரூபம் வைத்த
தாதியாம் யாக்கை மீதி லதிகமாய்க் கூறல் தானும்
ஆதியாந் தொழிலே தென்னி லதிநடை சேட்டை முட்டும்
ஆதியாம் புளிப்புத் தித்திப் பழற்சியூண் சூட்டோ டூட்டும் 47

ஊடிய வாத பித்தத் துறுதியா லிளைத்த மேனி
நீடிய புத்தி வேருய் நினைவுருத் தினமுந் துஞ்சும்
கூடிய நடையே யற்பங் கூர்த்தவாய் தடித்து நாளும்
நாடிய வுரைசத் தத்தோ டுயர்ந்திட நவில்வ தாகும் 48

ஆதியாம் வாத பித்தத் தடைந்திடுங் குணத்தா லாகும்
நீதியாம் புத்தி வித்தை நிகரிலாக் கொடைசொற் பாடல்
பேதியாத் துணிபு வெற்றி பிறிவிலாப் படைகாண் வேட்கை
வேதியா வற்ப கோட்டி மிகைபடப் படைத்த வார்த்தை 49

## வாதசேற்பனரூபம்—தொழில்

வாதுறு சுணங்கள் சம்பு மருவுமொட் டகம்போ லோசை
மீதுறும் வாத பித்த மேவிய குணத்தின் செய்கை
தாதுறு மனில மையிற் சார்ந்திடும் ரூபங் கூறிற்
போதுறு மற்ப சூடு பொருந்திட வளரு மேனி 50

## வாதசேற்பனகோபம்

மேனியாம் வாத சேற்ப மேவிய குணத்தைக் கூறில்
மேனியி லற்ப விந்து விளைவுநித் திரையு மற்பம்
மேனியாங் கோப மாகின் மிகுதித்திப் பாகும் வெப்பாம்
மேனியாங் கோபஞ் சற்றே விரவுவாய் தடித்துக் காணும் 51

## வாதசேற்பன சரீரஇயல்பு

காற்றுறு கபத்தைச் சேர்ந்த காரிய மினிது கூறின்
நாற்றிசை புகழுண் டாகு நயனமு முருட்சி வெம்மை
தோற்றிய விமையு ரோமந் துளக்கற வரைக்கண் டுஞ்சும்
ஏற்றிடு மழகா மேனி யிளைக்குமே யெவருங் காண 52

காலையுற் றதனு லின்பங் கலந்தசே லற்ப மாகும்
சோலையிற் றிருவை நோக்கிற் சூழ்பெரும்வளமாய்த் தோன்றும்
வேலையிற் படையை வெல்லும் வீரமாங் கழுகு காக்கை
மாலையிற் குரல்போல் வார்த்தை வழுத்துமூ ளிகலலென்ன 53

## பித்தவாதரூபம்—தொழில்

எண்ணிய வியோம மாதி யெழுந்தவைம் பூதம் போல
நண்ணிப வுாயு வின்க ணலந்தரு வன்னி யுண்டாம்
தண்ணிபல் பித்தம் வீருய்த் தனித்தெழுங் காற்ரெ டொன்ருய்
நுண்ணிப வன்னி தானே நுவலுறு பித்த மாகும் 54

ஒருமையாய்ப் பித்தங் காற்ருே டொன்றிய ரூபங் கூறில்
பெருமையா முடலே வற்றிப் பெறுங்கழல் வெளுப்பா மிக்க
கருமையா முரோம மெல்லாங் கலந்தசெவ் வண்ண மாகும்
இருமையாந் தொழிலே தென்னி லெழுப்பிடும் பசிதா கத்தை 55

## பித்தவாத கோபம்

தாகமாம் பித்தங் காலுந் தழுவியே கோப மாகில்
மோகமாஞ் சுரமுண் டாகு முனிவுறச் சலிக்கும் புத்தி
வேகமாங் கைப்போ டுண்ணும் விரகுறு சீதம் வேண்டும்
போகமாந் தொழிலே யுண்ணும் புயாசலம் பெலனு மன்னும் 56

## பித்தவாத சரீர இயல்பு

மன்னிய பித்த வாதத் தடைந்திடுங் குணத்தால் வாய்ப்பத்
துன்னிய சூர ஞகுஞ் சுசிகுளிர் தலத்தின் மேவும்
பன்னிய புகழ்ச்சி தேடும் பகர்முகங் கைகால் வற்றும்
உன்னிய கணெக்கான் மீதே யொளிசிவப் பதிக மாகும் 57

ஆயுமத் தியானம் போக மதிகமாங் கனவிற் காற்ருய்த்
தேயுவென் றிடுமெப் போதுஞ் செய்கையாய் மருவக் காணும்
தோயுமே வெயர்வ ரும்பத் துர்க்கெந்த முண்டாம் பித்தால்
வாதமே யடைத லாலே வாரிபோ லொலிக்கும் வார்த்தை 58

## பித்தசிலேற்பன ரூபம்–தொழில்

வாசமாஞ் சேற்ப னந்தான் மருவிய ரூபங் கூறில்
நேசமா முடலே வெள்ளை நிறஞ்சிவப் படையு நீண்ட
கேசமாம் வெம்மை துன்னுங் கிளராகஞ் செம்மை யாகும்
பாசமாந் தொழிலே தென்னிற் பரவிய பசியா மன்னே 59

மற்றுமே துவர்ப்புக் கைப்புத் தித்திப்பு வாய்ப்ப வுண்ணும்
முற்றுமே பித்தங் கோழை மூச்சுமுச் சுரமுண் டாகிப்
பற்றுமே விக்கல் சத்தி பலபல விதநோய் தாகம்
சற்றுமே தரியா தென்றுந் தனிப்பெருங் கபமே கொள்ள 60

## பித்தசிலேற்பன சரீரத்தினியல்பு

கொண்டிடு பித்தங் கோழை யுடனுறு குணத்தின் செய்கை
கண்டிடு மாண்மை சுரங் கடும்பசி காள வண்ணம்
உண்டிடுங் குளிர்மை சாரு முவந்தடைந் தவரைக் காக்கும்
விண்டிடுங் களவு மச்சம் விரகுறப் புணரு மெச்சே 61

மெச்சிய மதியை மாதர் மேலுறு தயவை யின்பைப்
பச்சிய தெளிவைப் பண்பைப் பகையை நீக்குதலை யீவை
உச்சித மொழியை நாளு முயர்நிதித் தேட்டை வாசப்
பிச்சிநன் மலரைச் சாந்தைப் பிரிந்திடார் பித்தை யெய்தி 62

எழுந்திடு மிருகம் பூளை யிசைக்குயி லென்னப் பேசும்
கொழுந்திடும் பலாசைக் காற்றைக் கோங்குவெங் கதிரைக் கங்குல்
அழுந்திடுங் கனவிற் காணு மாகமா காய மேறி
விழுந்திடில் விழிக்குந் துஞ்சு மிகவுற விதைமேற் கொண்டே 63

கொடுங்கன லொளியில் வீறுங் கோபத்தீ மனுவி லின்பம்
கடுங்கனல் துக்கங் கோடை காலங்கண் டுஞ்சு மெய்யிற்
தொடுங்களி களபம் பூசுஞ் சந்தனம் சுகந்தந் தேடும்
நெடுங்கனற் பித்த மையை நீங்கிடாக் குணத்தி னாலே 64

## சிலேற்பனவாதரூபம்—தொழில்

ஆர்ந்திடு கோழை வாதத் தடைதலா லுருவங் கூறில்
சேர்ந்திடக் கான்ற சென்னல் திகழ்நிற மாகு மேனி
கூர்ந்திடு மற்ப வன்னி கொள்வதாந் தொழிலே தென்னில்
சார்ந்திடு சுவையோ டன்னஞ் சமைத்தசூ டெய்த வுண்ணும் 65

## சிலேற்பனவாத கோபம்

உண்டியிற் றுவர்ப்புங் கைப்பு முரம்பெறப் புசிக்கு மற்பம்
பண்டையிற் கோழை வாதம் பகைத்திடி லுடலம் வேர்ப்பாம்
மிண்டிய குளிர்சு வாசம் விளைந்திரைப் புண்டா மந்நாள்
அண்டியே வரத்துக் காட்டு மதிகுண பேதங் காட்டும் 66

## சிலேற்பனவாத சரீரத்தினியல்பு

காட்டிடுங் கபம்வா தத்தைக் கலந்திடு செயற்கை யாவும்
நாட்டிய சினேகம் புத்தி நனிபொறை நெறியா சாரம்
பாட்டிய லறிவு பண்பாம் பருத்தெழு மார்பு நெற்றி
ஓட்டிய கண்கள் நீண்டங் குருண்டகன் றெய்தும் போதாய் 67

போதெழ மலர்ந்த கண்கள் பொருங்கடை சிவந்து தோன்றும்
சூதெனக் குவிந்து விம்முந் துணைமுலை மாதர் கோட்டி
ஈதெனக் காம பாணத் திசைந்ததா மரையைக் காட்டித்
தீதினன் மொழியா முன்னஞ் சேர்ந்திடு குறிப்புங் காட்டும் 68

கானுறு மத்த யானைபோல் நடையுங் கருங்கடல் பேரிகை மற்ற
வானுறு மெழிலி யெனநிகர் மொழியும் வளர்தரு தூலமாமெய்யும்
தேனுறு மாதர்தெரிவையர் திறமுந்திகழ் பிரமாணமுந் தவமும்
கோனுறு மதியுங்கொடை தடைபடா தகுணமுமாங் கோழை
மாருதத்தால்

மால்வரு பிறவி மனைவியை வெறுக்கு மருவிய கனவினிற்சிங்கம்
சூல்வரு மேகம் பிரமணி காமன் சுரூபமும் விழியுறக் காணும்
மேல்வருங்கருமமுரைத்துமுள்ளொடுக்குமேவியமாயையைவிடுத்தும்
கால்வருயோகம்விளை த்துமின்பெய்துங் கபமுடன் கூடியகாற்றால்

## சிலேற்பன பித்தரூபம்—தொழில்

காமமாங் கபமே பித்திற் கலந்திடும் ரூபங் கூறில்
ஏமமா மலர்செங் கோரோ சனை நிற மெய்து மேனி
தூமமாங் கனல்போல்வெப்புத் தோன்றிடுந் தொழிலே தென்னில்
நாமமா மிரசங் கைப்புச் சினப்புமேன் மூச்சுக் கோழை 71

............................................................

............................................................

சுரம்பெறு மழற்சி வீக்கந் தோன்றிடுந் துவர்ப்புக் கைப்புக்
கரம்பெறு சூட்டோ டன்னங் கலந்துண வுறவாஞ் சிக்கும் 72

## சிலேற்பன பித்த சரீரத்தினியல்பு

சிக்குறு கபமே பித்திற் சேர்ந்திடுங் குணத்தின் செய்கை
தொக்குறு கவா. யென்பு தோன்றிடும் பெரிதாய்த் தோன்றும்
அக்குறு தசைந ரம்பங் கதிகமா யகன்ற மார்பாம்
இக்குறு மொழியார் மோக மெய்துசெங் கண்க ளாமால் 73

ஆயுறு புசிப்புக் கோப மற்பமா யழுகை புத்தி
மாசுறு துக்க மான மகிழ்ச்சிமெய் யொடுக்கம் யோகம்
தேசுறு மழகு செல்வந் திகழ்புயம் பெருத்க சாதி
பேசுறு பொறுமை வார்த்தை பெற்றதாம் பித்தை யண்டி 74

அளிதரு கரும மீதி லன்புகெம் பீர மன்றிக்
களிதரு கொடையா சாரங் கருதுறு சினேக மோகம்
ஒளிதரு மசதி மந்த னுடனுப கார முண்மை
தெளிதரு மறிவு ஞானஞ் சேற்றும பித்தத் துண்டாம் 75

உதித்திடு மெழிலி பேரி யுத்திகொ ளரிபோற் சொல்லாம்
கதித்திடு நாக மென்ன நடக்குமே நெஞ்சிற் பற்றிப்
பதித்திடும் வயிர மெந்தப பகையினு மின்ப மெய்தும்
மதித்திடு கபத்திற் பித்த மருவிய குணத்தி னாலே 76

ஆனசொற் பனத்தி ஞதி யாதியோ டஞதி யாகி
ஆனநற் புலவர் மேகம் வருணனிந் திரனே டெண்மர்
ஞானமே கருடன் பட்சி நனிசலப் புட்கள் யானை
ஈனமுற் றிடுசிங் கங்சோ விடமைபித் தத்தாற் காணும் 77

## முப்பிணி

காயமுற்ற காற்றிஞற் கதித்தெழுந்த பித்தமும்
தோயமுற்ற தானமெய் துடர்ந்தெழுந்த கோழையும்
நேயமுற்ற தொன்றிரண்டு நெற்பறப் பகைத்துயர்
ஞாயமுற்ற காலன் முன்னர் மண்ணைவிட்டு நண்ணுமே 78

அகத்திலுற்ற காற்றினை யவித்தெழுப்பு மக்கினி
முகத்திலுற்ற விந்துவை முளித்திடா தமைத்திடும்
பகத்திலுற்ற முத்தினைப் பரப்பிமெய் யழித்திடும்
சகத்திலீது கண்டவர் தனித்தறிவ துண்மையே 79

உண்மையான வாயுவு முகந்தெழுந்த பித்தமும்
வெண்மையான கோழையும் விளைந்துகூடி விந்துவாம்
பெண்மையான யோனிவாய்ப் பிறப்படுத்து வாதமே
வண்மையான கோழையை வழக்கிவீழ்த்து மாந்தரே 80

மையுறு மாயை கூடி மறைப்பமண் ணிடையே வீழச்
செய்யுறும் வாதத் தாலே சேற்பனந் தள்ளும்போது
மெய்யுறு வருத்த மெல்லாம் விளம்புவ தறிந்தே நீவிர்
ஐயுறு தொழிலி லுன்னி யடைத்தது பகர லாமே 81

## முப்பிணியினுட்சி

பகருமுப் பிணிக டாமும் பரவிய வயது நூறு
மிகவுமுக் கூற தாக விரும்பியே யாளுஞ் செய்கை
அகமுறு கபமே முன்ன ரதன்பின்னர் மருவும் பித்தம்
அகமுறு மதன்பின் ஞகு மனிலமே நிற்கு மேலாய் 82

மேலுறு கூறுக் காண்டு விளம்பிலா றைந்து மூன்று
மாலுறு மாத நான்கு மருவுசேற் பனத்தின் கூறும்
கோலுறு மதனுள் ளாண்டீ ரைந்தொடு கூடவொன்றும்
காலுறு நாலெண் ணைந்து கருதிய கபமே யாளும் 83

ஆண்டிடு மிரண்டாங் கூறி லதிகரித் தேறிப் பித்தம்
தாண்டிடு மூன்ருங் கூறிற் றணித்துமா ருதமே பொங்கில்
மீண்டிடும் பித்தக் கூறில் விரும்புமுற் கூறே பித்தம்
தீண்டிரண் டாங்கூ றையுந் திகழ்வாதக் கூறு மூன்ரும் 84

கூறிய வனிலங் கூறிற் குலவுமுற் கூறும் வாதம்
மீறிய விரண்டாங் கூறில் மிகுத்தெழும் பித்தந் தானே
ஊறிடு மூன்றுங் கூறி லுளத்திடுங் கபமே மிக்காய்
ஈறுசெய் திடுமென் றைய னியம்பிய வாறு தானே 85

தானவை புசிக்குங் காலந் தான்பகை யாகி மற்றும்
கானமந் நேர மாருங் கடிகையிற் பரவி நாளும்
தானதிற் கோளுங் கூடிற் றரித்திடா தாவி பூவில்
ஊனது கிடப்பவானி னுயர்வழிச் செல்லு மன்றே 86

அன்றுறு நேரங் கால மவையவை புசிப்புக்கன்றி
நின்றுறு மற்றென் றெய்தி நேர்படப் பொசிப்ப தாகில்
நன்றுறு முற்ற நோய்கள் நாடியே யதனுட் சேரில்
வென்றுறு மருந்து தானே வினையற மாற்று மின்பாய் 87

இயம்புமித் தகைமை மூன்று மிடர்புரி வகையே தென்னில்
நயம்புகாச் சுவைக ளாலே நாடிய வகைக ளாகும்
வியன்பெற வொன்றி னோடே மேவியங் கொன்று கூடில்
சயம்பெறு மருந்தினாலே தாழ்ந்தது தீருந்தானே 88

தழைத்திடு முடனே யொன்றுக் தனித்தெழுந் துற்றநோய்கள்
பிழைத்திடு மிரண்டி னேய்கள் பேசினுட் சென்று மாறும்
வளைத்திடு மூன்றுங் கூடி வளர்ந்தநோ யாக்கை தன்னை
விழுத்திடு மருந்தைச் சீறி வென்றிடுங் காணத் தானே 89

நேர்பெறு வினையோர் மூன்று நீடிநித் திலத்தோ டொன்றிப்
பேர்பெறு முடிகீழாகப் பெருகவே வருத்தஞ் செய்யும்
ஏர்பெறு காய மொன்று மேவுதோ லிலையா மைந்தும்
வார்பெறு முலையாய் கோப மாற்றுமே யாக்கை மண்ணில் 90

## முப்பிணிக்கும் மூன்று மருந்து

மதுவுறும் புளிப்பால் வாத மாற்றிடு மதனை நெல்லி
கருவுறுங் கைப்பாற் பித்தங் கழன்றிடும் புடோலைக் கொள்ளில்
பெருகுதித் திப்பா லையின் பேதக மாற்றுஞ் செந்தேன்
அருவினை மூன்றின் கோப மமர்ந்திடு மகலு மன்றே 91

## உவாந்திமுதலியன

அணிதருஞ் சித்த வேதத் தறைந்திடு மருந்தி னாலே
பிணிதரும் வியாதி மூன்றும் பெருகிய கோபந் தீரத்
தணிதரு முவாந்தி பேதி நசியமஞ் சனஞ்செய் யென்றே
மணிதருஞ் சோதி மாதுக் குரைத்தனர் வகுப்பாய் நித்தர் 92

நிலமிசை மாந்தர் நோய்கள் நீங்கிடத் திங்க ளொன்றில்
சலமற வுவாந்தி செய்யத் தக்கதாந் துலாமா தத்தில்
மலமறப் பேதி செய்க மாதமொன் றினிலே நையம்
பலமுறை மூன்று நாளஞ் சனமிடப் பகர்ந்த தாமால் 93

## நாலுதொழில்களின் பயன்

ஆதிமுப் பிணிக டீர வமைத்திடுந் தொழில்க ளுன்கிற்
பேதிக்கத் தாழும் வாதம் பித்தஞ்சத் திக்கத் தாழும்
ஓதிய நசியத் தாலே யுயர்கபந் தாழு நிற்க
நீதியஞ் சனத்தான் மிக்க நிகரிலா வொளியாங் கண்ணே 94

ஆடகப் பொதுவி லாடு மையனை யன்ப ருள்ளத்
தேடகப் போது நீங்கா விறைவனை யிமய வல்லி
யோடகத் திருத்தி மூன்று பிணிகளா லுற்ற மெய்யின்
ஊடகப் பிணிக டீர வுரைத்தனர் மருந்து வாய்ப்ப 95

## நேர்வாளப் பேதி

வாளநஞ் சதனைப் போக்கி மருவுநேர் * நீதந் தன்னில்
மீளவுஞ் சுத்தி செய்து மிளகுசுக் கதனோ் கூட்டி
நாளதொன் றரைத்துக் குன்றி யளவினி லுண்டை செய்து
கோளற வெண்ணெய் சுக்கிற் கொள்ளமா ருதர்க்காஞ் சுத்தி 96

## சிவதை

சுத்தமாம் பாலில் வெந்த சிவதைவேர்த் தோலைச் சீவி
ஒத்தரோ சனிகற் றாழை யுயர்கடு தான்றி நெல்லி
சித்தமா யிடித்த ரைத்துச் சேர்வெரு கடியே போதப்
பித்தமுந் தாழ வெந்நீர் தனிலிடப் பேதி யாமே 97

## கடுக்காய்

ஐந்ததாங் கடுக்காய் தட்டி யானகோ சலநீர் நாழி
முந்தநாள் தன்னி லிட்டு முதிரவே யுரியாப் காய்ச்சி
அந்தமா யிறுத்தங் கோரேழ் வடிவடித் ததிலே ரண்டம்
தந்ததாங் கழஞ்சே யெண்ணெய் தானுணத் தாழும் † வல்லை 98

## பேதிச் சரக்குகள்

திரிபலை யவுரி கள்ளி தேடுமேய்க் குமட்டி கொன்றை
கரியகாக் கணவன் வெள்ளைக் காக்கணம் வெள்ளிலோத்தி
பிரமதண் டாதி யாகப் பேசிய விவற்றி னுலும்
வருமுறை பேதி கொள்ள வகுத்தனர் முனிவரம்மா 99

---

* நீதம்-வெண்ணெய் † வல்லை-வலியகபம்

## மாற்று

மண்டுநேர் வாளப் பேதி மாற்றிடு முருகஞ் சாறே
டுண்டுமோர் குடிக்க மாறு முறுசிவ தைப்பே திக்கு
விண்டுவெந் நீர்கு டிக்கக் குளிக்கமெல் லியலே மாறும்
மிண்டிய கடுக்காய்ப் பேதி வினவிலன் றிரவில் மாறும் 100

## உணவுகொள்ள

இரவிவா னுச்ச மாகி லுண்பதற் கிசைவா முண்டி
விரவிய வெந்நீர் தன்னில் விரும்பியே குளித்து மிக்க
துரவிய வாத பித்த சேற்பனத் துறவா முண்டி
பரவிய பசிக்குத் தக்க பாரணஞ் செய்யப் பாங்காம் 101

பாரணம் பண்ணிப் பின்னர் பகரிர வின்க ணுண்டி
சீரண முறச்சுக் * குண்டி சீரகங் கழஞ்சு நான்கு
பூரண கும்பந் தண்ணீ ரிருநாழி புகட்டிக் காய்ந்த
தாரணப் படியே யெட்டொன் றுன நீர் குடிக்க வேண்டும் 102

## பகைநாள்

வண்மையாம் பரணி பாம்பு மகவிசா கமுமுப் பூரம்
நண்ணுகார்த் திகைநன் மூல நவமிகீழ் நோக்கு நாளாம்
திண்மைசேர் பகைநாள் சென்மத் திரயமென் றுரைக்கு நாளில்
பெண்மையா ரணங்கே சற்றும் பிணிமருந் துண்க லாகா 103

## உவாந்தி

ஆறுதிங் களிலோர் நாளே யானமுப் பிணிக்கும் வாந்தி
பேறுசேர் மருந்தி னாலே பெரிதுறப் பேணிப் பேணி
மாறுசெய் திடுநாட் கால மருவிய பெலனு நோக்கி
வீறுநற் குணமுண் டாக மெய்வயித் தியனர் செய்கை 104

## வாத உவாந்தி

செம்பரங் கொண்ட ராவிச் சேர்பொடி கழஞ்சி ரண்டு
சம்புவின் பட்டைச் சாற்றிற் றகுதின மூன்று மூறி
அம்பற வுலர்த்திப் பின்ன ரதனிறை தூள்க ழஞ்சு
கொம்புற விருபத் தோர்நாட் குழைத்தரைத் தெருக்கம் பாலில் 105

பாலரு தரைத்தங் கோர்நாட் பார்க்கவே யுருட்டிக் காய்ந்த
தேலவே தேவ தாளி கூட்டித்தூ ளிட்டு வைத்தே
ஆலநேர் விழியீர் வாத தேகத்துக் கான வாந்தி
சாலவே யெடுக்குங் காடி தனிலுரைத் திடவே மிக்காம் 106

---

* உண்டி–மிளகு

## பித்தவாந்தி-கபவாந்தி

மிக்கசம் பீரச் சாற்றில் வெவ்விய பித்தத் தோர்க்காம்
தக்கிய வனுபா னத்தாற் றகுகபத் தவர்க்கே வாந்தி
அக்கண மெடுக்குக் கண்ட தறிந்தவர் பெலத்துக் கேற்ப
ஒக்கவக் கால தேச முணர்ந்துரைப் படியே யீய்வாய் 107

## உவாந்திக்குரியன

அன்றியுந் தேவ தாளி யரியபேய்ச் சுரைகொம் மட்டி
நன்றிசேர் பேய்ப்பி சுக்கு நல்லபேய்ப் புடோல்வ சம்பு
வென்றிடு பெருங்கு ரும்பை மிகுமருக் காரை வெட்பால்
தின்றிடு கடுகு முப்புஞ் செய்விக்கு முவாந்தி மன்னே 108

## மாற்று

வாய்ந்திடு மருந்தால் வாந்தி யெடுப்பது மிகவே யாகில்
ஆய்ந்தசீ ரகஞ்சேர் நெல்லி யாவின்பா லுடனே நக்கத்
தோய்ந்த சர்க்கரையே கூட்டிச் செவ்விள நீரிற் கொள்ளக்
காய்ந்திடு முருங்கைச் சாற்றிற் கடிதுறச் செமிக்கும் வாந்தி 109

## பித்தவாந்தி

வாய்ந்திடு பித்தந் தாழ வளரெலு மிச்சஞ் சாற்றை
ஏந்தியே செம்பில் விட்டங் கேற்கவே முதல்நாள் வைத்துக்
காந்திய துரிசு சுட்டுக் காற்கழஞ் சச்சாற் றேடே
போந்தது கொடுக்க நெஞ்சிற் புகுந்திரா தெடுக்கு மெய்ப்பாய் 110

## மாற்று

மெல்லவுக் காரஞ் செய்யா தெடுப்பது மிகுதி யாகில்
நெல்லிசந் தனங்கற் றுழை நேரதா நெய்யிற் பெய்தே
சொல்லிய சிரமார் புந்தி துடையுள்ளங் காலிற் பூசி
வல்லிய கரத்தாற் றேய்க்க வாந்தியே யெழாம லின்பாம் 111

## கபவாந்தி

இந்துப்புத் தன்னின் மூன்று முறையெருக் கலம்பா லேற்றி
அந்தித்த வாறே செப்பி லவைநிழ லுலர்த்தாய் வைத்து
வெந்துற்ற நீரு ழக்கில் விரைகழஞ் சிந்துப் பிட்டு
முந்திச்சொற் கபத்தோர் கொள்ள முன்னெழும் வாந்திகைப்பாய்

## மாற்று

கன்றிய கபத்தோர் சத்தி கனமுற வெடுக்கு மாகில்
குன்றியி லிலையைக் கொய்து குனித்தசர்க் கரையே கூட்டி
மென்றிறக் கிடமுன் வாந்தி மேவிடா தடங்குந் தின்றால்
நின்றுடற் கொண்ட நோயு நீங்கிடு மிமைப்பிற் பண்பாய் 113

## பத்தியம்

பழையநோய் வருத்தா வண்ணம் பகர்ந்தவாந் திக்கே பத்தியம்
விழைவுசேர் வெந்நீர் தன்னால் விரும்பியே குளித்துப் பின்பு
குழையவே வடித்த வன்னங் குளிர்தரு மிளகு நீரும்
கழையவே காய்ந்த பானெய் கலந்துண வினிய தாமே 114

## வாந்திசெய்ய நாள்

கொண்டிடு மவிட்ட மோணங் குலவுரோ கணிபூ சங்கார்
கண்டநாட் சதய மற்றுங் கலந்தவுத் திரங்கண் மூன்றும்
விண்டுமே னேக்கு நாளா மொன்பதும் விலக்க தாகும்
வண்டுசேர் குழலா யென்றும் மருவுவாந் திக்கு மன்னே 115

## நசியம்—வாதத்தோர்க்கு

மறிகடற் கடுவுண் டார்தம் வாய்மைமா ருதத்தோர்க் கான
திரிகடு கழஞ்சு மூன்று சேர்த்துழக் கெண்ணெய் தன்னில்
பிறிபடக் கதிரோன் முன்னே பெய்துவைத் தெடுத்து நையம்
நெறிபட நாசிக்குள்ளே துளிவிட நேர்மை யாகும் 116

## பித்தத்தோர்க்கு

ஆனதோர் நகியங் கேண்மி னுவினெய் யுழக்கிற் கற்கம்
ஊனமில் மிளகு சுக்குத் திப்பிலி யுடனுெவ் வொன்ருய்த்
தானது பொடிசெய் தாதி தன் முன்வைத் தெடுத்து நையம்
கானநற் பித்தந் தாழக் கருதுறு துளியைக் காட்டாய் 117

## சேற்பனத்தோர்க்கு

கட்டிய கபமே தாழக் கருதுவெள் ளாட்டு நெய்யில்
ஒட்டிய மிளகு சுக்குத் திப்பிலி யுடனேர் கூட்டி
மட்டறிந் திரவி முன்னே வைத்தெடுக் திருமூன் ருக
விட்டவத் துளியி னுலே விழியொளி தருமே வித்தாய் 118

## மாற்று

விடுத்திடு நசியத் தாலே மேவுநா சியினிற் கோழை
அடுத்தடுத் திழியச் சிந்தி யானதோ ரசடு காய்ந்த
தெடுத்தெடுத் தேகமொற்றி யிசைந்துபின் னிளவெந் நீர்வாய்
மடுத்தடுத் தன்னீர் ரூற்றி மருவும்வெந் நீர்கு ளிப்பாய் 119

குளித்தபி னன்னத் தோடு கொள்வது மிளகு நீரே
புளித்தல்தித் தித்தல் கைத்தல் பொருந்திட வருந்தல் போகம்
களித்தல்கள் ளுண்டல் சீறல் கருத்துவே றுறவே நெஞ்சை
அளித்தல்வெங் காம முற்று மகற்றிட மிகவும் பண்பாம் 120

## நசியத்துக்குரிய நாள்

புண்டிதம் பண்ணப் பாங்காம் படருமொன் பானு ளாகக்
கண்டிடு மனுடஞ் சோதி கலைமதி யத்தங் கேட்டை
முண்டிரே பதிது ரங்கம் வளருஞ்சித் திரைநல் லோர்கள்
எண்டகு புனர்பூ சத்தி லிசைந்தநா ளறிந்து செய்வாய் 121

## அஞ்சனம்

செய்திடு நசிய மற்றுஞ் சிறந்திடு படர்நா டன்னில்
மெய்யறு நோயுந் தீரும விரும்பிய மருந்தும் வாய்க்கும்
உய்திடு கண்ணுக் கான வொளிதரு மடைவு கூறில்
எய்துமுப் பிணியுந் தீர விசைந்ததிப் பிலியே யாதி 122

## வாதத்தோர்க்கு அஞ்சனம்

திப்பிலி கழஞ்சிற் பாதி சிறந்திடு மிளகு தானென்
றெப்பவேர்க் கொம்பி ரண்டு கழஞ்சுமே பொன்ருய்க் கூட்டித்
தப்பிலா மலகச் சாற்றிற் ருனரைத் துலர்ந்த வுண்டை
அப்பினிற் காடி தன்னி லுரைத்திட வனிலற் கன்பாம் 123

அனிலமுற் றெழுந்து கண்ணி லடைந்திடு நோயு மற்றும்
பனிகதி ரவன்மு னில்லாப் பண்பென மாற்று மிப்பால்
தனிவளர் பித்தத் தோர்க்குந் தகுமதில் வருங்கண் ணேய்க்கும்
நனிபெறு பாகஞ் செய்யு மஞ்சன நவின்ருர் நாதர் 124

## பித்தத்தோர்க்கு அஞ்சனம்

நாளிகொத் திளநீர் நாழி நானுழி யதனிற் கற்கம்
வாளிநேர் கடுக்காய் தான்றி வளர்மர மஞ்சள் நெல்லி
நீளிலா மிச்சம் வேலி நிறைமது ரம்மோ ரொன்று
கேளிலா தைங்க ழஞ்சிட் டிடித்தரைத் திளநீர் கொண்டே 125

கொண்டதிற் கரைத்து நான்கி லொன்றதாய்க் குறுகக் காயக்
கண்டபி னிறக்கிச் சீலை வடியிட்டுக் காய்ந்த வோதை
அண்டிடும் பதத்திற் பாக மானபின் னிறக்கி யாற்றி
விண்டதி * லிந்து விந்துப் போரொரு கழஞ்சு மேவ 126

மேவியங் கரைத்துத் தேனுல் வெண்கலச் சிமிழில் வைத்துக்
காவியங் கண்ணி னுளே கருதிடக் கண்ணில் முந்தத்
தாவியங் கிடவே பித்தந் தாழ்ந்திடு மதனுற் கண்ணில்
ஏவிய கபமு நீங்கி யிருளுமோ வடையா தன்றே 127

* இந்து-பச்சைக்கர்ப்பூரம்

அடைவுறு * கரஞ்ச பீச மானவா மலகச் சாற்றிற்
திடமுற வரைத்து மற்றத் தினத்தினி லாற்றிப் பூசி
இடமுறு சாற்ருல் யாம மரைத்தித மான வுண்டை
உடன் முலேப் பாலி லிட்டா லொளிக்குறு மொளியாங்கண்ணும்

கண்ணின்முத் தினத்துக் கோர்நாட் கருதுமஞ் சனமா லேக்கே
எண்ணுமுர்க் கத்திற் பாதி யிரண்டதாய்ப் பகிரச் செய்தே
நண்ணவிட் டிடக்கண் முந்தி நலம்பெற விட்டு வேகம்
பண்ணுதல் வெந்நீர் தன்ருற் பரிவுடன் கழுவல் செய்க 129

## காலமறியா

செய்யநற் பேதி தானுஞ் செய்வது கால மேற்க
உய்யமுற் கார மீதுக் குகந்ததோர் யாமத் துள்ளாம்
பெய்யுமா நசியந் தானும் பெறுபதி னேழுக் குள்ளாம்
மெய்யுறு மருந்தே கண்ணில் மிகுத்திடி லதிக மிக்காம் 130

மிக்கவா டெருது காலம் விசாகமா மிதுன நண்டோ
டொக்கவே துலாந்தேள் மாதங் காலேயா முயர்வில் லோடு
தக்கதாங் கும்ப மீன மேதகு மத்தி யானம்
பக்கமாந் திரியே கன்னல் பதினெட்டா மஞ்ச னங்கள் 131

களவுறு நரம்பு கொத்தல் கருவிக ளாட்டல் காலே
உளவுறு கொம்பு வைத்தே யுதிரங்கொண் மத்தி யானம்
அளவுறு மட்டை வீட்டே யாற்றுத லந்திக் காலம்
தளேவுறு நகத்தாய் செய்யத் தகுவதென் றுரைக்கும் பெம்மான்

## எண்ணெய்க் குணமறிய

எய்திடு மெண்ணெய் தன்ரு லெழுந்திடுங் குணங்கள் செப்பின்
ஐதிகழ் சிரத்தில் மத்தித் திடினுட னடிக்கே மேவும்
பெய்திரு வடியிற் றேய்க்கிற் பெருகிரு கண்ணிற் சேரும்
உய்திடும் விழியில் வார்க்கிற் சோத்திர துள்ளா யோங்கும் 133

ஓங்கிய சிரத்தி லெண்ணெ யுடலுறு பிணியை மாற்றும்
தாங்கிய பதத்தி லெண்ணெய் தடமுறு விழிநோய் தீர்க்கும்
ஆங்கிரு கண்ணி லெண்ணெ யழகிரு செவிநோய் தீர்க்கும்
பாங்கிரு காதி லெண்ணெய் பகர்சிர ரோகந் தீர்க்கும் 134

தீர்த்திடு மவிடம் பண்பாய்த் திருந்திய தயிலந் தானும்
ஆர்த்திடு முவமை யான வதிசய முரைக்குங் காலேக்
கூர்த்திடுஞ் சிரத்திற் றேய்க்கிற் குதித் திடும் பதத்திற் ருளில்
பார்த்துறத் தேய்க்கின் மண்டை கொண்டிடும் பார்வி ளங்க 135

* கரஞ்சபீசம்— புங்கம் விதை

வில்லொடு மகர மாத மிரண்டாகு மீனங் கும்பம்
சொல்லொரு கடிகை நன்ருந் துய்யவா டெருதோ டைந்தாம்
எல்லுயிர் மீன ஞெண்டு மெட்டினிற் கன்னி யாருய்
வல்லெறி மீன்கோல் தேளில் மாற்றுமப் பொழுதே யன்பாய் 136

## தண்ணீர்வகை

மாற்றிடு மெண்ணெய் போக மருவுவெந் நீரின் மூழ்க
வேற்றிடு நீரே யெல்லாம் விரைந்திடுந் தண்ணீர் செப்பில்
ஆற்றுநீர் பித்தர்க் காகு மனிலர்க்காங் கிணறே கேணி
சேற்றுமர்க் காகு மோடை சிறுகுளத் தல்லி நீரும் 137

அல்லிசெங் கழுநீர் கொட்டி யரவிந்த மதுபித் தர்க்காம்
வெல்லுறு சேற்ப னர்க்கு மிளகரி சனஞ்சீர் காயம்
சொல்லிய வாதத் தோர்க்குச் சுக்குவேம் பேலங் காயம்
மெல்லிய மிளகு நெல்லி வேம்புமஞ் செலுமிச் சாமே 138

## உப்புக்கொள்ள

மிக்கவா தர்க்காம் நித்தம் விரும்புகல் லுப்புத் தானும்
தக்கவெம் பித்தத் தோர்க்காஞ் சமுத்திர லவணந் தானும்
ஒக்குமே சேற்ப னத்தோர்க் குரைத்தவிந் துப்புத் தானும்
முக்கணர் விந்தோ டாதி முப்பிணிக் கிந்துப் பீடாம் 139

## புளிகொள்ள

ஈந்திடு வாதத் தோராண் டெய்திய புளியே யென்றும்
தீர்ந்திடும் பித்தத் தோர்க்குத் திநந்திய வெலுமிச் சென்றும்
கூர்ந்திடுஞ் சேற்பத் தோர்க்குக் கொறுக்கையு நெல்லிக் காயும்
ஓர்ந்தவிம மூவர்க் குந்தான் பழம்புளி யினிதா மென்றும் 140

## உணவுவகை

எள்ளோடு புராண சாலி யிறுங்குகோ தும்பை வெய்ய
கொள்ளுட னுளுந்து சானம குலவிய துவரை யேனல்
தெள்ளிய வெள்ளி லெண்ணெய் செய்யநெய் வெல்லங் கூட்டி
ஒள்ளிய வனிலர்க் காகு முரைவகைப் படிகள் செய்யே 141

வெண்ணெயின் விதங்கள் கூட்டி விளம்பிய முறையாய்ச் செய்க
நண்ணிய செந்நெல் லாலே நற்பொரி யவல்க ளாக்கி
உண்ணவே நன்ரு நெய்யை யுருக்கியே யமுது செய்யில்
திண்ணிய வயது நூறு சென்றுமங் கிளையா ரையா 142

ஐயுற வின்றி மிக்க வதிகமுஞ் சினேகத் தாலே
மெய்யுற வாமெந் நாளிம் வெள்ளரி வாழைக் காயும்
செய்யுறு முருங்கைப் பிஞ்சு சிறுவழு தலங்கா யுள்ளி
நெய்யுறப் பகுத்த துண்டு நிகரில்கத் தரியின் பிஞ்சே 143

பிஞ்சுறு பாகற் காயாம் பெரும்புடோ லவரைப் பிஞ்சு
மஞ்சுறு காரை சேமை வளரிளங் கீரைத் தண்டு
மிஞ்சுறு கருணைத் தண்டு வெள்ளுள்ளி வாழைப் பூவும்
நெஞ்சுறு கபத்தை மாற்று நீடுதூ துளைபின் காயும் 144

நீடுறு கண்டங் காலி நிறைமல ரெருக்குத் தாளி
கோடுற வளர்மாம் பிஞ்சு குலவிய பலாவின் பிஞ்சு
நாடுறு பூசி னிக்காய் நலம்பெறு கறிக ளாக்கிப்
பீடுறு மாநெய் யோடே பெரிதுணக் கபம்போ மன்றே 145

## வாத உடலினர்க்குரிய கறிவகை

செய்யகத் தரிக்காய் பாகல் சிறுவழு தலங்காய் நீற்றுத்
துய்யபூ சினியின் பிஞ்சு துவர்ப்பல முருங்கைப் பிஞ்சு
வெய்யநற் கருணை காட்டுக் கருணையுள் விதைமுற்றுமுன்
கொய்திடு மவரைப் பிஞ்சு மனிலர்க்காங் கறிகள் கொள்ளே 146

## சாறுவகை

கொண்டிடுஞ் சாறு கேண்மின் குறுநறுந் துழாய்மு ருங்கை
வண்டிலை மிக்க தூது வளையிலை பொன்னுங் காணி
தண்டிளங் கீரை பாகல் தக்காளி வற்றல் காரை
மிண்டுசாறடையு மெல்லாம் விளங்கிய வாதர்க் கின்பாம் 147

## கீரைவகை

இன்புறு நெருஞ்சி கோவை யிசைந்தமுக் கிரட்டை யப்பை
வன்புவே லிப்ப ருத்தி வளர்புளி மணித்தக் காளி
துன்பறு பயிரி கீரை சுரைமுசு முசுத்தை வேளை
முன்புறு குப்பை மேனி முதலிலைக் கறிவா தர்க்காம் 148

வாதத்தோர்க் கேற்ற வற்றல் வழுத்திடும் வண்மை கேண்மின்
போதவே பிரண்டை சுண்டைபொருந்து பேய்ப்புடோலேநெல்லி
நீதமா மணித்தக் காளி நிறைந்ததூ துளையே கோவை
ஓதல்செய் காயு லர்த்தி யுட்கொள்வார் பொரித்தே நித்தம் 149

நித்தமு மூறு காயாம் நீடிய கடுக்காய் தேற்றுன்
சித்தமுற் றிட்ட விஞ்சி சிறியநா ரத்தங் கச்சல்
மொத்தவிவ் விதங்க ளான கறிகளை விரும்பித் தின்ன
மெத்தநன் றுகும் வாதத மேம்படு சரீரத் தோர்க்கே 150

## பித்தஉடலினர்க்குரிய கறிவகை

சொல்லிய முருங்கைப் பிஞ்சு சூழ்ந்திடு மவரைப் பிஞ்சு
நல்லகத் தரியின் பிஞ்சு நாடிய புடோலின் பிஞ்சு
வல்லவா ழைக்கா யிஞ்சி வாழைப்பூ வாழைத் தண்டு
செல்லுமீ ருள்ளி வள்ளி சிறுகளாப் பீர்க்கு மாங்காய் 151

காயுறு வெள்ள ரிக்காய் கடியபூ சினிக்கா யின்னம்
ஆயுறு பயறு பாக லருமிதி பாக லாதி
நோயறு மகத்திப் பிஞ்சு நுவலுமா வரையின் பிஞ்சு
வேயுறு தோளா யெல்லாம் பித்தருக் கின்பம் நல்கும் 152

## சாறுவகை

கொடியுறு வசலே கொத்து வசலேதை வேளே முல்லே
படியுறு மகத்தி நீற்றுப் பூசினி பகர்மு சுக்கை
தொடியுறு கரத்தா யெல்லாந் துளிர்வகை சாறு கொள்ள
மடியறு பித்தர்க் கின்பாய் வழுத்தினர் கலேவல் லோரே 153

## கீரைவகை

பொன்னுங் காணி சிறுகீரை புகலு மப்பை முசுமுசுக்கை
மின்னே கோவை வல்லாரை மிக்க தூது சுறைபசளி
சொன்னேம் பாலே புளியாரை சூழ மிளகு தக்காளி
பொன்னுர் முசுட்டையகத்திவகைபொருந்தோரி தழின்கஞ்சமுடன்

கஞ்ச மணியின் றக்காளி கருதா வாரை புளிக்கீரை
விஞ்சுங் கீரை யினும்பலவாம் வேண்டிப் பித்தர்க் குவந்தகறி
மஞ்சேர் குழலாய் முனிவருரைப்படி யேவகுத்தோமா நிலத்தில்
பிஞ்சுந் துளிரும் பூவுமிவை பெரிது நன்ரும் பல்லோர்க்கும்

## ஊறுகாய்வகை

நலமா மிஞ்சி யெலுமிச்சை நாடுங் கொளுஞ்சி தமரத்தை
பலமா நெல்லி யுடன்றூது பகருங் கோவையுடன் கடுக்காய்
வலமாம் பித்த தேகிக்கு வகுத்தா ரூறு காய்வகைகள்
மலமா சறுக்கு முனிவரந்தப் படிநாம் வகுத்தோ மாநிலத்தே 156

## வற்றல்வகை

நிலத்தே சுண்டை தூதுவளே நேடு மணியின் றக்காளி
அலர்த்தா ரணியுங் குழலணங்கே யரிய கண்டங் காரியுடன்
வலத்தாம் முள்ளி வல்லாரை வகுத்த காய்கள் நெல்லிக்காய்
சொலத்தா முலர்த்திக் கறிகொள்ளச் சூழும் பித்தர்க் கின்பாமே 157

## கபஉடலினர்க்குரிய கறிவகை

இன்பந் தருதற் கானகறி யிசையுங் கபத்தோர்க் கியம்பிடுவன்
துன்பந் தீர்க்கு மத்திக்காய் சுரையின் பிஞ்சு மதன் றண்டும்
முன்பே சொன்ன விருபாகல் முதிரா மாவின் பிஞ்சுடனே
அன்பே செறியு மதிமுகத்தா யவரைப் பிஞ்சீ ருள்ளியுமே 158

ஆலம் பிஞ்சு கத்தரியி லதுவும் பிஞ்சு பூசினிக்காய்
மேலும் பீர்க்கம் பிஞ்சதுவும் விளம்பு முருங்கை பெருங்களா
கோல முருக்கிற் சிறுவரும்பு கொள்ளுங் கண்டங் கத்தரியின்
சீலம் பொருந்தும் பிஞ்சுவட்டுச் செறியும் பிஞ்சு தன்னுடனே 159

செப்பும் வள்ளிக் கிழங்கதுவுஞ் செறிமுள் ளங்கி பயற்றங்காய்
ஒப்பும் வாழைத் தண்டினுட னுறுபேய்ப் புடலி னரும்பிஞ்சும்
அப்புங் கயலும் வேலுமென வடரும் விழியீ ரிவைமுதலாய்ச்
செப்புங் கறிகள் கொளநன்றுஞ் சேருஞ் சாறு செப்புவனே 160

## சாறுவகை

அகத்தி யோமஞ் சிறுகுறிஞ்சி யதுவு மல்லி சதகுப்பை
சுகத்திற் குரிய வோமமுடன் சுக்குக் கடுகு துராய்தும்பை
அகத்திற் கினிய வெந்தயமு மரிய வேளை நிலவாகை
செகத்தி லிவைகள் சாறுவகை செப்புங் கபத்தோர்க் கினிதாமே

## கீரைவகை

முல்லை முசுட்டை வல்லாரை முன்னை முருங்கை முளைக்கீரை
நல்ல வேளை நாய்வேளை நாடு மாரை யிருகோவை
சொல்லு மிரண்டு புண்ணாக்கி சுக்குச் செம்பை பொற்காணி
வல்ல முசுக்கை பேய்ப்புடோல் மணித்தக் காளி யுடன்மணலி 162

குப்பை மேனி கொடிவசளை கூறு நெருஞ்சி சிறுபீளை
செப்பு நெய்தல் சிறுகளா சேருங் காரை சக்ரவர்த்தி
ஒப்பும் பண்ணை புளியாரை யுயர்ந்த பொன்னி ஞவாரை
அப்புங் காரா மணிகடலை யாதிக் கீரை கபத்தோர்க்காம் 163

## ஊறுகாய்வகை

அத்தி சுண்டை தூதுவளை யால்மாப் பாகல் பிஞ்சிவைகள்
சுத்த மஞ்சள் மிளகப்பை சொல்லு மரம்பை தனிற்றண்டும்
உற்ற கபத்தோர் தமக்கேற்ற வூறு காயாம் பாகம தாய்
நித்தங் கொள்ள வினிதென்றே நிகழ்த்து மாயுண் மறைதெளிந்தே

## வற்றல்வகை

அவரை கோவை தூதுவளை யத்தி முள்ளி நாரந்தை
தவறில் சுண்டை நெல்லியிவை தம்மிற் பிஞ்சு பேய்ப்புடோல்
இவரும் பிரண்டை தக்காளி யெண்ணுங் கண்டங் காரிவட்டு
நவைதீர் முள்ளிமெதுக் கிவைகளுலர்த் திலின் பாங்கபத்தோர்க்கே

## முக்குற்ற உடலினர்கட்கும் பத்தியத்திற்குரிய ஊறுகாய்வகை

நாடுங் களாக்காய் சுண்டைக்காய் நாரத் தெலுமிச் சுடனெல்லி
தேடுந் தூது நுணாவின் காய் தேற்று வின்காய் பாவட்டை
கூடுங் காயு முதலாகக் கொள்ளு மூறு காய்வகைகள்
பீடு தருமே பத்தியத்திற் பேசு மெல்லாத் தேகிகட்கும் 166

## கடுக்காய் ஊறுகாய் செய்யும் விதம்
(முவ்வகை உடலினர்கரும்)

பெரிதாங் கடுக்கா யொருநூறு பேணுங் சழுநீர் தனிலிட்டுச்
சரியாய் மூன்று நாட்சென்றுற் றுனே யெடுத்து மறுபடியும
திருவா ரணங்கே யிரண்டு முறை செய்திப் படியே யெடுகழுவி
அரியாய் விதையை நீக்கியிட்டே யடுப்பி லேற்றி மோரூற்றே 167

ஊற்றி யதனுட் கல்லுப்பு முடனே யிட்டு நீர்வற்றச்
சாற்று மடியிற் பற்ரு ரற் றுனே யிறக்கிச் சம்பிரத்தின்
ஏற்ற புளியு மளவாக விட்டே யேலஞ் சதகுப்பை
போற்று முலுவாச் சாதிக்காய் பொருந்துங் காய மிளகுடனே 168

சீர மிவைகள் வறுத்திடித்துச் சேர்த்து வெயிலில் நாண்மூன்று
சார வைத்துப் போற்றிடுகிற் றக்க வூறு காயாகும்
தேரு முணவிற் சேர்த்தருந்தச் செமிக்கும் வாயு பலநோவு
'பாறு மருந்திற் பத்தியமாம் பகரு மெல்லாத் தேகிகட்கும் 169

## முவ்வகை உடலினர்க்கு நீர்வகை

புல்லிய குளத்து நன்னீர் பொருந்திய பித்தர்க் காகும்
பல்லியல் குள நீர் வெப்பம் பாசிகள் வளர்கல் லோடை
சொல்லிய வனிலர்க் காகுஞ் சூழ்கபத் தோர்க்குக் கேணி
அல்லிய லளக மானே ய யுறு வேத வாய்மை 170

கேணிநீர் வெந்நீ ராகிற் கிளர்ந்தெழு பித்தம் போக்கும்
*வேணிநீர் வாதந் தீர்க்கும் விளம்பிய வெந்நீ ராகில்
நீணிலத் தூற்று வெந்நீர் நிகரிலாச் சேற்ப மற்றும்
பேணிய குளத்து நன்னீர் பெரிதுறு தாகம் போக்கும் 171

## ஆகாநீர்

போக்கிலா மடுநீர் சேற்றைப் பொருந்திய குளத்து நீரும்
ஊக்கமாஞ் சருகோ டூற லுவர்ப்பொய்கை நீரி வற்றை
வாக்கினு லுரைக்க வுண்ண மருவியே குளிக்க மூழ்க
நோக்கிடப் பிணிக ளாகு நொடிககுமுன் மெய்யிற் றுனே 172

## ஆகும்நீர்

ஐயமா ருதத்தின் கோப மாற்றட வதிகா லைக்கே
மையறு மொரு நீருங் கொண்டிட மாறு மின்பாய்ச்
செய்கையாற் குடித்து மூழ்கிக் குளித்துவந் தாடிச் செவ்வே
பொய்கைநன் னீரா லன்னம் புசிப்பவர்க் கில்லை நோயே 173

*வேணிநீர்--வெந்நீர்

## மண்பாண்டத்தின் மேன்மை

சாற்றிய மட்பாண் டத்திற் சமைத்திடிற் கொடிய நோயை
மாற்றுமவ் வாத பித்த மல்கிய வாத சேற்பம்
மேற்றிகழ் பித்த வாத மிருகபங் கபத்தில் வாதம்
போற்றிய கபத்திற் பித்தம் பொருந்திடா துடலிற் றூனே 174

## சமையலுக்கேற்ற பாத்திரங்கள்

சமைக்குமம் முறைகட் கேற்பத் தாம்பிரம் வெண்க லங்கள்
அமைக்கும்பாண் டத்தில் வெந்த வடிசில்மா ருதத்தி னோர்கள்
தமக்கின்பா மண்பாண் டந்தான் சார்ந்திடு பித்தர்க் காகும்
உமைக்குரைத் திட்ட வாற்று லுபர்கபத் தவர்க்காங் கஞ்சம் 175

## சோறு சமைக்க

கஞ்சமே முதலா யுள்ள பாண்டங்கள் கழுவிப் பண்பாய்
விஞ்சவே சுத்த மான நீர்வடித் துலையி லிடடுத்
தஞ்சமே யிருப்பத் தீட்டுந் தண்டுல நீரி லிட்டு
நஞ்சதாந் தவிடு போக நலமுறக் கரந்து மாற்றி 176

மாற்றிய தண்டு லத்தை மாசறு சுத்தத் தோடங்
கேற்றிய வுலையிற் றண்ணீர் கொதித்தபின் பெடுத்துப் பெய்து
சாற்றிய பதத்தி லேதான் றளர்விலா வெண்ணெ யிட்டுச்
சோற்றினை வதங்கக் கண்டு வடிப்பதே யமிர்தாச் சொல்வர் 177

## கறி--கீரை வகை

உண்பவர்க் கின்ப மான கறிவகை யுவந்து கேண்மின்
கண்டெளி பொன்னுங் காணி கறிசிறு கீரை யப்பை
மண்பயில் நெருஞ்சி கோவை மணலிவல் லாரை சீரம்
தண்பயில் சுண்டை யோடு சக்கரை கொத்த மல்லி 178

பாகமா மசம தாகம் பஞ்சிதூ துளையே வேளை
ஆகமாங் குப்பை மேனி யகத்தி வெந்தயமூக் கிரட்டை
காகமா சியின்மு ருங்கை கருதிளங் கீரை யாரை
சாகமாம் பொன்னு வாரை சாரடை சதகுப் பையும் 179

சதமுறு தேவதாளி தளிர்புரை சுண்டி வண்டார்
இதமுறு சுரைவட் டுத்தோ டிளந்திராய் முசுக்கை பீளை
நிதமுறு குறிஞ்சி பாலை நீளுறு முசுட்டை தேவி
பதமுறு முல்லை தும்பை பரட்டைசேர் பறித்துண் பார்க்கே 180

பணிபல பூணு மையர் பகரும்வா கடத்தை யாய்ந்தே
துணிவொடு மனிதர் சித்தர் துயரற வனத்தி லெய்தி
அணிபல கந்த மூல சாகங்க ளருந்த லாலே
பிணிபல மூப்புச் சாக்கா டெய்திடாப் பெருமை பெற்றூர் 181

## மாமிசக் கறிவகை

வண்மைவா ரணம்வெள் ளாடு மயில்முய லுடும்பு சிட்டுத்
தண்மைசேர் மரைமான் பன்றி தக்ககான் பன்றி தாரா
உண்மையூர்க் குருவி வௌவா லுடன்மடை யான்செந் நாரை
திண்மையா யுலர்த்தி வாதத் தோரிவை யருந்தச் சொன்னூர் 182

## மீன் வகை

வைத்தநற் றடாக மீதில் மயற்றெடு குறவை கீளி
நெய்த்திடு முளுவை யாரல் கெளிற்றுமீ னிதுவல் லாமல்
மெத்தவுங் கிளத்து மீன்க ளுலர்த்தியே கூட்டி மேனி
ஒத்தவா தத்தா ரிந்தக் கறியுண்ண வுரைக்கும் வேதம் 183

## வற்றல்—ஊறுகாய் வகை

எய்திடு மணித்தக் காளி யிசைந்தபேய்ப்ர புடோலா தண்டை
கெய்ா திடு பிரண்டை சுண்டை குலவுதூ துவளை வற்றல்
உய்திடு முள்ளி நெல்லி யுலர்த்துநா ரத்தங் கச்சல்
ஐதிட மறுக்குங் கண்டங் கத்தரி யவரை கோவை 184

கோவையே சுண்டை தூது வளையுமா தளைமாம் பிஞ்சு
பாவையே கடுக்காய் தான்றி பசுமஞ்ச ளிஞ்சி தேற்றுன்
தேவைய மிளகு மூங்கிற் றிப்பிலி சிறுநா ரத்தை
ஏய்வையாங் கபத்தோர்க் கென்று மிலகுமிந் துப்போ டூறில் 185

ஊறிய லவணத் தோடு முலர்ந்தவூன் கபத்தோர்க் காகும்
வீறிய பச்சை யூனும் வெள்ளெலி வெள்ளா டாமை
கூறிய வுடும்பு காடை கொக்குமான் கவுதா ரிப்புள்
மாறயில் சிட்டுக் குள்ளான் குறுமுயல் மடையா னுகும் 186

சிறுவரால் குறவை நன்னீர் செய்வரா லுளுவை யன்பாற்
பெறுவராய் நித்தங் கொள்ளிற் பிணிவராக் கடல்வாய் மீனில்
குறுவரால் சுறுவ ராலுங் கொழுப்பிலா தாகு முப்பில்
மறுவரா துலர்ந்த தாகும் வாய்த்தசேற் பனத்தோர்க் காமே 187

சேற்பனம் வாரா வாறு சிவந்திடு பசுவின் பாலும்
மாற்றுமுப் பிணியை நாரை மருவிய கபிலை வெள்ளா
டேற்றிடு மினிய பால்மே லிசைந்திடு தயிர்மோர் வெண்ணெய்
சாற்றிடு நெய்யோ டன்னஞ் சாரவுண் டிருப்பார்க் கென்றும் 188

இருப்புறு கபமே தாழ விசைந்தகற் கண்டு சீனி
மருப்புறு நெய்தேன் பேயன் வாழையின் கனிபூ வுள்ளம்
வ்ருப்புறு பேரீஞ் சோடு விளங்குமுந் திரிகை யாகும்
கருப்புறு கட்டி யன்றிக் கதித்தசர்க் கரையோ டுண்பாய் 189

## உணவுகொள்ளும் முறை

உண்பதற் கியல்பு கேண்மி னுறுபசி தணியா முன்னம்
மண்பயில் பதத்தி லூத்தை மாசறக் கழுவிப் பின்பு
பண்பயில் கால்கை நீரிற் பலமுறச் சுத்தி செய்து
கண்பயி லெழுத்தைந் தோதிக் கதிதரு நீறு சாத்தி 190

நீறுசாத் தியபின் னெஞ்சை நிமலன்மேல் வைத்து மேலா
வீறுசாத் துவத்தோ டெய்தும் விருந்தையும் பேணி யுண்மை
கூறுசாத் திரத்தி னூலே குணதிசை தென்பால் நோக்கி
வேறுசாத் திரநெஞ் செண்ணு திருந்துநன் மேன்மை யெய்தி 191

## உண்கலம்

எய்துபொன் வெள்ளி மற்று மிசைந்தவெண் கலமா முந்திச்
செய்திடும் பலன்கள் செப்பிற் சிறந்தமூ வைந்து முப்பான்
உய்திடுஞ் சத்த தோடே யோட்டிலுண் பதுங்க லங்கள்
பெய்திடு தண்ணீ ராலே பெரிதுறச் சுத்தி செய்து 192

சுத்தியா லமுதந் தன்னைத துலங்கவே படைத்த பின்பு
சுத்தியாஞ் சலமுப் போடு சுவைக்கறி சூழ வைத்துச்
சுத்தியால் நெய்வே தித்துச் சூழ்ந்துமுக் கால்நீர் விட்டுச்
சுத்தியாய்ப் போசனங்கள் கொள்வது சுத்தி யாகும் 193

சுத்திசெய் யமுதை யன்பாற் றுணைவிலக் காக நீரால்
புத்தியா லிரண்டு கூறு பொருந்தவுண் டோர்கு டிக்க
வித்துறு மிளகு சாறு மேவிய பசுவின் பால்தான்
உத்தம மாகும் வெந்நீ ருண்பவர்க் கில்லை நோயே 194

உண்பவ ருண்ணு முன்ன முவந்துதண் ணீரே யுண்டால்
உண்டவர் தமக்கு வன்னி யொடுங்கிடு மிளைக்கு மேனி
உண்டவர் நீ ருண் ணும லுண் டுமத் தியிலே சோற்றை
உண்டவர் தமக்குத் தாதுற் பவித்திடு முரமுண் டாகும் 195

உண்டபின் னமிர்தமாக வுறமிகக் காய்ந்த வெந்நீர்
கொண்டவர் குணத்தை யெம்மாற் கூறுரெணு சற்றே கேண்மின்
வண்டணி குழலார்க் கான வளம்பெல னழகு தூலம்
தண்டமிழ்க் கிசைமெய் யின்பந் தாதுமுப் பிணியுந் தீர்க்கும் 196

தந்திடுஞ் சுவைகொ ளன்னந் தளர்வறக் கொள்ளும் போது
உய்ந்திடுங் கடிகை யீரெட் டுடனுண்க வுடலுக் கின்பம்
வந்திடும் பெலன்மெய்த் தூல மருவுத ரத்தில் மிக்காம்
வெந்திடு மன்னங் குற்ற மேவிடா துறைக்குஞ் சித்தம் 197

மேவிய வேளை தன்னில் விரும்பியுண் பவர்க்கு மந்தம்
பாவிய ரறிய வூணும் பந்தமா மந்த மெய்தில்
காவியங் கண்ணு யந்த வேளையிற் கருதி யுண்க
மேவிய தயிர்ப கற்கால் வெயில்விழா முன்னே யுண்க 198

## பசித்தபின் உண்க

இடும்புறு பசிமந் தத்தி லிதயமாங் கமல மூடி
இடும்புறுங் குவிந்து நிற்த மாகையா லின்ப மெய்தா
இடும்புறு பசியே யாகி லிதயமே மலர்ந்து தோன்றும்
இடும்பறப் பசித்த வூணு மிகுந்தவின் பத்தைக் காட்டும் 199

மீட்டுமவ் வேளை தப்பா திருந்தவூ ணுண்ணு மந்தம்
காட்டினுங் காட்டு முள்ளக் கமலமே மலரா நிற்கும்
கூட்டிய கறிகள் கூட்டிக் குணம்பெறப் புசிப்பார்க் கின்பம்
பூட்டிமுப் பிணியை வாட்டிப் பொருந்து மென் றுரைக்கும்வேதம்

ஆயுறு வேத வாய்மை யறைந்தமே தார் யாமந் தன்னில்
ஆயுற வான வன்மை யருந்துக விரண்டாம் யாமம்
ஆயுறும் வேளை யுண்க வறைந்ததே யவர்க்கே யென்றால்
ஆயுறு கறியின் மேற்பா லல்லிலே யுண்ப தாமால் 201

## இரண்டுகால உணவு

உண்பதே யொருபோ தாகி லுடலுயிர்க் குறுதி யாகும்
உண்பதே யிருபோ தாகி லுயர்பெல மெழுதா கெய்தும்
உண்பது மூன்று கால முண்டிடிற் பிணியுண் டாகும்
உண்பது மிரண்டு கால முரைத்ததா முலகத் தோர்க்கே 202

உரைத்திடு கால மாறு முயர்நில மைந்து மொக்கும்
வரைத்திட முதலி னுன்கும் வளர்பிணி மூன்றுந் தானம்
நிரைத்திடும் பொழுதி ரண்டு நிகரொன்று மொவ்வா நெஞ்சம்
புரைத்தடம் புகாமே லாய்ந்து பொருந்திய கறியோ டுண்க 203

## காலந்தப்பாது உண்க

கறிமுத லான வன்னங் கபிலையான் பால்நெய் யோடு
நெறியுறு காலந் தப்பா நேர்மையாய்ச் சமைத்த வன்னம்
அறிவுறு மேலோர் செப்பு மாயுரு வேதத் தன்மை
நெறியுற வுண்பார்க் கில்லை நீணில மீதி னேயே 204

## மனைவிகையி லுண்க

அருந்திய விடத்தை யம்மை யங்கையால் மறிக்க வப்போ
அருந்திய விடமு மையர்க் கமுதமாய் வாய்த்த தாலே
திருந்திய வுலகத் தோர்க்குச் சேயிழை யடிசி லூட்டின்
மருந்தினு மினிதா மென்று வழுத்திடு மாயுள் வேதம் 205

## விருந்து பேணியுண்

உரைத்திடு மைய ரம்மைக் குயிரிது தானே யென்ன
உரைத்திடு மன்னந் தானே யுரிமையாந் தொழில்மன் னர்க்கும்
உரைத்திடு முறைமை மிக்க துண்மையா யுருவே தத்தில்
உரைத்திடு மதனு லெந்த வுரத்திலும் பெலத்த தன்னம் 206

அறம்பொரு ளின்ப மெய்து மாகையா லறமே வேண்டும்
அறம்பொரு ளின்ப மூன்று மன்னத்தா லாகு மென்க
அறம்பொரு ளின்பத் தாலே யருளொளி வீடு மெய்தும்
அறம்பொரு ளின்ப மெய்தா தடைவரோ வீடு வேறு 207

அடைந்திடு மதிபே ராண்மை யதிபெல மழகு வீரம்
அடைந்திடு மடவார்க் கான வன்புறு தாது தூலம்
அடைந்திடு வயிற்றி லங்கே யதிகமாம் பிணிக ளில்லை
அடைந்திடு மனத்தா ராளு மன்னத்தால் நோயுந் தீரும் 208

அன்னமே பிராண னென்ன வருமறை பகர்த லாலும்
அன்னமே படைத்த ளித்தங் கழித்திடு மென்கை யாலும்
அன்னமே யறத்துக் கெல்லா மதிகமென் றுரைப்ப தாலும்
அன்னமே சிறிது காண வையர்கங் காளங் கொண்டார் 209

ஐயர்கங் காளங் கொண்டா ராயினு மன்பர்க் கன்பர்
வெய்யபித் தாகு மன்பர் வேண்டுவ தீவ ரென்றும்
செய்தவத் துயர்ந்த வன்பர் தேடியே யீயி லன்னம்
ஐயர்கங் காளத் திட்ட வதுக்கது நிகர்வ தாமால் 210

## அக்காரவுண்டி

செய்யவுட் டணத்தை மாற்றுஞ் சீனிசர்க் கரைபால் நெய்யில்
நையவெந் திடுமன் னத்தி னலம்பெறு முணவை நாடில்
வெய்யபித் தர்க்கு நன்றும் விரகலீ லைக்கும் பித்தாம்
மெய்யுறு மனலுந் தீரும் விளம்பிய குணத்தை நாடீர் 211

## பட்டினி இலங்கணம்

நாடிய வன்னந் தன்னை நவிலுமத் தியானத் துண்ணில்
ஊடிய பசியி லாதே யுணவிடே லிராத்தி ரிக்கு
நீடிய விரவி லன்ன நின்றசீ ரணமே செய்யில்
ஓடிய பகல்முற் றுக்கு முணல்விட வொழிக்கு மந்தம் 212

உண்பவர்க் குறுபிணி யுருத வூண்களைப்
பண்பயில் வாகடத் துரைத்த பாங்கினுல்
மண்பயில் மனிதர்க்கு வகுத்து வைத்தனர்
திண்பயில் செய்தவத் துயர்ந்த சீரியோர் 213

## நோயற்றமுறை

மந்தமே யாகி லன்னம் வழுத்திய கறியோ டுண்க
அந்தமா னிடர்க்குச் சொன்ன வம்முறை யுண்ணும் பேர்க்கும்
தொந்தமா மிடக்கை கீழாய்த் துயில்கொளும் பேர்க்குந் தானே
விந்தைசேர் வைத்தி யந்தான் வேண்டுமோ வேண்டாமென்பர்

வயித்தியர்த் திசைந்த வாக டத்தினி லுரைக்கும் வாய்மை
வயிற்றினுக் கிசைந்த வூணுண் டுறங்கிடின் மருவா வெந்நோய்
வயித்தியர்க் கிசைந்த செய்தி வழுத்திட வுரைகேட் டென்றும்
வயித்தியர்க் கிசைந்த செங்கை மருந்துண வண்ணங் கேண்மின்

## உண்டபின் இளநீர்கொள்ள

வண்மையா யுண்ட பின்பு வளம்பெறு மிளநீர் கொள்ளில்
உண்மையாம் வாத பித்த சேற்பன மொடுங்கி நிற்கும்
தண்மையாந் தாதுண் டாகுந் தடையற மலமே போகும்
வண்மையா மழகுண் டாகு மறுகுந்தீ பனத்தை மாற்றும் 216

ஆனவூ ணுக்கு முன்ன மாங்கிள நீரே கொள்ளில்
ஊனமாய் வன்னி தாழு முறுமுறை யறிந்து கொள்க
பானமா மிளநீ ரந்தி பருகிடிற் கிருமி மாறும்
வானவிர் சடையார் செப்பும் வாகடத் துற்ற வாறே 217

உற்றிடு மிளநீர் செய்யு முண்மையாங் குணங்கள் செப்பில்
துற்றிடும் வாத பித்த சிலேற்பனந் தொடரா தென்றும்
முற்றிடு மலத்தை நீக்கு முதிருதீ பனமா மங்கி
பற்றிடு மன்றே நன்றும் பகருறு கண்ணோய் மாற்றும் 218

மாறுமுற் றிளநீர் கொள்ளின் மாறும்பித் தங்க ளெல்லாம்
வீறபத் தியமே யாகும் விரும்பிய தாதுண் டாகும்
கூறுமுப் பிணிக ளோடுங் கொடும்பழ விளநீர் தன்னால்
தேறுமே யிளநீ ரந்தி தெகிட்டவுண் டிருப்பார்க் கென்றும் 219

என்றும்செவ் விளநீர் கொள்ளி லிதற்குச்சேற் பனகா சம்போம்
மன்றுறு மானுர்க் கான வளரிளங் கெவுளி யுண்ணில்
நன்றுறு மங்க தாக நடந்திளைத் தெழுந்த தாகம்
அன்றியும் பித்த சோகை யாயுறு மந்தந் தீரும் 220

தீருமே வாயு வோடு திகழ்வலி பிணிகள் மற்றும்
தீருமே மலங்க ளெல்லாந் திடமுற தாதுண் டாகும்
தீருமே சத்தி குன்மந் திடனுறு பலமுண் டாகும்
தீருமே சீத வாதஞ் சிறக்கமுற் றியதேங் காய்க்கே 221

காயமேற் சுகமா முண்ட காலமே யிளநீர் கொள்ளில்
நேயமாங் கங்கு லன்ன நிறைந்தவெந் நீரைக் கொள்ளத்
தீயநோய் பலவுந் தீருந் திருந்திய வுண்டிக் கின்பாம்
தோயமே யுண்ண நாளுந் தோயத்தின் குணத்தைச் சொல்வாம்

## நீரினல் வருங்குணம்

சொல்லிய வடவி நீரை யுண்டிடிற் ரேன்றுஞ் சீதம்
மெல்லிய வுடலிளைத்து மிகமிக வரட்சி யுண்டாம்
வல்லியல் தலைபா ரிக்கும்வயிறுளை நந் துழலை யுண்டாம்
சொல்லிய சுரமு முண்டாந் துயர்மிகத் தொடர்ந்து தோன்றும் 223

தொடர்ந்திடு வியாதி தானுஞ் சுனையுறு நீரை யுண்ணில்
அடர்ந்திடுங் கபமும் பித்த மழலும்வந் தெய்து மெய்யில்
படர்ந்திடு சுரமு மிக்காய்ப் பகர்சொறி தினவு முண்டாம்
விடந்தனிற் கொடிய தான விகற்பங்கள் செய்யு மந்நீர் 224

செய்யுமே குணங்கள் வேருய்ச் செழுமலை யருவி நீர்தான்
செய்யுமே வாயு வாகத் திரண்டுடன் மலத்தைச் சிக்கிச்
செய்யுமே சுரங்க ளீண்டிச் சேற்பன மிகுதி தோன்றும்
செய்யுமே வயிற்றை யுப்பித் தினங்கள் முளவென் றேறி 225

ஏறிய வாயு மென்மே லெழுந்திடு நீரை யுண்ணில்
கூறிய கவுசி யோடு குடிகொளு மகோத ரங்கள்
ஊறிய முறைய யின்று முடன்படக் குடிக்கில் வாயு
சீறியே குன்ம முண்டாஞ் சேற்பன மிகுந்து தோன்றும் 226

## வெந்நீர்

இயம்பிட வெளிதோ வெந்நீ ரியம்புவன் சிறிது கேண்மின்
நயம்பெறத் தெளிந்த நீரை நன்ருக வடித்தெ டுத்துச்
சயம்பெற வெட்டொன் ருக்கித் தான்குடித் திடுவீ ராகில்
வயம்பெறு பித்த வாத சேற்பன மாறு மெய்யாய் 227

சுயம்படு சிரங்கு குட்ட மாறிடும் வெக்கை தோர்க்கும்
நயம்படு குணமு முண்டாம் நையலு மந்தந் தீரும்
செயம்படு தாதுண் டாகுஞ் சித்தமுந் தெளிவே யாகும்
குயந்தரு மடமின் ஞர்க்குக் கொள்கையு மிவன்மே லென்னே 228

## குளிர்ந்தநீர்

மெய்யுறக் குளிர்ந்த நீரை விரும்பியே குடிக்கிற் சால
நையுறு பித்தந் தீரு நயனமந் தமும்வந் தெய்தும்
உய்யுறு வயதா மற்று முரம்பெறு தாதுண் டாகும்
ஐயுறு மிரும லெய்து மருவிய குளிர்நீ ருக்கே 229

## மண்கரகத்து நீர்

மனமுறு வாத பித்த சேற்பனம் வளர்சு வாதம்
கனமுறு விக்கல் சத்தி கம்பிர மேகத் தோடு
தின முமண் கரகத் தூற்றித் தீதற வுட்கொள் வார்க்கு
அனநடை மயிலே வெந்நீர்க் கதிகமா மருந்து மில்லை 230

குணம்பெறு சுவையாம் வெந்நீர் குறுகவெட் டொன்ருய்க்காயில்
குணம்பெறு மருந்து மாகுங் குறைவற வழுத நந்திக்
குணம்பெறுக காய்ந்த வெந்நீர் கொண்டுநூ றடியு லாவிக்
குணம்பெறு மாத ரோடே கூடுவ தியல்பு தானே 231

## களபம் பூசுதலின் குணம்

இன்புறு களபம் பூசி லிசைந்திடு குணங்கள் கேண்மின்
துன்புறு கனல்துர்க் கந்தந் தோன்றிடா திருக்கும் பூமான்
வண்புறு மணநன் ருகு மாதருக் கிடமாந் தூலம்
அன்புறு பெலனே டின்ப மமர்ந்திடும் வசிய மெய்தும் 232

## களபவகை

எய்துசந் தனங்கர்ப பூர மிணையிலா வகில்கத் தூரி
செய்யகுங் குமப்பூ செம்பல் செஞ்சாந்து சவாது மிக்க
துய்யநற் புழுகு கோரோ சனையுடன் றெருகத்துக் கூட்டி
மெய்யுறப் பன்னீர் கொண்டு விரகுறப் பூசி லின்பம் 233

## வாதஉடலினர்க்குரிய களபம்

இசைந்தவெள் ளெருக்கம் வேரோ டினியசந் திரகாந் திப்பூ
இசைந்தகுங் குமங்கர்ப் பூர மிணையிலா வாரை கெந்தம்
இசைந்கோரோ சினையுங் கூட்டி யிமசல மெடுத்து ரைத்தே
இசைந்திடு முடலிற் பூச வனிலர்கள் தமக்கா மின்பங் 234

## பித்தஉடலினர்க்குரிய களபம்

பனிகொள்சந் தனங்கர்ப் பூரம் பகருங்குங் குமங்கத் தூரி
கனியுந்தண் பன்னீர் வாசச் சவாதுரோ சினைமெய் பூசிற்
பிணியும்வந் தெய்தி டாது பெருகுந்தா துவும்பிந் தாது
மனிதரிற் பித்ததகர் மகிழ்ந்தணி களப மாமே 235

## கபதேகிக் குரிய களபம்

பிந்துறு கபத்தோர்க் கென்றும் பிரியமா மகில்கஸ் தூரி
இந்துசந் தனஞ்சவ் வாதோ டிதிற்புழு கோடு மம்பர்
கொந்துகுங் குமப்பூக் கோரோ சனை குளிர் கலவை கூட்டி
முந்துறப் பூசி லின்ப முதிருமெய் முதிரா தென்றும் 236

முதிர்பனி யுலகு மூடு முன்பனி சிறிய வேனில்
கதிருறு வேனில் மற்றக் கார்காலங் கூதிர் காலம்
விதிமுறை களபங் கூட்டி விகற்பமும் பிணிக்கு மேற்க
மதிபெற வமைத்துப் பூசில் வல்லமா தருக்கும் வல்லான் 237

## மூவகை உடலினர்க்கும்

வல்லவா தம்பித் தந்தான் மருவிய கபத்தோர்க் கென்றும்
நல்லசந் தனத்தூ ளிட்டு நறைமிது பச்சை யொன்று
சொல்கிளி யூறற் பட்டை துலங்கிரு வேலி வேர்சீர்
மல்லலா மிச்சு மோரார் வகைபல மொன்றுய்க் கூட்டே 238

கூட்டுகிஞ் சுகக்கி ழங்கு குண்டோரோ சணைக்கி ழங்கு
நீட்டுதா ளீச பத்திர நெடுஞ்சடா மாஞ்சி லோடு
கோட்டமோ ரொன்றி ரண்டு கழஞ்சுறக் கூட்டி யேதான்
மீடடுநா கணங்க ழஞ்சு விரைபெற வெக்கை காட்டி 239

விரைபெற விடித்த ரித்த மேன்மையாம் பொடியே யாக்கிப்
புரையற வரைத்துக் கொண்டு பொழுதொரு சாமத் துக்கு
நிறையொரு பலத்து ளுக்கு நிறைபண வெடையி ரண்டாய்
உரைபுழு கிந்து கெந்தா ரரிசியோ டுறவ மைத்தே 240

அதிமண முறவே கூட்டி யாளுமேற் பூசி லின்பம்
மதிபெற வசிய மாகு மலர்த்திரு மருவும் நாளும்
அதிபெறு காதன் மாத ராசையா வதற்கும் வித்தாம்
நிதிபெறு மதனன் போல நித்தமு மனங்க ளிக்கும் 241

களித்திடு மனலர்க் கான காரகில் நறுக்கி வாசம்
அளித்திடு சந்த னத்தோ டதினிறை சமனுய்க் கூட்டி
வெளுத்தசர்க் கரைநீர் தன்னில் விரையுற முதனாள் வைக்கப்
புளித்திடா தெடுத்துச் செம்பு பொலிகல சத்தி லிட்டே 242

சலசத்திற் சாம்பி ராணி கலந்ததி னுலொன் றுகக்
கலசத்தை யேற்ற சாற்குள் வெளியினிற் கவிழ்த்துக் கீழாய்க்
கலசத்தின் வாயில் முன்னே கவிழ்த்திடு சட்டி நீரில்
கலசத்தின் வாய்தட் டாமற் கருத்தினுல் வைத்த பின்பு 243

வைத்தபின் கலசஞ் சாலுள் வனத் தெரு முட்டையிட்டு
வைத்தபி னங்கி யாலே யெரித்திடச் சாலின் கிழாய்
வைத்தசட் டியினுக் குள்ளே மதுவுறு தயில மெல்லாம்
வைத்தவக் கலச வாயால் வடியுறக் கரிவீ ழாமல் 244

முன்னமே யெடுத்துச் சாந்தை முதிர்புகை நாற்றம் போக
முன்னமே தண்ணீ ரோடு முற்றிடா யிளநீ ரோடு
முன்னமே கழுவிப் பின்பு முருகிரு வேலிச் சாற்றில்
முன்னமே யூறிப் பூசில் முதன்மைமா ருதர்க்கே யின்பாம் 245

பித்தரென் றொருவர் முன்னாட் பேசிய குணத்தி னாலே
நித்தரும் பித்த ராகி நேசமுற் றவரும் பித்தாய்
முத்தமிழ் மருந்தி னாலே முனிவறத் தெளிந்தா ரென்றால்
இத்தலத் தோர்க்கி சைந்த காரண மியம்பு வோமே 246

## நஞ்சுக்கு மாற்று

திரிபலைவேர்க் கொம்பு சிறுகீரை வேர்நொய்
மரிச மிவை வற்சநா பிக்காம்--அரியசிறு
காஞ்சோன்றி வேர்கருப்புக் கட்டியெட்காய்ச் சிக்குடிக்கப்
பாய்ஞ்சோடிப் போந்தில்லைப் பால் 247

பெருங்காயஞ் சுக்குக் குருக்கத்தி வேர்விரை பிச்சிமொட்டு
மருங்காய் மதுரம் பனைவே ரொடுசிற்ற மட்டி நெய்யோ
டிருங்காலி லாவரை கோரோ சனைபசுப் பாலெனவே
தருங்காத லாலென்றுஞ் சொன்னலுந் தோன்றிச் சாவில்லையே

எட்டி தனக்கு வாழைப்பூ விசைந்த வில்வம் பிசினுவற்
பட்டை விளாவேர் மாவிலங்கை படருந் தேவ தாளியிலை
செட்டிக் குகந்த பெருங்காயஞ் செறிந்த காடிதனிற் குடிக்கக்
கட்டி நமன்கொண் டோடுமுயிர் கடுக மீளுங் கண்டாயே 249

முயலிறைச்சிக் கெலிமாற்று மெலிக்குமோராங் கோழிக்கு முருங்கை மாற்றும், சயமிகுந்த பன்றிக்கு விளாவேர் மாற்றுந் தப்பாதாட் டிறைச்சிக்குச் சாதிக்காயாம், புயலனைய குழன்ம டவாய் கழுதைமான் தனக்குப் புளிமிளகு மாற்றுகும் பொருந் திய மீனுக்குப், பயன்மருவு மாவிலங்கை யிலைச்சாறு காய்ச்சிப் பருகவுடனே சமித்துப் பற்பமாய் விடுமே

நெய்க்கு வெந்நீ ரவற்குப்பு நெடுமாங் கனிக்குத் தேங்காய்ப்பால்
கைக்குஞ் செருக்கல் வரகுக்குக் கருப்புக்கட்டி பூசினிக்காய்
வைக்கும பலாவின் பழத்துக்கு மாற்றுஞ் சுக்கு மாங்கொட்டை
மெய்க்கு நெல்வேர்க் கிலாமிச்சம் வேர்மாற் றுகு மெல்லியலே 251

செரியா மலுக்குப் பாக லிலைச்சாறு நற்றேனுக்கு நெய்க்கும்
கரியாங் கொள்ளுச் சாறுமாவ கர்ப்பூரந் தேசிக் காய்க்கும்
வரியார் விழியாய் கோரோசனை மாற்றுங் கையாந் தகரையுமாம்
தெரியாப் பேய்க்கா ளானுக்குச் சிறுமூலகமாந் திடமிதுவே 252

நச்சுப் பல்லி கடித்தால்மோர் நல்லதேவ தாளியுமாம்
மெச்சுஞ சுண்ணம் புக்குமஞ்சள் மிக்கமாற்றென் றுரைசெய்வர்
இச்சை நண்பாற் சோதனக் கிதமா மோரைக் குடித்துவிடக்
கச்சுமுலையா யுள்ளிக்குக் கடுக்காய் மாற்றுங் கண்டுகொள்ளே 253

குன்றியின் மணிதின் ருல்வேர்க் கொம்பினைக் கொடுக்கத் தீரும்
வென்றிகோள் வற்ச நாப மிளகுதின் றளவே தீரும்
நின்றதோ ரெலிமருந்து நிறுவிடங் கொடுக்க நீங்கும்
நன்றினிப் பூமத்துக்கு நளினத்தின் வளையமாமே 254

அலரிக்குக் கடுக்காய் கள்ளிக் காவரை நெல்லித் தோலாம்
நலமில்வெந் தோன்றியாகில் நாவற்ருேல் கொழுந்து சுண்ணும்
பிலகிய கருக்கு வாய்க்கே யியங்கிலை கொடுக்கத் தீரும்
திலமெனும் பேர்சொன்னுலுந் நீர்ந்திடு மெருக்கம் பாலே 255

உற்றவப் பிரேகத் துக்கு வுகந்திடு மலைய மாற்று
நற்புது கெந்த மானுல் நயந்தபூ சினிக்காய்ச் சாறு
வெப்புறு காந்த மாகில் விளங்கதி மதுரத் தண்ணீர்
பொற்புறக் கலக்க யுள்ளிற் புகட்டிட மாறு மன்றே 256

அன்றிய விரும்பி னுக்கு விளாம்பழ மோர தாகும்
துன்றிய புளியு மோரிற் கொடுக்கமாற் றென்னச் சொல்லும்
நன்றிசேர் கிட்டத் துக்குப் பாலைச்சாற ருந்த நன்ரும்
வென்றிசே ரிரசத்துக்கு வெற்றிலை யருந்த மாற்றே 257

அருந்திய பொரிகா ரத்துக் காமெள்ளுக் கடுக்காய் வெல்லம்
பொருந்துமிந் துப்புக் கூட்டிப் புகட்டிட மாற்ற தாகும்
வருந்துவர் தனக்குத் தேங்காய்ப் பால்மிரு சம்ப ழச்சா
றருந்தநெய் யிவையும் வெவ்வே றவையுண மாற்ற தாமே 258

ஆனதோர் கெந்த கங்க ளரிதார மனேசி லைக்கு
மானனுய் கடுக்கா யெண்ணெய் வார்த்தரைத் துண்ண மாறும்
தானெருு தேங்காய்ப் பாலாந் தனித்தொரு கெந்தந் தின்ருல்
கானமா மலையஞ் சங்கு காண்டத்திற் கொடுக்க நன்றே 259

நன்சத குப்பையாகு நவில்கெந்தந் தனக்கு மாற்றுப்
பன்னரி தாரத் துக்குப் பகர்ந்ததா மதுரத் தண்ணீ
ரின்மிகக் கொடுக்க மாறு மிகழ்மனே சிலைக்கு மாற்று
உன்னரு மவுரி வேரைக் கியாயமிட் டுண்ண லாமே 260

நன்குட சப்பாலைக்கு நவில்புளி யம்ப ழந்தான்
இன்புறு மெள்ளு மாற்ரு மிகலண்டந் தின்ருல் நீடும்
இன்கிளர் கறிகு ரிஞ்சா விலையுடன் கொடுக்க மீளும்
இன்பதா மகத்திப் பூவுக் கெலுமிச்சம் பழமுங் கூட்டே 261

கூட்டுசீ தேவி யாருங் கியாயமிட் டுக்கொ டுக்கில்
மீட்டிடு மென்பர்கையின் விடத்துக்கு வேப்பம பட்டை
நாட்டுமொட் டறையு முள்ளிப் பழங்கடுகு ரோகணியும்
ஈட்டுதிப் பிலியும் வெந்நீ ரினிற்கொடுத் திடவு மாற்றே 262

கொடுத்தது வாகைப் பஞ்சாங் கமரைத்துளே கொடுக்க மாறும்
அடுத்தமஞ் சாடி வேரு மதிமதுர முண்ண மஞ்சள்
எடுத்துமுந் திரிகையின் றன்பழ முடனிவை யோரொன்று
மிடுக்குட னெரித்து வெந் நீரினிற் கொடுத்திடவு மீளும் 263

இட்டபேய்ச் சுரையில் வேருந் திப்பிலி யிவைவெந் நீரில்
திட்டறக் கொடுக்க நன்று சிவதையொட் டறையுங் கூட்டி
மட்டுய ரோசனியு மாவின் பாலினை விட்ட ரைத்து
நட்புட னுண்ணப் பஞ்ச தாலரையுங் கூட்டில் நன்றே 264

நன்றிசேர் சிறிய கீரை யொட்டறை பயின்ற பாலில்
ஒன்றிட வரைத்தே யுண்ண நன்றுதிப் பிலியிந் துப்பு
வென்றிசேர் கடுக்காய் மஞ்சள் கூட்டிவெந் நீரிற் கூட்டி
அன்றுணக் கழிச்ச லாகி லகலுங்கை விடமுந் தானே 265

வெப்புறு விடங்கள் தின்றால் வசம்பில வணந்தண் ணீரில்
ஒப்புடன் கொடுத்துச் சத்தித் துள்ளவி டங்கொ டுக்கத்
தப்பிலொட் டறைக்கு மஞ்சள் சர்க்கரை பூசி னிக்காய்
வெப்புள சாறு பால்வெந் நீரினிற் கொடுக்க மாறும் 266

மாறருங் கள்ளிப் பாலுக் காவரை யிலைமா மோரில்
வீறுட னரைத்துக் கொண்மின் மிகுந்தசர்க் கரையோடெள்ளும்
பேறதி மதுரம் பாலி லரைத்துண்ணப் பெருமரத்தின்
கூறிய பட்டை மோரி லரைத்துள்ளே கொடுக்க மாறும் 267

பச்சநா விக்கு மாற்று வௌர்கையா தகரைச் சாறு
மெச்சுபூ மத்தங் காய்க்கு மேண்மைசேர் பருத்திக் காயாம்
பச்செருக் கதற்குப் பாக்குப்பழத் தேங்காய்ப் பால்மாற்றென்பர்
நிச்சயம் பயறி நஞ்சை நீக்கிடும் விடத்தற் சாறே 268

நஞ்சுக ளனைத்தினுக்கு நலமிகு மவுரி வேரை
அஞ்சொலாய் கஷாய மிட்டே யருந்திட நன்று மென்பர்
மிஞ்சிடிற் பசுப்பால் கூட்டி விரைவுடன் கலந்து கொள்க
விஞ்சிய விடங்க ளெல்லாம் விரைவினிற் பறந்து போமே 269

அன்றியு மவுரி வேரி லறுகின்வேர் மிளகுங் கூட்டி
நன்றிசேர் கஷாய மிட்டு நாலாறு நாட்கள் சேர
ஒன்றிய பசுவின் வெண்ணெ யுடன்கலந் துள்ளே கொள்ள
வென்றிடும் விஷங்க ளெல்லா மெனமுனி விளம்பி னரே 270

நஞ்சுதின் றெரிப்புத் தொட்டால் நவசட்டி யிற்சுண் ணம்பை
மிஞ்சிடக் கரைத்து விட்டு மீட்டதைக் கொடுக்க நன்றும்
அஞ்சொலா ரணங்கே யெள்ளை யரைத்துமே கொடுத்துப்பின்பு
தஞ்சமார் பயிரி தன்னை யரைத்திட மாறும் நஞ்சே 271

## நெய் நஞ்சுக்கு மாற்று

சேரப் பசுவின்நெய் சேர்த்தருந்தில்-கூர்மிளகை
மோரி லரைத்தெரித்து மோசமற வேபருகும்
சேரு மரிசமத்தித் திப்பிலியும்-மோரில்
அரைத் தருந்து நெய்யில்விட மங்கு நில்லா தோடும் 272

## எள்ளெண்ணெய்க்கு

திருத்துதில நெய்யதனைத் தின்ருற்-பொருத்த முறக்
காடிதனைக் காய்ச்சியுண்ணுங் கைக்குமெள்ளின் பிண்ணுக்கை
நீடுபசு மோரிலிட்டு நீயெரித்துத்-தேடுமிஞ்சின்
வெல்லந் தனைக்கரைத்து மெய்ப்பாக வேயருந்தும் 273

## கடுகெண்ணெய்க்கு

செல்லுகடு கெண்ணெய்தனைத் துய்த்தக்கால்-மெல்லிலையை
உள்ளருந்துஞ் சாரடைவே ருள்ளியிலா மிச்சதின்வேர்
நல்லபசு மோரிலரைத்தருந்தும்-சொல்லுமந்த 274

## ஆமணக்கெண்ணெய்க்கு

ஏரண்ட நெய்யருந்தி லேற்றகடுக் காயெரித்து
மோரிலரைத் துண்ண முறியுமே-கோரமுறு 275

## வேப்பெண்ணெய்க்கு

நிம்பநெய்யைத் தின்ருல் நிகழ்குடசப் பாலைதனில்
அன்புறுதோல் மோரி லரைத்தருந்தும்-நன்கிலதாம் 276

## * பாகற்காய் கைப்பகற்ற

பாகற்காய் கைப்பகற்றப் பண்பா யுறுகடுக்காய்
வேகத்தை யுள்ள விரை நீக்கி-நோக
இடித்தவித்தந் நீரை யிறுத்துப்புங் கூட்டித்
திடத்தொடுபா கற்காயுஞ் சேர்த்துப்-படித்தலத்தில்
நன்ரு யவிந்தபன்பு நல்லபுனல் வார்த்தலம்பத்
துன்றுகைப்ப தெல்லாந் தொலையுமே-நன்றியில்லாப் 277

## பேய்ச்சுரைக்காய் முதலியன கைப்புநீக்க

பேய்ச்சுரைக்காய் தன்னுடனே பேசுபல கைப்பகற்ற
வாய்ச்சகடுக் காயவித்த வண்புனலில்-தீச்செறித்து
நன்ருய்க் கழுவினக்கால் நாசமாங் கைப்பனைத்தும் 278

---

* இத்தலைப்பின் கீழுள்ள கலிவெண்பாவின் முதலும் ஈறும் (இடையும்) செல் வாய்ப்பட்டொழிந்தன

## துவர்ப்புவகை நீக்க

பொன்றுத் துவர்ப்புவகை போக்குதற்குக்-குன்றுக்
கடுக்காயைச் சுட்டுக் கனசாம்ப ராக்கி
மிடுக்காநன் னீரதிலே விட்டுச்-சடக்கெனவே
உப்புங் கலந்தங் குறவவித்து வற்றியபின்
செப்பமுட னேகழுவிச் செய்கறியைத்-துப்புடைய 279

## மாங்காய் புளிப்புநீக்க

நன்மாங்காய் தன்னைமிக நன்று யரைத்தறவில்
முன்னே கலக்கி முதலுரைத்த-நன்னயஞ்சேர்
சாம்பர் தனையிட்டாற் சலநல்ல தண்ணீராம்
ஏம்பலுறு நீர்க்கடுப்பு ரத்தபித்தம்-போந்துவர்ப்பும் 280

## நீரிலுப்புநீக்க

உப்புச் செறிநீ ருவர்நீ ரகற்றுவதற்
கிப்புவியிற் ருழை விழுதெடுத்துத்-துப்பாய்
நருக்கிப் பிழிந்தெடுத்த நன்னீர் கலந்தால்
பொருக்கெனவே யுப்பகன்று போங்காண்-திருக்கறிக்கங் 281

## கறிவகையில் உப்பு மிகுந்தால்

குப்பதிகப் பட்டா லுரைக்குமந்த நீர்புகட்டிச்
செப்பமுடன் காய்ச்சிவிடத் தீருமே-தப்பிதமில் 282

## எலுமிச்சம்பழம் முதலியவற்றின் புளிப்புநீக்க

தேசிக் கனிக்குந் திகழ்புளிக்கு மாங்காய்க்கும்
வீசு புளிப்பகற்ற வேண்டு மேல்-ஆசில்
புளியம் பொருக்கும் புகழ்பழத்தி லோடும்
தெளிவெண் பலியாக்கித் தெண்ணீர்-வழியவொரு
நாழுழி தான்புகட்டி நற்புளிதேங் காயளவு
தேனே கரைத் தெளி விட்டால்-ஆன
புளிப்பகன்று தேன்சுவையைப் போலேதித் திக்கும்
களிப்புமிகு மாங்காய்கண் டித்துச்-செழிப்புமிகு
நற்சாம்ப ரிட்டதிலே நன்னீர்வார்த் தூறியபின்
பொற்பாய்க் கழுவப் புளிப்பகலும்-அற்புடனே
எல்லாப் புளிப்பினையு மீதே யகற்றுவிக்கும்
சொல்லுமந்தச் சாம்பர்தனைத் தூய்நீரில்-மெல்லவிட்
டூறினநீ ரைத்தெளித்தங் குண்பீரேன் மூன்றுதினம்
மாறிலுட லுட்புளியை வாங்குமே-வீறுடனே
நளூம் புசித்தபுளி நாசமாய்க் காயசுத்தி
வாளும் படிதான் வயங்குமே-கேளுமந்த 283

## எண்ணெய்ச்சிக்கு நீக்க

எண்ணெய் பலவு மிருந்ததெலாம் வாங்குவதற்
குண்ண மருந்ததனை யோதக்கேள்-மண்ணுலகில்
காரெள்ளின் கோதைக் கடுஞ்சாம்ப ராயெரித்து
நீரிற் செரித்திடவே நீகரைத்துச்-சேருமிந்நீர்
நன்ருய்த் தெளித்தப்பை நாலுநா ளுண்பீரேல்
துன்றுசரீ ரத்திற் சுவறுதலாய்-நின்றவெண்ணெய்
நீங்கிப்போம் பின்பு நிகரின் மருந்துவகை
ஆங்குப் பலவு மருந்துநன்ரும்-ஒங்கும் 284

## வேப்பிலையின் கைப்பகற்ற

குறிஞ்சி சமூலங் குணமா யுலர்த்தி
நிறைஞ்சகன் ருனெரித்து நீருய்ச்-செறிஞ்சதுடன்
வேம்பி னிலையரைத்து வெந்நீரி லேகரைத்துச்
சாம்பலுமிட் டூறவைத்தாற் சாராதே-தேம்பியகைப்
பெந்தவித மானகைப்பு மேகு மெரிப்பகற்றச்
சந்த முளமிளகின் றன்கொடிதான்-கந்தமுறக்
காய்க்கும் பருவங் கடிதுசமூ லத்துடனே
வாய்க்க வெடுத்தெரித்து வண்சாம்பல்-ஊக்கமுடன் 285
இட்டா லெரிப்புவகை யேகுமே தீயதனில்

## பாலைச் சர்க்கரையாக்க

அட்டிடுபால் சர்க்கரைய தாக்கவகை-கிட்டுபசுப்
பாலறுநா ழிக்குப் பகர்தகரைச் சாறதுவும்
ஏலவொரு காசளவை யிட்டெரித்துச்-சாலவடிப்
பற்றுமற் காய்ச்சியந்தப் பால்திரண்ட வாறெடுத்து
நற்ருலத் திட்டுநன்ரு கப்பரப்பி-மற்றுமொரு
சட்டியிலே தண்ணீர் தனைவார்த்துத் தீயெரித்து
வெட்டெனவே யக்கலத்தை மீதேற்றித்-திட்டமரை
நாழிகைதான் சென்றவுட னல்லபஞ்ச தாரையைப் போல்
தாழ்விலறு மாதமட்டுந் தானிருக்கும்-மீளவுமே
பால்வேணு மென்ருற் பகர்நாழி நீரதனில்
சால வொருபிடிதூள் தான்விரவிச்-சீலமுடன்
காய்ச்சினுற் பாலாங் கருதயிரை யிட்டக்கால்
வாய்ச்சதயி ராகி வயங்குமே ஆய்ந்தநற்
பாலைச் சருக்கரை யாக்கும் பதத்தை நீ
சீலமுடன் ஆய்ந்து தெளி 286

## தாகம் நீக்க

நற்சந் தனமரைத்து நல்லநவ பாண்டத்திற்
சுற்றுமுள்ளும் பூசித் துவக்கறவே-சொற்ற

உமிக்காந் தலிற்கவிழ்த் துற்றவதன் பின்னர்
அமைக்கும் படிகே ளணஙகே-நமக்காக
முன்னோர் மொழிந்த முறைசாம் பிராணியது
தன்னைப் பொடித்துத் தழன்மீது-முன்னிமிகத்
தூவி யதிற்கவிழ்த்துத் தோயமிட்டுத் தோயமதிற
பரவுசிறு கல்வறுத்துப் பரவியே-ஆவியகிற்
போயாரு முனனம் புகலுமிலா மிச்சையின்வேர்
நாவலுடன் மாவி னறுந்துளிரும்-காய
வறுத்தமல்லி யுங்கூட்டி வாய்ப்பான தேனும்
இறுத்ததிலே யிட்டுக் கலக்கி-யுறத்தெளித்துக்
கொள்ளக் கொடுநதாகங் கூடு முழலையுடன்
கள்ள விக்கல் நாவரட்சி காந்தலும்-எள்ளலறும்
வாநதி பரதவிப்பு மாறு மெனவுரைத்தார்
ஏந்திழையே மேலு மியம்பக்கேள்-ஆய்ந்த
அரிசிவறுத் தந்நீரி லான கஞ்சி காய்ச்சி
வரிஙசபெறு மண்சட்டி யொன்றில்-கரிசறவே
நற்சீ ரகமதுர நாடுசுக்குத் திப்பிலியும்
பொற்பா யரைத்தபபிப போதடுப்பில்-சொற்பாக
மாகவைத்துத் தேன்விட் டதிற்கஞ்சி யூற்றியே
பாகமுறத்துத் தாளித்துப் பண்புபெற-வேகவிட்
டேயிறுத்துக் கொள்ளநன்ரு மீதன்றி யிம்மருந்தில்
தூயவந்நீர் கஞ்சிக்காய்ச் சொன்னபடி-நேயமுற
விட்டுத்தா ளித்துமே வேகவிறுத் துங்கொளலாம்
உட்காய்ச்சல் பித்தசுர மோங்கும் பழவெதுப்பும்
வெப்பமுறும் பொல்லா விடசுரமும்-ஒபபும்
அதிதாகந் தீரு மரியநஞ்சு தின்று
விதியுறவே வெப்பித்த பேர்க்கும்-அதிகமாய்க்
கொள்ளநன்ரு மின்னமொன்று கூறுதுங்கே ணீர்த்தாகம்
உள்ளபடி தீரு முறையாகும்-தெள்ளுகின்ற
நற்சீர மெட்டொன்ரு நாடியவி நன்னீரும்
சொற்பாவு மிஞ்சி சொரிசாறும்-பொற்பார்
எலுமிச்சை தன்கனியி லேற்றபுளி தானும்
வலுமிக்க தேனு மதியாய்-நலமிக்க
சார்முந்திரிக்கனியின் சாறுங் குறையாதே
ஓரள வா யெல்லா மொருமிக்கச்-சேராய்
நவபாண்ட முன்போ னயந்துபுகை காட்டி
அதிலே யவையெல்லாம் விட்டு-மதியொன்று
சென்ரு லெடுத்துத் தினங்கொள்ள நீர்த்தாகம்
குன்ருத வுட்டணங்கள் கூறெரிப்பு-நன்ருகத்
தீரும் பசியுண்டாஞ் தீராத நோய போகும்
ஆரும் இதனை அறிந்துய்த லேநன்றும் 287

## நோய்நாடி மருத்துவம்

சொல்லிய நூலின் வண்ணந் தோன்றுநோய் குணங்கள் கண்டும்
அல்லதுந் தோன்றுங் கால மவனுடை வயதுங் கண்டும்
நல்லதோர் சாத்தி யங்க ளசாத்திய நாடிக் கண்டும்
வெல்லுறு முடலின் வன்மை மென்மையுங் கண்டு பின்னும் 288

பிணிவருநாளுங் கண்டு பிணிபினி லேதுக் கண்டு
பிணியினில் வன்மை மென்மை பிணிதவிர் நாளுங் கண்டு
கணிதரு கிரக தீமை கண்டுநன் மருந்து பேணித்
தணிவுறு முணவ ளித்துத் தகும்படி சிகிச்சை செய்யே 289

சொற்பெறு வியாதி யெல்லாந் துகளறக் கண்டு ணர்ந்து
நிற்பது நில்லா தென்று நிதானமுந் தெளிந்து கண்டு
விற்பெறு நுதலா யந்த வியாதியின் மரபுங் கண்டு
மற்புறு வியாதிக் கொத்த மருந்துசெய் யவல மில்லை 290

ஆணவ மின்றி யன்பா யருஞ்செபஞ் சாந்தி பண்ணிப்
பேணிய நாட்பின் னிட்டுப் பெலன்பெல வீனங் கண்டு
வீணதாய்த் தன்மேற் குற்றம் மேவிடா வியற்கை கண்டு
ஊண்மற வாமல் நல்ல வுறுதியாய் மருந்து செய்யே 291

அனுபவத் திறமை தன்னு லவையெலாங் கண்டு கொண்டு
வினைவழி யறிந்து மெல்ல மெல்லிதா மருந்து தன்னைத்
தினையள வெனினு நல்ல தீர்க்கமாய்ச் செய்து கொள்ளல்
அனைநிகர் சித்தர்கட் கருங்கட னுகு மன்றே 292

## சுரநோய் வகைக்கேற்ற மருந்தறிய

வாதபித்த சேற்பனத்திற் சுரங்கள் தோன்றில்
வந்தடுத்த தோடமெலாம் வகுத்துக் கண்டு
பேதமுறு கியாழவகை பேணிச் செய்க
பெருத்தெழும்பிற் பன்னிரண்டிற் குணங்க டேர்ந்து
போதமுறு மாத் திரைக ளறிந்து செய்க
பொருந்துசுர மீறிநிற்கில் முப்ப தானல்
சேதமறு முக்கூட்டுத் தயிலந் தேய்த்துச்
செய்மருந்து வாதமதைப் பேணித் தானே 293

சுரமேறிச் சுரங்குறைந்து சுரமீ ருகிற்
றுலங்குநல்ல முக்கூட்டுத் தயிலந் தேடிச்
சிரமேறப் பொருத்திநன்ருய் வாதம் பேணிச்
செய்துவர நாடோறுந் தீர்வி யாதி
உரமேறுந் தலைக்கனப்புக் கபாலவீக்க
முரைத்தசுரங் காதடைப்புச் சன்னி தீரும்
பரமேறித் தலைகனத்துத் திமிருண் டாகிற்
பகர்ந்தகொதி யெண்ணெய் தனைக் கொதித்துப்பூசே 294



பெருத்தசன்னி வாதசுரம் பெலத்து நிற்கிற்
பேதமற முக்கூட்டி லெண்ணெய் வைக்கப்
பொருத்துமதிற் றிரும்பாதேன் மருந்தி னேடு
புகன்றசன்னி வாதசுரத் தெண்ணெய் வைக்க
வருத்தமற வேனுதி குடிநீர் தாமும்
வாகடத்தின் முறைபுரிய மாறுங் கண்டீர்
திருத்தமுறச் சன்னியென்று திடனுய்க் காணில்
திறமான கொதியெண்ணெய் தேடிச் செய்யே 295

வாதசன்னி பெலத்தேறி மயக்கி நிற்கிற்
வலியபெருங் கொதியெண்ணெய் கோழிமுட்டைத் தயிலம்
சேதமுறு சன்னிவா தந்தான் சேரிற்
செப்புசன்னி வாதசுரத் தெண்ணெய் வாங்கிப்
போதமுறச் சிரத்துமுள்ளும் பூசித் தின்னப்
பொருந்துசரீ ரத்திலிட மாவிலங்க மெண்ணெய்
சீதமுறு வாதமெண் பதுக்கு நன்று
சினேகபொட் டளியினுடன் வாதசீ வனியே 296

பெருவாத சீவனிமா வாத வெண்ணெய்
பேசியநற் பந்தத்தின் றயிலந் தானும்
தருவாத ராட்சதனுஞ் சன்னிக் கேற்கத்
தந்துரைத்த மாத்திரையே ணுதி யாதி
பரிவாகச் செய்துவரப் பையப் பையப்
பகர்ந்தசன்னி சுரமனைத்தும் பாறிப் போகும்
சரியாகச் செய்யாது பிழைப்பிற் காய்ச்சல்
சாருமத்தி தனிற்சுரமாய்ச் சாற்றி னுரே 297

சாற்றுமத்தி சுரத்திற்கு முலைப்பா லெண்ணெய்
தகுந்தமுறை யேலாதிச் சூர ணங்கள்
போற்றுசந்த னுதியெண்ணெய் தானு நன்றும்
பொருத்தமுறு மேலாதி கடுகந் தானும்
மாற்றமுறு வாகடத்தை நுணுகிப் பார்த்து
வந்தசுரந் தனக்கேற்ற வண்ண மாகத்
தேற்றமுறு மருந்துசெய மாறு மென்று
செப்பினுர் பண்டிதத்தின் றிண்மை கண்டோர் 298

கண்டறிந்த பழஞ்சுரங்கள் வரட்சி காந்தல்
கருதுநல்ல மிருதசஞ் சீவி யெண்ணெய்
பண்டறிந்த மருந்துவகை பித்தம் பேணிப்
பகர்ந்தவெண்ணெய் வகையுமே லாதி தானும்

கொண்டறிந்த மெழுகெண்ணெய் வெருகி னெண்ணெய்
குடிபோக்கு மோரெண்ணெ யிவையு மாகும்
வண்டறிந்த கரியகுழன் மானே சொல்லும்
வாகடத்தின் பயனறிந்து மருந்து செய்யே 299

## வாத நோய்

வாதமெலாஞ் சினேகபொட் டளியி னுலும்
வாதாரி மருந்துபே ரிலங்கை யெண்ணெய்
போதமுறுங் குறுமுனிசொற் சிந்தூ ரங்கள்
புகல்கஞ்சா விலேச்சாற்றி விலங்கைச் சாற்றில்
சேதமறக் கொளலாகுங் கொம்பு வைக்கச்
செப்பியநல் லிரட்சைசெயச் செப்பும் வேதம்
ஏதமறு மகப்பிரதா னியினி லெண்ணெ
யேற்றபடி சஞ்சீவித் தயில மாதி 300

## வலி உட்குத்துப் பிறவீச்சு முதலியன

வலிகளுட னுட்குத்துப் பிறவீச் சாதி
வாதமதைப் பேணியே மருந்து கொள்க
நலிவகற்று மாத்திரைகள் செல்லா விட்டால்
நாடுபந்த தயிலமுத லுடலிற் றேய்க்க
மெலிவகற்று மிரட்சைமுதற் கருவி யெல்லாம்
விளம்பியநன் முறைகண்டு மிகாமற் செய்க
கலியகற்றுந் தென்கதிரை வேலன் பாதங்
கருதிவினை யணுகாமற் காத்துப் போற்றே 301

## பித்த நோய்

பித்தநோய் கட்கெல்லாம் பேசினுர் சீர கத்தின்
சுத்தமார் சூர ணங்கள் லேகியங் கிருத மாதி
அத்துடன் கூழ்மாண் டத்தி னரியநெய் லேகியங்கள்
சித்தவே லாதி தானுஞ் செப்பினுர் சந்த னுதி 302

மகிழம்பூச் சந்த னுதி வைக்கவு மெண்ணெய் நன்ரும்
தகவுறு கழுதைப் பாலுஞ் சார்சிறு பயறு மேற்கும்
மிகவுறு புளியி னுலே மேம்படு பித்தம் பாறும்
அகமகிழ் கீழ்க்காய் நெல்லி யாதியு மதனுக் காமே 303

## சிலேற்பன நோய்

ஐயத்தி லெழுந்த நோய்க ளகன்றிடுங் கூழ்மாண் டத்திற்
செய்யுறு நெய்க ளாலுஞ் சேர்ந்ததூ துளைநெய் யாலும்
மெய்யுறு கண்டங் காரி மிகுவட்டுச் சிறுகாஞ் சோன்றி
கொய்யுறு மிவற்றி னுலுஞ் சிலேற்பனங் குடிபோ மன்றே 304

கோழைவிற் புருதி வந்து குத்துட னிருமு மபகில்
மீளுநற் குடிநீர் காரி நெய்யுடன் முலைப்பா லெண்ணெய்
நாளுமுக் கூட்டி லெண்ணெய் நற்பாகு குழம்பு நன்றும்
கேளுஞ்சிற் றிளைப்புத் தாகஞ் சேர்ந்திடில் நொச்சிநெய்யே 305

மிண்டிய கசத்துக் கெல்லாம் வெல்லப்பா குடனற் பாகு
கொண்டிடு முயலி னெய்யுங் குறித்தகல் யாணி நெய்யும்
கண்டிடு முலைப்பா லெண்ணெய் கடியமுக் கூட்டிலெண்ணெய்
உண்டிடா கரியி னெய்யு முற்றதூ துளையி னெய்யே 306

நெய்யுடன் குடிநீ ருண்ண நன்றுமே னுதி தானும்
செய்யுறு மருந்தி னாலே தீராது மிகுந்து வந்தால்
ஐயமோ கால னூரை யணுகுவன் பொல்லா நோயால்
மையுறு களத்தெம் மண்ணல் வகுத்திடு மாணை தன்னால் 307

## மகோதரம் முதலியன

உற்றமகோ தரநீ ராமை யாதி
யுரைத்தவெலா மிலைக்குழம்பு காந்த பற்பம்
மற்றிவற்றுற் றீருமே பாண்டு தீர
வழுத்தினர் காந்தபற்பம் புளிக்கூட் டெண்ணெய்
சொற்றகற் றுழையெண்ணெய் கீழ்க்காய் நெல்லி
சுகமுதவுங் காமாலை பித்தம் பேணி
உற்றமுறை கொள்கவினி மூலந் தீர
வுரைத்தாரே வச்ரவல்லிக் கடுக மாதி 308

கருணை தரு சூரணமு நாக பற்பங்
காட்டினர் குன்மவகை யெட்டுந் தீர
வருகுன்ம குடோரியுடன் தாம்ப்ர பற்பம்
வங்கார சஞ்சீவி யக்னி குமாரன்
தருநாரத் தங்காயின் கடுகு தானுஞ்
சாற்றினர் நீரழிவு மேகந் தீர
உருகுவங்க பற்பமுட னப்பி ரேக
முரைத்தாரே நீரழிவுச் சந்த னுதி 309

கூறுசங்கு சோகியுமா நாரி நெய்யாங்
கூழ்மாண்ட நெய்யாகுஞ் சூர்ண மாகும்
வீறுகெர்ப்ப வாயுவுக்கா முள்ளி யெண்ணெய்
விளம்பினர் காயங்கள் சூர ணங்கள்
நாறுகுட்டந் தனக்காகும் பெருரோ கத்தி
னல்லதொரு குடோரியெண்ணெய் தாம்ப்ர பற்பம்
வேறுபல நோய்களுக்கு மருந்து பார்த்து
மிகாமலுங் குறையாது மாய்ந்து செய்யே 310

## வாதபித்த தொந்தம்

வாதமும் பித்துங் கூடி வன்பெலத் துடனே யோடில்
தீதுற வயிற்றி னுள்ளே திரண்டதோர் மந்தத் தோடு
வேதனை யெரிப்புங் கூடி விரசிடும் பித்த குன்மம்
ஆதிசேர் சீனி கூட்டி யட்டசூ ரணங்கள் கொள்ளே 311

## பித்தவாத தொந்தம்

பித்தந்தான் வாதத் தோடு பெலத்தெதிர்ந் தேறு மாகில்
மத்திம சன்னி வாதம் வந்திடும் பிதற்று முண்டாம்
அத்தினில் வாத பித்த மதிகரித் தேறி யோடில்
நித்தமும் பிதற்றி யோடி நினைவழிந் திருப்பன் காணே 312

## பித்தசிலேற்பன தொந்தம்

முற்றுமிக் குணங்கள் கண்டால் முயிற்றினின் முட்டை யோடு
கர்த்தபப் பாலுங் கூட்டிக் கடிதருந் திதமாம் பின்னும்
பித்தந்தா னையத் தோடு பெருமுகந் திரும்பி நோக்கின்
மத்திய கசரோ கத்தின் வரவென வழுத்த லாமே 313

இருமலுஞ் சியலும் வீழ்ந்தே யிடைச்சுரம் விளைந்து காயும்
பருவமாய் நெஞ்சிற் பற்றிப் பறிந்திடு மிரத்தம் வீழும்
கருதிய விவைக்கு நல்ல கண்டுலே கியத்தி னேடு
மருவிய வாழைப் பூநெய் கொள்ளென வழங்கும் வேதம் 314

சீதசந் திரனி னேடு செப்புகல் யாணி நெய்யும்
ஓதுதூ துளையி னெய்யு முற்றநா யுருவி நெய்யும்
பேதமின் முலைப்பா லெண்ணெ யாதியும் பேசி னார்கள்
ஆதிதன் பாத முன்னி யவிடதஞ் செய்ய நன்றே 315

செய்வதுவு மூலிவகை மருந்தே மேன்மை
திருத்தமுறு நிலம் பார்த்துத் தேடிச் செய்க
பொய்தவிரும் பாடாண முலோக மாதி
பொருந்த நன்ருய்ச் சுத்திகண்டு பின்னேகொள்க
எய்தவரு மூலிகையா னேய்தீர்ப் பானே
லிவனேபண் டிதமறிந்த முனிவ னுகும்
பொய்தவிரு முளத்துடனே கடவுட் போற்றிப்
பூசைபுரிந் ததன்பின்னே மருந்து செய்யே 316

### நாள்பலன்

குதிரைநாட் சுரம் துற்ருற் குறித்தநா ளெட்டில் நீங்கும்
முதிருநற் பரணி மூன்றில் விடாவிடின் முந்தக் கொல்லும்
பொதுநன் மீனெட்டிற்பத்திற் பொறுத்திடும் பொருதே யாகில்
விதியது பதினே ராநாள் விண்ணிடை மேவு வாரே 317

உரோகிணி யெட்டி ளுதை லுரைத்தபன் னிரண்டி ளுதல்
எரிசுர நீங்கா தாகி லிருபத்தே ழாநாட் கொல்லும்
தெரிவுறு மிருக சீர்ஷந் தெசநாளில் விட்டு நீங்கும்
வருதிரை நாளும் பத்தோ டஞ்சினில் மாறு மன்றே 318

புணர்தரு பூச மொன்ருே டிரண்டினிற் போகா தாகில்
இணை தரு குழலா யாங்கோ ரிருபத்தே ழாநாள் நீங்கும்
கணமறு பூச மஞ்சிற் கழியுமா யிலியங் கொல்லும்
பணைமகம் பன்னி ரண்டிற் பதினைந்திற் பறிந்து போமே 319

பூரமோர் பத்து நாளிற் பொறுத்திடும் பொருதேன் மூன்று
சீருடை மதியி னீங்குந் திகழுமுத் திரமு மாங்கே
ஏரணி யத்த மூன்றி லிளகுஞ்சித் திரைதா னுங்கோர்
வாரணி முலையா யேழ்நாள் வளமுடன் பறிந்து போமே 320

சோதியேழ் விடுமேற் கொல்லுஞ் சொல்லிய விசாக மெட்டில்
ஓதிய விருபத் தஞ்சி லுயிரற வகற்று முண்மை
நீதிசே ரனுடந் தானு நிரைவளை மானே கேளாய்
வேதிய ருரைத்த வாக்கால் விடுதிபன் னிரண்டா நாளே 321

கேட்டைநா ளஞ்சி ளுதல் கிளர்ந்தொரு மாத மாதல்
நாட்டமாய்க் கொல்லு மூல நலமொரு மதியி னீங்கும்
பூட்டுபூ ராட மெட்டிற் பொறுத்திடு முத்தி ராடம்
ஓட்டுபன் னிரண்டில் நீங்கா வுயிர்கொளும் பலநாட்சென்றே 322

ஓணமோர் பத்தில் நீங்கு மோங்குய ரவிட்ட மஞ்சில்
பேணியே கொல்லாதாகிற் பெரிதுநா ளெட்டில் நீங்கும்
ஆணியாஞ் சதய மாதே யாருயிர் கொள்ளு மென்றே
வேணிசே ரீசன் சொன்ன விதியது தப்பா தன்றே 323

பொருந்திய பூரட் டாதி போமுயி ருத்ரட் டாதி
திருந்திய வெட்டிற் றீரு மல்லது சின்னுட் செல்லும்
அருந்திரே பதிதா னெட்டி லல்லது பத்தி ளுதல்
வருந்தவே யாவி கொள்ளு மென்றனர் வழுவா நூலோர் 324

## திதிப்பலன்

பற்றுகலை மதியத்தா லடர்ந்து சேரும்
பாக்கியமும் போக்கியமும் பகரக் கேளும்
உற்றெழுந்த முதற்பிறையி லெழுந்த நோய்க
ளுரைத்தபடி யீரேழி லிருபத்தொன்றிற்

குற்றமுறு நாலேழிற் கொல்லா தாகிற்
குறித்தறியக் கடியமிடை குணமா முண்மை
பெற்றரண்டிற் பத்தாநாள் வதையா தாகிற்
பெருத்தமதி யாறுக்கு ணேய்க டீரும் 325

பிசக்கறவே பிறைமூன்றிற் றெடர்ந்த நோய்கள்
பெலக்காமற் றெடுத்ததுடன் விடுத்துப் போகும்
மசக்குறவே பிறைநாலி லடர்ந்த நோய்கள்
வன்மமுற வெழுமூன்றின் மரணந் தப்பில்
தசைக்குளுயிர் தனைநிறுவும் பிறையஞ் சாகிற்
றணிந்தபிணி யுரத்துப்பன் சாந்த மாகும்
அசக்கிவிடும் பிறையாறி லுடனே தீரு
மாகாமன் மேல்நின்று லவத்தை காட்டி 326

காட்டியபி னஞ்சேழிற் சாந்த மாகுங்
கடினமில்லை யிடறீரும் பிறையே ழாகில்
மூட்டிவிடும் பிறையெட்டில் நாளீ ராறின்
மொழிந்தபிணி தீர்ந்துவிடுந் தீரா தாகில்
கூட்டியுயிர் தனைப்பறித்துக் கொலைதான் செய்யுங்
குறித்தபிறை யொன்பதினிற் குணத்தைச் செப்பில்
நாட்டுவினை யுடன்றீரும் பிறைபத் தாகி
நன்மையில்லை பதினைந்தா நாளிற் கொல்லும் 327

கொல்லாத பிறைபதினென் றினிமேல வந்த
கொடும்பிணிக ளுடன்றீரு மீறி நின்றல்
மல்லாக வதைத்துவிடும் பிறைபன்னி ரண்டில்
வருத்தமற மூவைந்திற் றீரா தாகில்
பொல்லாது வதைத்துவிடு மறியச் சொன்னேம்
புகழ்ந்தபிறை பதின்மூன்றிற் பொருந்து நோய்கள்
நல்லாய்கேள் பதினெட்டா நாளிற் றீரு
நவின்றபிறை பதினலிற் கலந்த நோய்கள் 3.8

கலந்தநோ யிருபத் தைந்திற் கணக்குட னிருக்கத்தீரும்
அலர்ந்திடு மூவைந் தரநா ளடர்மதி நாலா நாளில்
பிலன்தெறு நோய்க டீரும் பிசகினுற் பின்பு கொல்லும்
புலர்ந்தநோய் பிறையீ ரெட்டிற் புக்குநோய் புகலு வோமே 329

புகன்மதியம் பதினறிற்றெடர்ந்த நோய்கள்
பொல்லாப்பு நீங்கிவிடும் பதினெட்டாநாள்
இகமதியம் பதினேழில் வருநோ யெல்லா
மிடரகலும் பதினெட்டா நாளி லின்னும்

தகவுபிறை பதினெட்டி லடரு நோய்கள்
சாந்தமா முடனேமெய் தணியா தானல்
பகலிரவு நெடுநாளா யவத்தை பண்ணிப்
பாதகமா யுயிரிளைக்கப் பண்ணுந் தானே 330

பன்னுபதி னைன்பானி லெழுந்த நோய்கள்
பகையற்றே யுடன்றீரும் பரிசு பார்க்கில்
ஒன்றுபிறை யிருபதிலே தொடர்ந்த நோய்க
ளுயிர்போக்கு மேழிலுயிர் போகா தாகில்
நன்றுபடு மூவேழி லெழுந்த நோய்கள்
நாடுபத்தி லேயுயிரை நாசம் பண்ணும்
கொன்றுவிடா தேயிருக்கிற் றிங்க ளொன்றிற்
குணமாக விருக்குமெனக் குறித்திட் டாரே 331

குறித்தவிரு பத்திரண்டாம் பிறையில் வந்த
கொடும்பிணிகள் பத்தாநாட் கொல்லா தாகில்
அறிக்கைபன் னிரண்டாநாட் சாந்த மாகு
மடர்மதிய மிருபதுமூன் றணிந்த நோய்கள்
வெறிக்கவுடல் வேதனைகண் மிகவுங் காட்டி
விட்டுவிடு மாறைந்து மிகுநாண் முன்னே
பறக்கவிடு மதியமிரு பத்து நாலிற்
படர்ந்தபிணி தொடர்ந்துவந்த பரிசு கேண்மின் 332

தொடர்ந்துவந்த பரிசுபன் னிரண்டா நாளிற்
துன்பமறுந் தணியாமற் றுயர மானல்
மடந்தையரே திங்களொன்றி லடருஞ் சாவாம்
வழுத்துபிறை யிருபத்தைந் தழுத்து நோய்கள்
இடந்துவளர் நாளாறின் மரணந் தப்பி
லிடர்வினைக ளகன்றுபதி யிருப்பா ருண்மை
நடந்தபிறை யிருபத்தி யாறு நன்றாய்
நரலவினை யுறுத்தியபின் நன்மை தானே 333

தானே யிருபத் தேழாகுந் தரித்த பிறையி லுரத்த பிணி
ஊனே யுருக்கும் வினையோடே யுயர்த்திப் பலநோ யுறக்கிவிடும்
மானே நாலேழ் பிறைபடர்ந்த வருத்த மிருபத் தோராநாள்
கானேற் றிடவே யுயிர்பறிக்கக் கடுகி முடுகுந் தப்பாதே 334

தப்பா திருபத் தொன்பதிலே தளர்ந்த பிறையி லெழுந்த மிடை
செப்பார் முலையாய் நாளடைவிற் றீருங் கண்டாய் திடனுக
ஒப்பா முப்ப தாம்பிறையி லுவந்த நோய்க ளோடிவந்தால்
மெய்ப்பாங் கொடிய வல்வினைகள் மீளுமென்று விளம்பினரே 335

## மரணநாள் அறிய

ஆயில்யமுப் பூரஞ் சோதி யாதிரை பரணி கேட்டை
ஏயநல் லங்கி பக்க மீராறு நான்கோ டொன்பான்
காய்கதிர் செவ்வாய் காரி வாரங்கள் கலந்த நாளில்
நோய்வரின் மரண மென்றே நுவன்றனர் நூல்வல் லோரே 336

குருசனி செவ்வாய் கேது குறித்திடு மிராகு வெய்யோன்
வருமிவர் சென்ம மெட்டில் வகுத்தசக் கரங்க ளீறில்
பொருவருந் தீக்கோ ணேக்கிற் பொருந்துநா லிராசி தத்தில்
மருவுறு நோய்வந் தெய்தின் மரணமென் றுரைக்கு நூலே 337

## குற்றமுள்ள வியாதிகள்

வாதசன்னி யுளைமாந்தை யிரத்த ரோகம்
வருத்துபெரும் பாடுகச ரோக மீளை
பேதமுறு பிறவீச்சுக் கண்டமாலை
பெரும்பிளவை குதிரைவலி சிங்க ரோகம்
சீதமுறு சன்னிபத்துச் சூலை யெட்டுத்
திகழுதிர மாலைகுத்து வாத ரோகம்
சேதமுறு குட்டமெட்டுக் கிராணி யெட்டுச்
செப்பியநெஞ் சடைவாத முடக்கு வாதம் 338

முடக்குசன்னி வாதமுடன் வாய்வி யாதி
முயலகண்டன் முதலான வலியீ ராறு
மடக்குபெரு வாதமுடன் பெருவி யாதி
மாருத குறளையுடன் வைசூரிபெரும் பணையன்
தடக்குபிர மியவாதம் படர்காச வாதஞ்
சத்திகுன்ம முதலான குன்ம மெட்டும்
அடைத்திடுமக் கரமெட்டுக் கரப்ப னெட்டு
மரிபிளவை விப்புருதி சுவாதம் பத்தே 339

பத்திருசேற் பனங்கடிய கைக்குழித்தா மரையும்
பகர்மேக நீரடைப்புப் பக்க வாயு
சுற்றிமிகு மந்தார காசமுடன் கிரந்தி
சொல்லு மத்தி சுரமுதலாஞ் சுரமோ ரெட்டும்
அத்திகரும் பித்தமுதற் பித்த மெட்டு
மடுத்தபீ நசம்பீட மூக்கி னீரும்
குத்திரமார் கோழைகண வாத சூலை
கொலைபடுவன் கொடியமுக சிங்கி மூலம் 340

மூலமுறு கிரந்தியுடன் மூல ரோக
முதிரிலிங்கப் புற்றுடனே யிலிங்க சூலை
சூலமுறு நீரழிவு கபால வீச்சுச்
சொல்லுமகோ தரகரப்பன் காய சேற்பம்
சீலமுறு முள்ளுருக்கி யுலற்று சூலை
சிரங்கினமுந் திமிர்வாத சன்னி காசம்
கோலமுறு வெண்குட்டம் வெள்ளு ரோகங்
கொடியகெர்ப்ப ரோமமுத லிரத்த குன்மம் 341

உரத்தபெரு வயிறுகள கண்ட மாலை
யுற்றசேற் பனமகோ தரநீர்க் கோவை
சலக்கழிச்ச லிரத்தசல நீர்ப்பே ராமை
தகுசேற்ப பாண்டெகுத்து வயிரை வாங்கி
கிரத்தீனீர்ப் பாய்ச்சலுட னீல காசுஞ்
செப்பியதோர் மணியூறல் விரண வெள்ளி
சரத்தில்வரு குந்தமுடன் காச ஊறல்
சாற்றியசூ ரியகாசம் மாலை காசம் 342

காசமுறு கெர்ப்பகுண மீரல் வாதங்
கடியபவிந் திரரோக மரிக ரப்பன்
நாசமுறு பெரும்பிளவை மூல மேக
நடுக்கிவிழுத் திடும்வாதம் பெரியவாதம்
பேசுமுலர்த் திடும்வாதம் பெருவாத கரப்பன்
பெருமிரத்தக் கிராணியுடன் வேதாள வாயு
பாசமுறு விணைக்கீடா மிந்நோ யெல்லாம்
பகர்ந்திடுகிற குற்ற முள்ள வியாதி யாமே 343

கொன்றிடுஞ் சிலபிணி கொடுமை செய்துபின்
நின்றிடுஞ் சிலபிணி நீங்கி நீங்கியே
சென்றிடுஞ் சிலபிணி செய்ம ருந்திணை
வென்றிடுஞ் சிலபிணி விரும்பிக் கண்டிடே 344

## குற்றமுள்ள வியாதிகள் சிலவற்றின் கால எல்லை

சன்னி வாதம் வந்திடுகிற் சாக மூன்று மாதமென்பர்
தன்னிற்கொல்லா தெனின்மரணஞ்சாற்றின் மூன்றுவருடமென்பர்
நில்லா தெனிலே கொன்றுவிடு நெடிய குத்துப் பிறவீச்சுப்
பொல்லாதொன்பான் பன்னிரண்டிற் பொருதேற்றீர் தலரிதாமே

கோளை வியாதி பதிணைந்திற் கொல்லா தென்னிற் றீர்ந்து விடும்
மீளும் பிள்ளைப் பெறும்வீட்டில் விளம்பு சுவாச மிகுவதெனில்
தாமுஞ் சுவாச மும்மதியிற் ருழா தென்னின் வருடமொன்று
மீளாச் சுரமும் பன்னிரண்டிற்பெலக்கிற் பதினெட்டாஞ் சுரமே 345

சுரமே ழுக்கு ளிருபதினிற் சொல்லு முப்பத் திரண்டில்விடும்
தரமே சொல்லிற் சிலநாளிற் சாருஞ் சன்னி மகோதரமும்
சிரமே வலித்தக் கரம்வருகிற் றீரும் பதினெட்டிருபதினில்
உரமே தருமந் தரகாச முறுமே சரீர முள்ளளவும் 346

இப்படிக் கன்மத் தீடா யிருந்திடும் பலவி யாதி
செப்பிடின் மரணத் திட்டந் தேவர்க்குந் தெரிவ தில்லை
மெய்ப்படி செபங்கள் சாந்தி விளம்பிய சிவதன் மங்கள்
ஓப்பிடச் செய்த பின்ன ருண்மையா மருந்து செய்யே 347

விதிவழி யென்று நம்பி விடுமுயி ருள்ள மட்டும்
மதியுறு மருந்து செய்து வறுமைக்கு முதவிசெய்து
கதிபெறு வழியை நாடிக் கடவுளி னருளே யாக
அதிகமாய்ப் பேணிச் செய்தா லவர்விதிப் படியே யாகும் 348

## சிலேற்பன பித்ததொந்தம் சிலேற்பன வாததொந்தம்

ஐயந்தான் பித்தந் தன்னை யமைந்தெதி ரேறு மாயின்
நையவோர் நாளிற் கால னமக்கென வருவ துண்மை
பையவே யையும் பாய்ந்து வாதத்தைப் பற்றி நின்றால்
செய்யு மாறில்லை யோர்நாள் தனிற்கால னூர்போய்ச் சேரும் 349

## நோயற்ற நிலை

வாதமும் பித்து மையும் வல்லபத் துடனே தத்தம்
பேதமொன் றில்லா வண்ணம் பேசிய தான மாக
நீதிநன் னிலையி னின்றால் நெடும்பிணி யில்லை யாகும்
பேதமா யொன்றோ டொன்று பிணங்கிடிற் பிணிக டாமே 350

## நோயின் வகை

பெற்றிடு முத்தமம் பெலத்த மத்திமம்
சொற்றிடு மதமமென் றின்ன தன்மையால்
உற்றிடு வியாதிமூ வகையென் றோதினர்
மற்றதிற் சாத்திய மடுத்த மூன்றதே 351

உற்றதோர் பசியி னுளு முதரவக் கினிகோ பித்துப்
பற்றியே யப்பு வற்றப் பருகிடப் பித்த முண்டாய்ச்
சொற்றிடும் வியாதி யாகித் தோன்றியே தோலி னிற்கும்
மற்றது சாத்தி யத்தி னடைவென வகுத்தா ரன்றே 352

## அசாத்தியம்

அடுத்துடற் கடுப்பி னுலு மசீரண மந்திப் பாலும்
கடுத்துட னப்பு வந்து கனலினை மறைத்து மூடிக்
கெடுத்திடும் வாதம் வந்து கிளருமா மிசத்தி னின்று
மடுத்திடும் பிணிய தாகின் மற்றசாத் தியம தாமே 353

## கடினசாத்தியம்

மன்னுநீர் சருகி னூறல் மண்டிநீர் பாசி கூட
உன்னிய சோற்றி னுப்பி னுறுதுகண் மயிர்மென் கல்லு
நண்ணியே யெழுந்த சேற்ப நாடொறு மெலும்பிற் ரேலில்
தண்ணிய தசையிற் சேரிற் கட்டசாத் தியம தாமே 354

சரிரமு முலர்ந்து வற்றிச் சஞ்சல மிகுதி யுண்டா
உரியதோ ருவாந்தி யாகி யுண்டியு மொறுத்து மேனி
கருகியே வயிறு மூதிக் கழித்திடுங் கஞ்சி தண்ணீர்
அருவருத் திடும்வா யூறி யருங்கட்ட சாத்தியமே 355

## உத்தமவியாதி-சாத்தியம்

உத்தம வியாதி பித்த மொருசிறி துடன்கோ பித்து
மொத்தவே மெல்ல மெல்ல மேவிடு மருந்தி னாலே
சுத்தமாய்ப் பன்னி ரண்டிற் சுகம்வரு மதில்வா ராதேல்
ஒத்திரு பத்தி ரண்டி லொழிந்திடு மாத மொன்றே 356

## மத்திமவியாதி-அசாத்தியம்

அடுத்தமத் திமவி யாதி யானதில் வாதம் வந்து
கடுத்துடன் மிண்டி மிண்டிக் கடினமா யெண்ணெய் பற்பம்
கொடுத்திடில் நெடுநாட் சென்று குணம்வரும் வாரா தென்னில்
கெடுத்திடுந் தீரா தென்றே கிளத்திடு மறையுந் தானே 357

## அதமவியாதி-கடினசாத்தியம்

உற்றிடு மதமந் தன்னி லுதித்திடுஞ் சேற்பம் வந்து
பற்றிடு முந்தி நின்று பரந்திடு முயர வேறிச்
செற்றிடுஞ் சடுதி யன்றேற் செலுத்திடா நாட்செல் வீங்கும்
கற்றிடுங் கலைவல் லோர்கள் கட்டசாத் தியமென் றுரே 358

## சாத்தியம்முதலிய மூன்றின் இயல்பு

திருமிகு சாத்தியந் தீருஞ் சில்பகல்
வருமிகு மசாத்திய மாற நாட்செலும்
கருமலி கட்டசாத் தியம்பின் காலனும்
அருமறை மொழிந்தன வறிந்து ணர்ந்திடே 359

அறிந்திடு சாத்திய மடுத்த முத்தொகை
பிறிந்திடு குணத்தொகை பேத மில்வழி
செறிந்திட வுரைத்தனஞ் செய்வி னைப்பழி
பறிந்திடு மரணத்தின் பகுதி பேசுவாம் 360

## பித்தமதிகரித்த மரணக்குறி

பித்தமு முயர வேறிப் பேதித்து வெதுப்புண் டாகிச்
சத்தியு மெடுத்தாள் வற்றித் தாகமும் பசியு மற்றுச்
சுத்தமாய் வயிறு மூதிச் சோர்ந்திடக் கழிச்ச லாகி
ஒத்திடு மருந்தை மீறி யுரத்திடின் மரண மாமே 345

## வாதமதிகரித்த மரணக்குறி

வாதமு முயர வேறி மயக்கியே மூர்ச்சை யாகிப்
பேதமாய் விறைத்து வேர்த்துப் பேதிக்க நாவும் வீழ்ந்து
சீதமாய்க் குளிர்ந்து கால்கை திமிர்த்துடன் றெய்வு முண்டாய்
ஏதமாய்க் கண்ணு மேலே யேறிடின் மரண மாமே 346

## சிலேற்பனமதிகரித்த மரணக்குறி

சேட்டும நெஞ்சைக் கட்டித் தீன்மறந் தெடுத்து முட்டாய்
நாட்டமும் பஞ்சு போல நாவரண் டுடலும் வேர்த்துக்
கோட்டமாய்ச் சரீரம் வற்றிக் குறித்தவுண் மூச்சு முண்டாய்
ஈட்டிய மருந்தை மீறி யிழுத்திடின் மரண மாமே 347

## நீர்க்குறி

தர்க்கசாத் திரிக ளானோர் தங்களிற் றேர்ந்து நோயின்
வர்க்கமா நாடி தன்னு லறிவது மயக்க மென்றே
உற்றநீர்ப் பரீட்சை யாய்ந்தே யுணர்த்தின ரிதற்கு நேராய்
மற்றொரு விதிநூ லில்லை மருத்துவக் கலைவல் லோர்க்கே 348

## இரத்தமதிகரித்த குறி

விட்டநீர் சிவந்தி ருக்கி வேற்றுமை கண்ட போதே
மட்டிலா விரத்தம் மிஞ்சி வளர்ந்ததாற் சிவந்து தோன்றும்
உட்டணம் மிகுந்த தாலே யுற்றநீ ரிறுகிற் றன்றோ
இட்டமா யறிந்து கொள்ளற் கிடமென வியம்பி னரே 349

## பித்தநீர்

மெத்தநீர் சிவந்து தோன்றி மெதுவெனத் தெளிந்து நின்றால்
பித்தமாங் கோப மென்று பேசுதற் கிடம தாகும்
இத்தைமூ லத்தின் வெப்பா லெரிந்துநீர் சிவந்து தோன்றும்
வற்றிய வரட்சி தன்னால் வளமுறத் தெளிந்த தாமே 350

## சேட்டுமநீர்

வளமுற வெள்ளை யாகி வற்றிநீர் குறுகி நின்றால்
தெளிவுறச் சேட்டு மத்தின் செய்கையென் றுரைக்க லாகும்
குளிர்மையி னாலே வெண்மை யாகிய குணமா மென்றும்
இளகுமச் சிரத்தந் தன்னை விறுகிய தென்றுந் தேரே 351

## வாதநீர்

சொல்லரும் வெள்ளை யாகித் தோயமுந் தெளிவ தானல்
வல்லப மிகுந்து வாதம் வருத்திய குணமென் றேதும்
நல்லதோர் குளிர்மை யாலே நாடிய வெள்ளை யாகும்
அல்லல்சேர் வரட்சி யாலே யந்தநீர் தெளிவ தாமே 352

## தொந்தபித்தக் குறி

இந்தநீர் கனப்பு மாகி யிறுகின லிரத்தம் மிஞ்சி
வந்தவக் குணங்க ளாகு மற்றிது வல்லால் நாளில்
விந்தையா யந்த நீரின் மேலுற்றுத் தெளிந்து நின்றல்
தொந்தித்த பித்த மொன்றிற் றெகையென வகைசொல் வாயே 353

வகைவகை யாக பித்தம் வந்துமெல் லியதாய்த் தோன்றித்
தொகையுறத் தெளிந்து நின்ருற் சொல்கரும் பித்த மென்றே
..................................................................................
.................................................................................. 354

தேட்டமுன் சொன்ன தெல்லாஞ்சிக்கிடுங்குணமென் னென்றல்
மூட்டிய வயதி னுலு முதியகா லத்தி னுலும்
கோட்டுநட் சத்தி ரத்தின் குணங்களி னுலும் வேறு
நாட்டமாய்ப் பித்த மிஞ்சி நவில்பல குணங்கள் காட்டும் 355

## சுர நோயாளிகளின் நீர்க்குறி

நவமிகு சுரமுற் றேர்த நவிற்றுநீர் வெள்ளை யாகி
உவருறத் தெளிந்து நின்று லுட்டண மென்று தேருய்
கவர்முறைக் காய்ச்ச லானுற் கனத்துநீ ரிறுகி நிற்கில்
தவனமுற் றடைந்த காய்ச்சல் சடுதியில் விட்டுப் போமே 356

விட்டநீர் சிவந்து தோன்றி மிகவுமே தெளிவ தானல்
மட்டிது மூன்று நாளை மாறலென் றுரைக்க வேண்டும்
இட்டமாய் முசுனை தன்னி லிறுகியே சிவந்து பின்பு
கட்டுநீர் வெள்ளை யாகிற் கபாலத்திற் சேரும் பித்தம் 357

பித்தஞ்சேர் நரம்பு பச்சை பேதித்தாற் பெலன்கே டென்னுய்
மற்றுநிட்டூர மாகி வலிமைசேர் கடின மானல்
உற்றபொல் லாப்பித் தென்றே யுறத்தெளிந் துரைக்க லாகும்
கற்றைசேர் நரம்பு விம்மிக் கறுத்திடின் மரண மென்னே 358

என்னமுன் சொன்ன நீரை யேந்தியே பார்க்கின் மேலே
வன்னமாய்ப் புருவ முள்ள வளையமாய்ப் பரந்து நின்ருல்
சென்னியுங் கனத்து வெப்பாய்த் தியக்கமுற் றிருக்கு மென்று
பன்னுசித்தர் க ளாய்ந்து பகர்ந்ததே பகர்ந்த தாமே 359

பகருநீ ரடியிற் ருழ்ந்து பற்றிய சிவப்பி ஞலும்
நிகர்மஞ்ச ணிறமா ஞலு நீர்கொஞ்சந் தெளிவா ஞலும்
மிகவுமே சென்னி தன்னில் விதனமா மிடது பக்கம்
இயல்புரி நோவுண் டென்றே யியம்பினு ரியல்பி ஞலே 360

இயல்பிலாச் சுரத்தோர்க்கின்ன மியம்புநீர் வெள்ளை யாகிச்
செயல்பெறு கறுப்பு மாகித் தெளிந்திடு நீரு மாகி
வயமுற விருந்தாற் புத்தி வளர்சென்னி வலது பக்கம்
துயர்பெறு நோவுண் டென்று சொல்லலாந் துலக்க மாக 361

துலங்குநீ ரடியிற் பாதி தோயவுஞ் சிவந்து தோன்றிக்
கலந்துமேற் றெளிவு மாகிக் காய்ச்சலுங் கடின மானுல்
மலங்கிட மார்பு நெஞ்சு வாதையுற் றிருக்கு மென்றே
இலங்குமருத் துவநூல் வல்லோர் யாவரு மியம்பி ஞரே 362

நாரத்தி னீர்ப்பால் போல நவையுற்ற சவ்விற் கால
மாருற்ற பாத்தி ரத்தி லடிமண்டி கிடந்து தானுல்
பாருற்ற மெழுகு மாங்காய் பற்றிய கல்லி ஞலும்
சீருற்ற செய்கை யென்று தெளிவுறச் செப்ப லாமே 363

செப்புநீர் சிவந்து சற்றே தெளிவுமா மிகுந்த தென்னில்
துப்புறு மிரத்தத் தாலே தொந்தித்த வியாதி யென்பர்
அப்புநீர் கலங்கிக் கொஞ்ச மாகவே கறுப்பு மானுல்
வெப்பது வீரல் தாவி வெதும்பிய சுரமுண் டாமே 364

உண்டறு கின்ற நீரதா னுயர்தலை முடியே போலக்
கண்டிடு மெழுக தாமாங் காயினில் வியாதி யென்று
விண்டிடச் செய்வா யிந்த விதமுறு சாத்தி ரத்தைக்
கொண்டுதாந் துப்பின் மேலோர் கூறிய குணமி தாமே 365

## எண்ணெய் நீர்க்குறி

கல்விசாத் திரங்கள் கற்ற கனதவ முனிவ ராய்ந்து
சொல்லுமூத் திரப்ப ரீட்சை சொற்றிட வினிது கேண்மின்
அல்லிடைச் சாம மொன்று சென்றத னப்பால் நீரை
நல்லபீங் கானில் வாங்கி நல்லெண்ணெய் விட்டுப் பாரே 366

## பித்தமதிகரித்த குறி

விட்டதோர் துள்ளி யெண்ணெய் வீசியே பரந்து தோன்றி
வட்ட மாய் நின்ற தானுல் வளர்ந்திடு மிரத்த மிஞ்சி
உட்டண மிகுந்த தென்றே யுடற்குளிர் பதார்த்த மூட்டி
வெட்டைசேர் பித்தந் தாழ விரேசனஞ் செய்ய நன்றே 367

விரவுறு கதிர்போல் நீண்டு வேற்றுமைக் குணங்கள் கண்டால்
குருதிதான் கெட்டு நாசங் குறுகிய குணம தென்ப
பெருகவே குளிர்மை கூட்டிப் பித்தம்பே திக்கச் செய்தால்
வருபிணி நீக்கி நல்ல வச்சிர காய மாமே 368

காயத்து நீரி லெண்ணெய் கதிர்முனை நின்று தானல்
சீயுற்ற பித்த மீறிச் செய்குண மென்று கண்டு
நீயுற்ற குளிர்மை பூட்டி நெகிழ்ந்திடப் பேதி கொண்டால்
நோயற்றுப் போகு மென்று நுவன்றனர் நூல்வல் லோரே 369

## வாதக்குறி

வல்லநல் லெண்ணெய் துள்ளி வார்த்തதி னெகிழா தாகில்
சொல்லருங் குளிர்மை மீறித் தோடமுற் றெய்து மென்றே
அல்லல்சேர் குளிர்மை சீத மகற்றியே வருந்தி டாமல்
செல்லுமுட் டணமே கூட்டித் தெளிந்துநன் மருந்தே செய்வாய்

## மரணக்குறி

செய்யநல் லெண்ணெய் தன்னைச் சிறுநீரில் விட்டபோதில்
ஐயம துறவே தாழ்ந்தா லதுவசாத் தியமே யாகும்
உய்வது மரிதா மாயி னெருபொரு ளுடைய சித்தம்
எய்யமா தல்லான் மற்று மெம்மனோர்க் கியம்பொ ணாதே 371

## வெப்பு

தானுட் டணிக்கு நாவரளுந் தண்ணீர்த் தாக மிகுதியிலை
ஊனெஞ் சிளைக்கு நீரொக்க வுற்ற மலமுஞ் சிவந்திருக்கும்
ஈன மிகுந்தே யிடுப்புளையு மிருகால் கரமுங் குளிர்ந்திருக்கும்
தேனே சிறுநீர் சிவப்பாகுஞ் செப்பீர் வெப்பின் செயலாமே 372

## குளிர்

செய்யநா வரட்சி யில்லை தெளிந்தநீர் சுவையு மில்லை
நையவே குளிரு மேனி நடுங்கிடும் வாய்நீ ரூறும்
மெய்யுடல் கரமுங் காலும் வெதும்பிடு மிரவி லேநீர்
பெய்வது மிகுதி யாகிற் பேசுவாய் குளிர்மை யென்றே 373

குளிர்மைசேர் சேற்ப னத்தின் குணங்களை யகற்ற வேண்டில்
வளியொடு சளிவா ராமன் மருந்தினைத் திருந்தச் செய்வாய்
பிழையுறச் சாவா ரென்றும் பிழைத்திடு வார்க ளென்றும்
குழையணி கூத்தர்க்கன்றியொருவர்க்குக் கூறொ ணாதே 374

## வாயு இடப்பக்கத்திலாயின் வெப்பும் வலப்பக்கத்திலாயின் குளிரும் என்பதறிக

இடையுறு வாயு வர்க்க மெழும்பிடி லிடது பக்கம்
தொடர்புற நின்றால் வெப்பின் தொகையெனத் தொகுத்துச் சொல்
உடலுடை வலது பக்கத் தொதுங்கியே பதுங்கி நின்றால் [வாய்
மடமயின் மானே யந்த வாயுவுங் குளிர்மை யாமே 375

## தாய்ப்பாலால் நீர்க்குறியறிய

பிழையறப் பிள்ளைப் பெற்ற பேதையர் முலைப்பால் வாங்கிப்
பழுதுற வியாதி யுற்ருேர் பசியநீர் தன்னில் விட்டால்
வழுவறக் கலந்த தாகில் வந்தநோய் மாறிப் போகும்
வழுவுறக் கலவா தாகின் மரணமென் றறிந்து கொள்ளே 376

## பன்றிக்கொழுப்பால் மரணக்குறியறிய

மரணமென் றறிவ தற்கு வராகத்தின் கொம்மை வாங்கிச்
சரணத்தின் மேலுங் கீழுந் தடவியே வழித்து நாய்க்குத்
தருணத்திற் போடத் தின்று செமித்திடின் மிகவு நன்ரும்
அரணித்தே வாந்தி பண்ணி லவத்தையென்றறிந்து கொள்ளே

## இரத்தச் சோதனையால் மரணக்குறியறிய

குறியின்னஞ் சொல்லக் கேளாய் குளிர்ந்தநீர் தன்னை வாங்கி
இறுகிய வருத்தக் கார னிரத்தத்தி லிரண்டு துள்ளி
உறுதியாய் விட்டுப் பார்க்க வுள்ளுறத் தாழ்ந்தால் நன்று
மறுகியே தாழா தாயின் மரணமென் றியம்ப லாமே 378

## பத்தியமறிய

சுரமிலா வியாதி யில்லைச் சுரம்வந்து காயு மாகில்
திரமதாய்த் தெளிவு கஞ்சி சிறந்தபன் னிரண்டிற் கொள்க
உரமிலாச் சுரங்கு றைந்தா லுறும்புற்கை மிளகு நீரே
தரமுறு சன்னி யாகிற் ருன்பொரித் தரிசி நீரே 379

பொரித்திடு மரிசி சுக்குப் புதுநில வேருங் கூட்டி
எரித்திடுங் கஞ்சி நன்ரு மேதமா மந்த மாகில்
கரித்திடுங் குடிநீர் தானுங் கஞ்சிநீர்த் தெளிவு நன்ரும்
பரித்திடும் பற்பத் துக்குப் பத்தியம் பசும்பால் நெய்யே 380

உப்புடன் புளியும் விட்டே யுவந்தபன் னிரண்டு நாளும்
மெய்ப்படி வெந்நீர் கூட்டி வேறுபத் தியமுங் கொள்க
செப்பிடும் வெப்பு மிஞ்சிற் றினங்குளிர் நீரின் மூழ்க
இப்படிப் பத்தி யங்க ளியல்புடன் பிடிக்க நன்ரும் 381

மகோதரக் காப்ப னுக்கு மாறிடக் குழம்ப ருந்தில்
தகவுடன் கோழி முட்டை சாரரைக் கீரைத் தண்ணீர்
தொகையுடன் முருங்கைக் கீரை சொல்லும்வெள் ளுள்ளிகூட்டி
மிகைபட வவித்த நீரும் மிக்கிடும் வாத மாகில் 382

பத்தியங் கடின மாகும் பகரும்வெள் ளாட்டின் பாலும்
சுத்தமா மிளகு நீருஞ் சொல்லிய முருங்கைப் பிஞ்சும்
நித்தியம் வெந்நீர் கூட்டி நிதானமாய் வீட்டில் வைத்துச்
சித்தியாற் சிவனை வேண்டித் தின்றிட மருந்து நன்ரும் 383

காற்றினிற் றிரிய லாகா கடும்வெயிற் போக லாகா
சீற்றமாங் கோப மாகா தீமையை நினைக்க லாகா
ஏற்றமா மினிப்புங் கைப்பு மிடர்செயுங் கிரந்தி யாகா
சாற்றரு மோட மேறிச் சமுத்திரம் போக லாகா 384

இலைப்பிள வருந்த லாகா வின்பத்தை நினைத்த லாகா
பலர்புகழ் கேட்க லாகா பத்திய முறிக்க லாகா
நிலைபெறு மனையாள் தன்னை நிச்சயங் காண லாகா
அலைவிலா மனத்த னாகி யமலனை நினைக்க நன்றே 385

நீதியோ டிருந்து நாளு நிமலன தருளை யுன்னிச்
சோதியே தியான மாகச் சொல்லிய மருந்துட் கொள்ளில்
ஆதியிற் செய்த கன்ம வினைவழிப் பிணிய கன்றே
ஏதமிலுலகி னுளு மிடரின்றி யிருக்க லாமே 386

பத்திய மில்லார்க் கென்றும் பகர்பிணி நீங்கா தென்று
சத்திய சித்த வேதம் சாற்றிய வுண்மை யாலே
உத்தம மருந்தின் மேலா முயர்ந்தபத் தியம தாகும்
சுத்தபத் தியமில் லார்க்குச் சொல்லிய மருந்தென் செய்யும் 387

மெய்ப்படி சித்தர் வேதம் விளம்பிய நீதி கண்டு
செப்புநன் மருந்து கொள்ளிற் சிவனைமுன் வணங்கிப் போற்றி
இப்படி யெனது நோயை யிரங்கியே தீர்ப்பா யென்றே
ஒப்புடன் மருந்து கொள்ள வுறுபிணி நீங்கிப் போமே 388

## ஒன்றுக்கொன்று மாறுபட்டு நோயுண்டாக்கும் உணவுகள்

வெண்கலப் பாத்தி ரத்தில் விட்டநெய் விடமஞ் செய்யும்
உண்குறு நெய்யி னோடே யொவ்வாது குளிர்ந்த நீரும்
பண்புறு மெண்ணெய் தானும் பயிலுறு தேனு மாகா
உண்குறி லிவைகள் கூட்டி யுடலினில் நோய்கள் சேரும் 389

சேராது பாலி னோடே தேன்கொழுப் பெண்ணெய் நெய்யும்
சேராது மாமி சங்கள் தீமைசேர் புளிப்புப் பண்டம்
சேராது வரகு காணந் தின்றிடும் பலவாங் கீரை
சேரமுள் ளங்கி தானுஞ் சேர்த்திடி னேய்கள் சேரும் 390

பித்தளை செம்பொன் றின்ன பேசிடும் பாத்தி ரத்தில்
உற்றிடு தயிரும் மோரு முண்பதற் குதவா தாகும்
மற்றடு கோழி யாதி மாமிச முண்ணும் போதே
சொற்றிடு தயிரு முண்ணிற் றேன்றிடும் பலவா நோய்கள் 391

தயிரிற்றேன் கலந்தே யுண்ணிற் சாருமே யுடலில் நோய்கள்
செயிருறு மாமி சத்திற் றேனுண்ண லாகா தென்பர்
உயிரறு கொழுப்பிற் றேன்சேர்த் துண்டிடில் நோய்க ளாகும்
பயிலுறு மெண்ணெய் தானும் பகைக்குமே தேனிற் கூடில் 392

அழுகிய கனிவர்க் கங்க ளாகமற் றெரிந்த பால்கள்
பழையவா யூசிப் போன பதார்த்தங்கள் மாமி சாதி
குழைவுற நாறு மன்னங் கொண்டிடு நுரையு நூலும்
பழுதுறு மிவைக ளுண்ணப் பற்றுமே கொடிய நோய்கள் 393

விடமித்த வுணவுப் பண்டம் விரும்பிமென் மேலு முண்டாற்
கொடியகை விடங்க ளாதி கூடிடு முணவுட் கொண்டால்
வடிவுறு பலநோய் தோன்றி வாடியே யிளைக்கு மேனி
முடிவுறு மரணந் தானு முடுகியே நிற்கு மன்றே 394

## நஞ்சுகளுக்கெல்லாம் மாற்று

தங்கத்தை யுண்ணும் பேர்க்குத் தாக்கிடா தெந்த நஞ்சும்
பங்கத்தைச் செய்யு நஞ்சு பற்றியே யுடலிற் றுவில்
தங்கத்தை முன்னோர் சொன்ன தகுமுறைப் படியே நீற்றி
அங்கத்தைப் பேண வுண்ணி லாறுமே விடத்தின் வேகம் 395

## ஆகாதஉணவினுல் தாக்கப்படாதோர்

கூடிய வாலி பத்தோர் குணமபெறு வலுவுள் ளோர்கள்
நீடிய வுழைப்புள் ளோர்கள் நிகரறு பசிபெற் றோர்கள்
தேடிய விரோதப் பண்டஞ் சேர்த்தருந் திடினு நோயால்
வாடிடா ரென்று நூல்கள் வழுத்திய துண்மை யாமால் 396

## நல்வழி

உண்மையா யினுமுன் னுண்ட வுணவுபோ யற்ற பின்னர்த்
திண்மையாய் மாறு கொள்ளாத் தீயறிந் தளவா யுண்டு
வண்மையா யிராவு றங்கி வன்பக லுறக்கம் நீங்கிப்
பெண்மையின் மனையா ளன்றிப் பிறரையே றெடுத்து நோக்கார்

நோக்கிடா திருந்து நாளு நுவன்மனக் களிப்பி னேடு
வாக்கினின் மனத்தி னுலு மன்னுயிர்க் ககித மெண்ணர்
தூக்கியெச் செயலுஞ் செய்து சோர்வின்றி யுடலு ழைப்பில்
ஆக்கியே தீமை நன்கி லருஞ்சம புத்தி பண்ணி 398

பண்ணுநம் வினைக்கீ டாகப் பரசிவன் செயலீ தென்றே
எண்ணிவெந் துயர்கூ ருமை லிறைவனே யெல்லாமென்று
நண்ணிவெண் ணீறு பூசி நயக்குமஞ் செழுத்தை யுன்னி
மண்ணிடை வாழ்வார்க் கில்லை வன்பிணிப் பிறவி தானும் 399

பித்தனென் றெருவர் வாயில் வந்தவா பேசி யுய்ந்தார்
அத்தனை விரலி னுலே யப்பற்குக் காட்டி யுய்ந்தார்
உற்றிடு மூன்று மாண்டி லொருவர்நற் றேடு பாடிச்
செற்றிடு கூற்றுப் பாடித் தேறினு ரொருவர் காணே 400

அங்காதிபாதம் முற்றிற்று

# நீர்நிறக் குறி

## கடவுள் வணக்கம்

ஒருதிருப் பிரணவத் துதித்தகா ரியனை
ஒத்தின்முன் மொழிக்குரை உரைத்த ஆரியனைக்
கருணையி னுதவிய கவுரிதன் பாகன்
கருதரும் பெரும்பெயர்க் கடவுட னுகள
நிறப்பது மச்சரண் நெஞ்சில் இருத்தி
நிறக்குறி இயலினை நிலவப் புகல்வாம்.

(இதன் பொருள்) ஒப்பில்லாத மேன்மைகொண்ட இரண்டற்ற கடவுட்டன்மையுள்ள ஓங்காரத்தினின்று தோன்றிய விநாயக மூர்த்தியையும், வேதத்தின் முதன்மொழியாகிய ஓங்காரத்திற்குப் பொருளெடுத்தோகிய நம் குருவாகிய முருகவேளையும், பார்வதி பாகனும், யாவராலும் கருதுவதற்கியலாத பெரும் பெயர்க் கடவுளுமாகிய சிவபெருமான் தான் தன் கருணையால் தந்தருளிய, செந்நிறம் பொருந்திய முளரி மலர்போன்ற இரண்டு திருவடிகளையும் எம்மனதின்கண் பதியவைத்துக் கொண்டு நீரின் நிறக்குறி இயலினை யாவருக்கும் விளங்கும்படி சொல்லுவாம். (1)

## நிறக்குறி நெய்க்குறி நிச்சயித்தற்குரிய நீர் இலக்கணம்

அருந்தும் ஆறிரதமும் அவிரோ தமதாய்
அஃகல் அலர்தல் அகாலவூண் தவிர்ந்தழற்
குற்றள வருந்தி உறங்கி வைகறை
ஆடிக் கலசத் தாவிஏ காதுபெய்
தொருமுகூர்த் தக்கலைக் குட்படு நீரின்
நிறக்குறி நெய்க்குறி நிருமித்தல் கடனே.

(இ-ள்.) உண்ணுகின்ற அறுசுவைப் பொருள்களும் ஒன்றுக்கொன்று வேற்றுமை யடையாமலும் பசிக்குத்தக்கபடி குறைதலும் அதிகரித்தலும் காலந்தப்பலும் நீங்கிப் புசித்து உறங்கி விடியற்காலத்தில் படிகபாத்திரத்தில் நீரின் ஆவி போகாதவண்ணம் பெய்து $3\frac{3}{4}$–நாழிகைக்குட்பட்ட நீரில் நிறக்குறியும், அதில் எண்ணெய் விட்டுப் பார்த்துக் காணப்படுகின்ற குறியையும் கவனித்து ரோகங்களின் சாத்தியாசாத்தியம் நிச்சயித்தல் முறைமையாம். (2)

## நோயுற்றோர்க்கு மேற்படி விதி விலக்காம்

அருப்ப முற்றோர்க் கவ்வித விலக்கே.

(இ-ள்.) மிகவும் நோயுற்றோருக்கு முற்சூத்திரத்திரத்தில் கூறிய விதிகள் விலக்காம். (3)

## நீரின் பொதுக்குணம்

வந்தநீர்க் கரியிடை மணம்நுரை எஞ்சலென்
றைந்தியல் உள அவை அறைகுது முறையே.

(இ-ள்.) இழிகின்ற நீருக்கு, நிறம், எடை, நாற்றம், நுரை குறைதல் என்று ஐந்து இயல் உண்டு ; அவை :— (4)

## நிறத் தொகை

பீதம் செம்மைபை கருமை வெண்மையென்
றேதைங் கொழுமையை ஒத்துகு நீரே.

(இ-ள்.) நீரானது மஞ்சள், சிவப்பு, பச்சை, கறுப்பு வெண்மை என்னும் தனித்தனி ஐந்து நிறமுள்ளதாக இறங்கும்.

## ஒவ்வொரு நிறத்திலும் காணும் உட்பிரிவுகள்

அரிசனத் தாறும் அருணத்து நான்கும்
அரிதத் தைந்தும் அஞ்சனத் தொருநான்கும்
வெண்மையுள் இரண்டுமாய் விள்ளுஞ் சுருதியே.

(இ-ள்.) மஞ்சள்நிறத்தில் ஆறு வகையும், சிவப்பில் நான்கு வகையும், பச்சையில் ஐந்துவகையும், கறுப்பில் நாலுவகையும், வெண்மையில் இரண்டு வகையுமாய்ப் பிரியுமென்று சித்தர் நூல்கள் கூறுகின்றன. (6)

## மஞ்சள்நிற நீர் விகற்பம்

மஞ்சள்நீர் விகற்ப வன்னம் புகலுதும்.

(இ-ள்.) மஞ்சள் நிறமுள்ள நீரின் பேத நிறத்தைச் சொல்லுவாம். (7)

## செரியாமை அபக்குவநீர் நிறம்

நீரணும் வழுதுகு நீத்தம் நிறமெனின்
சீரணக் குறைவின் அபக்குவ நீரே.

(இ-ள்.) மழைநீர் முதலிய நீரால் நனைந்து ஊறிய வைக் கோலிலிருந்து ஒழுகுகின்ற நீரின் நிறமாயிருக்குமாயின் அந்நீர் சீரணக் குறைவால் உண்டானதாகும். (8)

### சீரணபக்குவ நீர் நிறம்

பாரில் துரிஞ்சிப் பழநிறம் பொருந்தில்
சீரண பக்குவ நீரெனத் தேரே

(இ ள்.) துரிஞ்சிப்பழ நிறத்தைப் பொருந்துமானல், அந்நீர் சீரணபக்குவத்தினுல் உண்டானதென்று அறிந்துகொள்க. (9)

### மிகு வெம்மையாலுண்டாகும் நீர் நிறம்

செம்மையும் நிசியும் சேர்ந்தெழு நிறமெனின்
வெம்மை உயர விளைந்தவிர் நீரே.

(இ-ள்.) சிவப்புப் மஞ்சளுங் கலந்து இழியுமானல், மிகு வெம்மையால் விளைந்த நீரென அது விளக்கும். (10)

### சூட்டைத் தரற்குரிய நீர் நிறம்

காட்டின் நரந்தக் கனிநிறம் காணில்
சூட்டைத் தரற்குத் தொடுகுறி நீரே.

(இ-ள்.) காட்டு நாரத்தம் பழத்தோல் நிறம் வெளிப்படும் நீர் சூட்டைக் கொடுப்பதற்கு உண்டான நீராகும். (11)

### அதி உட்டின நீர் நிறம்

கொதி அனல் நிறத்தின் கொள்கையே யாயின்
அதி உட் டினத்தை அடைந்தநீர் ஆமே.

(இ-ள்.) கொதிக்கின்ற தீயின் நிறத்தைப் பொருந்தியிறங்கும் நீர் மிகுந்த சூட்டினை அடைந்த நீராகும். (12)

### முன்னிலும் அதியுட்டின நீர் நிறம்

பீதமுங் குங்குமப் பூவுமா ரெழிறரின்
ஏதிதன் மேல்வெப் பின்றெனு நீரே.

(இ-ள்.) மஞ்சள் நிறமும் அதில் அரைத்த குங்குமப்பூ நிறமும் வரிவரியாகப் பொருந்தியிருக்குமானல் இதற்கு வெப்பத்தின் உச்சத்தை அடைந்ததாகக் கருதப்படும் என்று சொல்லத்தக்க நீராகும். (13)

மஞ்சள்நிற நீர்வேற்றுமை ஆறு முற்றிற்று.

### செம்மை நீர் வேற்றுமை இயல்

செம்மைநீர் விகற்பச் செய்தி நவிற்றுவாம்.

(இ-ள்.) சிவப்பு நீரினது பேதத்தைக் கூறுவாம் (14)

### இரத்தம் பொங்கிய நீர்

அரத்தமும் கருமையும் அண்ணிய கறைதரின்
இரத்தம் பொங்கலால் இறங்கிய நீரே.

(இ-ள்.) செம்மையுங் கருமையும் பொருந்திய நிறத்தைக் காட்டும் நீர் இரத்தம் பொங்குதலாலுண்டாகின்ற நீராகும். *(15)*

### மிகு இரத்தக்கொதிப்பால் இறங்கும் நீர்

செக்கச் சிவந்தபன் னீர்ப்பூப் புகலுறின்
மிக்குதி ரக்கொதிப் பால் உகும் நீரே.

(இ-ள்.) மிகுந்த செந்நிறமுள்ள பன்னீர்ப்பூ நிறத்தைப் பொருந்துமானல் அதிக இரத்தக்கொதிப்பினல் இறங்குகின்ற நீராகும். *(16)*

### முன்னிலும் அதிகமாகப் பொங்குதலால் உண்டாகும் நீர்

கருமையுள் செம்மைசேர் கறையும் சிவப்பும்
குருதி பொங்கிய குறிபுகல் நீரே.

(இ ள்.) கறுப்பும் அதில் சிறிது செம்மையும் கலத்த நிறமும், இவைகளையின்றித் தனித்த அதிக சிவப்பு நிறமும் உண்டாயிருக்குமானல் அது இரத்தம் பொங்கிய குறியைக் கூறும் நீராகும். *(17)*

### பச்சைநீர் வேற்றுமை இயல்

பச்சை நீர் விகற்பம் பன்னுது மிவணே

(இ-ள்) பச்சை நீரில் பேதத்தைக் கூறுவாம். *(18)*

### சீதள நீர்

கருமைச் சாமளக் கருவுறு மாயின்
வருசீ தளத்தால் வரப்படு நீரே.

(இ-ள்.) கறுப்பு நிறத்தையும் சிறிது பச்சைநிறத்தையும் கலந்தானல் சனித்துக்கொண்டிருக்கிற சீதளத்தினல் வருகின்ற நீராகும். *(19)*

### நஞ்சாலுண்டாகும் சீதள நீர்

இடத்துறு குணத்தை யேய்க்கு மெனிலோ
விடத்துறு சீதளம் மேலிடு நீரே.

(இ-ள்.) ஆகாயநிறத்தை யொத்திருக்குமானல் (*) விஷத்தினல் உண்டான சீதளம் மேல் இடுதலால் உண்டாகும் நீராகும்.

(*) ஈண்டுக் கூறிய நஞ்சாவது—1. கிருத்திரம நஞ்சு, (2) அகிருத்திரம நஞ்சு என இருவகைப்படும். இவ்விரண்டில்,

**1. கிருத்திர நஞ்சாவது :—** நாபி முதலிய பூண்டுகளை யாவது பாம்பு முதலிய செந்துக்களின் விடங்களையாவது மற்றொரு பொருளில் கலந்து கொடுக்கப்படுவதாம். இதை ‘ இடுமருந்து ’ என்றும் சொல்லப்படும்.

**2. அகிருத்திரம நஞ்சாவது :—** தாவர நஞ்சு, சங்கம நஞ்சு என இருவகைப்படும்.

இவற்றுள், (அ) **தாவர நஞ்சாவது :—** பூண்டு, செடி, கொடி, புல், மரம் ஆகிய இவைகளின் கிழங்கு, வேர், பட்டை, பால் பிசின், இலை, பூ, காய், கனி முதலிய பொருள்களிலும் இருக்கின்ற நஞ்சாம்.

(ஆ) **சங்கம நஞ்சாவது :—** பாம்பு, கீடம், வண்டு, தேள், சிலந்திப்பூச்சி, நாய், நரி முதலியவைகளால் வருகின்ற நீராம்.(20)

## மிகு சீதள நீர்

தகுமொரு நீலச் சாயைகண் டிடினே
மிகுசீ தளத்தால் விளை நீ ரிதனுல்
மருத்துநோய் பால விருத்தர்க்கு மாமே.

(இ-ள்.) நீரில் ஒருவித நீலச்சாயை காணுமானல் மிகுந்த சீதளத்தினுலுண்டாகும் நீராம்.

இந்நீரினுல் பாலர்களுக்கும் விருத்தர்களுக்கும் வாதரோகம் உண்டாகும். (21)

## வாதபித்த கபங்களைக் கொடுக்கும் நீர்

அம்மநீ லத்துரு வார்ந்துந் தடிக்குமென்
மும்மலச் சிலைதவை முளைப்பிக்கு நீரே.

(இ-ள்.) நீலநிறத்துடன் தடித்தும் இருக்குமானல வாதபித்த கபங்களுக்குக் கெடுதியை உண்டாக்கும நீராம். (22)

## மேற்கூறிய மும்மலங்களை மிகவும் கெடுக்கும் நீர்

சொக்கிலைப் பச்சையின் தோற்ற முளதேல்
மிக்கு மும்மலம்கெட விழுநீர் கொடிதே

(இ-ள்.) சொக்கமான இலைப்பச்சைபோல நிறமுள்ளதாய் இருக்குமானல் வாதபித்த சிலேட்மங்கள் மிகவும் கெடுவதற்கு ஆக இழிகின்ற நீராகும். ஆதலினல் இது கொடியநீராகும். (23)

பச்சைநிற நீர் வேற்றுமை ஐந்தும் முற்றியது.

### கருமைநிற நீர் வேற்றுமை

கருமைநீர் விகற்பம் கழறப் புகுவாம்.

(இ-ள்.) கருமை நீர் வேற்றுமையைக் கூறுவாம். (24)

### காமாலை நோயைத் தரும் நீர்

வான்மீக வெழிற் குண்மைக் குணமுறின் அது
தான்கா மாலைநோய் தரும்அஃ தின்றெனில்
பித்தநோ யெனும் பிறக்கப் பணிக்குமே.

(இ-ள்.) குங்குமப்பூ நிறத்துள் கருமைநிறந் தோன்றுமானல் அந்த நீர் காமாலை நோயையுண்டாக்கும். இல்லாவிடில் பித்த நோயை உண்டாகச்செய்யும். (25)

### உதிரக் கெடுதி

அம்மையுஞ் சிறிய செம்மையுஞ் சிவணினே
அரத்தத் தழிவென் றறைதரு நீரே

(இ-ள்.) முன் சொல்லப்பட்ட குங்குமப்பூ நிறத்துடன் கலந்த கருநிறத்தோடு சிறிது செம்மை நிறமுங் கலந்திருக்கக் காணு மானல் அஃது இரத்தக் கெடுதியினுலுண்டாகிய நீராம். (26)

### உதிரத்து அழுக்கைக் காட்டுவது

கார்க்குள் புன்னரிக் கருவிரவிய தெனின்
ஆர்க்கத் தழுக்கை அறிவித்த நீரே.

(இ-ள்.) கரிய நிறத்துடன் சிறிது பச்சை நிறமுங் கலந்து காணப்படின் அது இரத்தத்தினுடைய அழுக்கைத் தெரிவித்த தாகும். (27)

### சிலேத்தும வாத கெடுதி

மையும் வெளிறும் மருவிய சாயையேல்
ஐயுயிர் மிகத்கொதித் தழிவுறு நீர் இது
காலா தீதக் கனல்பவத் துடையது
மாலாந் தருண சுரத்தர் விருத்தர்க்கு
உண்டாம்ஐத் திரவியத்தா ஞல் கொடிதே,

(இ-ள்.) கரிய நிறமும் வெண்ணிறமுஞ் சேர்ந்துண்டான நிற முடையதுபோல் தோன்றின் அந்நீர் சிலேத்தும வாததோடங்கள் அதிகமாய்க் கொதித்துக் கெடுதலைத் தரும் நீராம். இது நெடுங் காலத்திற்குமுன் வெப்ப உற்பத்தியினுலுண்டாவது இது மயக்கங் கொடுக்கிற தருண சுரக்காரருக்கும் கிழவருக்கு முண்டாவது. இது ஐயப்பொருளை மிகுதியாய்உண்பதால் உண்டாகிறதாகையால் கொடிய நீராம். (28)

கரியநீர் விகற்பம் முற்றியது.

## வெண்மை நீர் விகற்பம்

வெண்மைநீர் விகற்பம் விரித்தினி துரைப்பாம்.

(இ-ள்.) இனி வெள்ளை நிறமுடைய வகைகளை விரித்துச் சொல்லுவாம். (29)

## சுத்த சீதள நீர்

வெண்மையு முற்று மிகத்தெளி வுடைத்தேல்
உண்மையாஞ் சுத்த சீதளத் துதகமாம்
இந்நீர் வசப்படா திவனுய்யுந் தரம்
முந்நீர்ப் பெருக்கு அமிழ்வா னுய்தல் ஒக்குமே.

(இ-ள்.) நீரானது வெள்ளை நிறத்துடன் மிகுந்த தெளிவையு முடைத்தாயிருக்குமானால் உண்மையாகிய சுத்த சீதளத்தினு லுண்டாகிய நீராகும். இந்த நீரானது மருந்துகளுக்கடங்காது. இந்த நீருள்ள நோயாளி பிழைத்தல் கடற்பெருக்கில் முழுகு கின்றவன் பிழைப்பதை யொக்கும். (30)

## சிலேத்துமத்தின் கொதிப்பு

அற வெளிர்ப்பிலும் சளியைப்போல் விழின் அது
மறவன் அதி கொதிப் பால்வரு வனமே.

(இ-ள்.) நீர மிகவும் வெளுத்தாலும் அதில் சளியைப்போல் விழுமானால் அந்த நீர் ஐயத்தின் மிகுந்த கொதியால் வருகின்ற நீராம். (31)

## சயம் (இளைப்பு நோய்)

அமிழ்து அரியெனில் என்புஅற வுருக்கியநீர்
அஃதே கயநோய் ஆக்கும் அந்தத்தே.

(இ-ள்.) நீரானது பாலின் நிறத்தைப் பெற்றிருக்குமானால் எலும்பை மிகுதியாக உருக்கிய நீராகும் அந்நீரே கடைசியில் சயமென்னும் இளைப்பு நோயை யுண்டாக்கும். (32)

## கருப்பை இரணம்

காணிதில் சீழுங் கலந்து இழிமணம் உறின்
கருப்ப நாபிகள் உளுங் காமநா ளத்துளும்
விரணமுண்டு இன்றேல் எய்தும் அஸ்மரி யலது
இருத்தலே திண்ணம் எனமனத்து எண்ணே.

(இ-ள்.) இறங்குகின்ற இந்நீரில் சீழுங்கலந்து கெட்ட நாற்றம் வீசுமானல் கருப்பப்பையினுள்ளும் கொபபூழிடத்தினுள்ளும் ஆண் குறித் துளையினுள்ளும் புண்ணிருக்கும். அவ்வாறு புண் இல்லை யானால் கல்லடைப்பு நோயாவது இனியுண்டாகுமென்றும் அல்லது அந்நோய் இருத்தலே திண்ணமென்றும் உள்ளத்தில் எண்ணக் கடவை. (33)

### கபம் சந்நிபாதம்

விந்துவைப் போன்றநீர் விறல்கப நோயையும்
பந்தித்த சந்நி பாதத்தையுந் தரும்.

(இ-ள்.) இந்திரியத்தைப் போன்ற நீரானது வன்மையுள்ள கோழை நோயையும் உறுதியான சன்னிநோயையும் தரும்.

(குறிப்பு) கோழைநோய் மூன்று வகைப்படும். சயம் (இளைப்பு நோய்), சுவாசம் (இரைப்பு நோய்), காசம் (கோழை நோய்). (34)

### உப்புறையாதது

விடுமுழி உவருரு விடின் அது கொடிதே

(இ-ள்.) நீர்விட்ட இடத்தில் அந்நீரினது உப்பு உறையா விட்டால் அந்த நீர் கெடுதியை விளைவிப்பதாகும். (35)

### வெப்பம்

தக்கிரம்பால் எனத் தனித்தனி யொழுகுமேல்
உக்கிர வெப்பத்து உதிகால நீரே.

(இ-ள்.) நீரானது மோரைப்போலவும் பாலைப்போலவும் நிற முள்ளதாய் தனித்தனி இறங்குமானல் கொடிய வெப்பத்தினுல் உண்டான கூற்றுவனை யொத்த நீராம். (36)

### குண்டிக்காய்த் துர்ப்பலம்

தீப்புலால் கழுநீர்ச் செயல் எனிற் குண்டிக்
காய்த்துர்ப் பலத்தால் கதித்த நீராம் அத்
துர்ப்பலம் கபமுஞ் சோரியுங் கொதிப்புறப்
பற்பக லாகப் பையப் பதிந்ததே.

(இ-ள்.) நீரானது கெட்டுப்போன தசையைக் கழுவிய நீரின் நிறமுண்டாயிருக்குமானல் குண்டிக்காயினது வன்மைக் குறைவா (பலவீனத்தா) லுண்டான நீராம். அந்த வன்மைக் குறை வானது கோழையுங் குருதி (இரத்தம்) யும் கொதிப்படைந்ததினுல் பல நாள்களாக மெல்ல மெல்ல மறைந்துண்டானதாகும். (37)

### தீரா நோய்

தடிக்கினு நெய்யின் தன்மையொத் திடினும்
படிக்குள் இரண்டு பாணியுந் தீதே

(இ-ள்.) நீரானது கனப்பாயிருந்தாலும் நெய்ப்பசையை யொத்ததாயிருந்தாலும் இவ்விரண்டு நீரும் இந்நில வுலகத்தில் கொடியதேயாம். (38)

வெண்மை நீர் இலக்கணம் முற்றியது.

## நிற இலக்கணம்

### மதாந்தரம்

### வாதப்பிணி

பாண்டரி நெய்யரி பற்றிய நீரெலாம்
தாண்டரி நோயே தருமெனுஞ் சிலநூல்

(இ-ள்.) வெண்ணிறத்தையும், உதிர நிறத்தையும் பொருந்தியநீ ரெல்லாம் தாவுகின்ற வாத ரோகத்தையே தருமென்று இந்நூல் கூறும். (38 அ)

### பித்தப்பிணி

கனிபொம்மன் மாசுக் கனிநிறம் போன்றும்
கனத்த சௌவீரக் கலையது போன்றும்
சனித்த எண்ணெயின் தன்மையைப் போன்றும்
சாரிய நீர் இவை சீரியமெய்க் குளாம்
பித்தப் பிணியாற் பிறந்தன வென்றே
சித்த சாரனவம் தெளிய விரிக்குமே.

(இ-ள்.) கனிந்த பொம்மன் மாசுப் பழத்தின் நிறத்தை ஒத்தும், கனமுள்ள சௌவீரத்தின் ஒளியைப் பொருந்தியும், எள் நெய்யின் வன்னத்தைப் போன்றும் இறங்கிய நீர்கள் உடலில் பித்தக் கோபத்தினுல் பிறந்த பித்தப்பிணியைக் குறிக்குமென்று 'சித்தசாரனவம்' என்னும் நூல் தெளிவுபட விரித்துக் கூறும்.

### பித்தகாமாலை, நீர் நிறம்

மந்திரி நிறமாய் வரப்படு நீரும்
உந்திய எருவையை ஒத்துகு நீரும்
பித்துகா மாலைகளால் பிறந்தன வெனச்
சித்திய வித்தியா தரம் செப்புமே.

(இ-ள்.) பித்த (மஞ்சள்) நிறமாய் இழிகின்ற நீரும், தள்ளப் பட்ட உதிரத்தை ஒத்து இறங்குகின்ற நீரும், பித்த காமாலை ரோகங் களால் பிறந்தனவென்று 'சித்தவித்தியாதரம்' என்னும் நூல் செப்பும். (39 இ)

### கபப்பிணி நீர் நிறம்

அருச்சுனத் தொடுநுரை புற்புதம் எழினும்
அருந்துநீ ரொக்கினும் அவியினை ஒக்கினும்
கலப்பெழில் உறினும் அக்காண்டம் கபநோய்
தலைப்படும் காலைச் சாரும் என்பரே.

(இ-ள்.) வெண்மை நிறத்துடன் நுரையும் குமிழியும் உண்டா னலும், உப்பின் தன்மையின்றிக் குடித்தற்குரிய சுத்த நீரைப் போலிருந்தாலும், நெய்யை ஒத்திருந்தாலும், நிறம் பல கலந்து தோன்றினலும், அந்நீரானது கப ரோகம் உண்டாங் காலத்து இழியு மென்பர். (38 ஈ)

## தொந்தப்பிணி நீர் நிறம்

இன்னும் அம்மதமே இருந்தொந்த நீழல்நீர்
தன்னில் கருமைச் சாயை உண் டென்னுமே.

(இ-ள்.) இன்னமும் அம்மதாந்தரம் தொந்த நிறத்துடன் உண்டாகும் நீரின் கண் கருமை நிறமும் உண்டாகு மென்று கூறும். (38 உ)

## மேகநோய், மகாநோய் இவற்றின் நீர் நிறம்

புண்ணீர் மேகப் புன்கண் மாப்பிணி
நண்ணில் நித்திய நாதீயம் ஆமெனும்.

(இ-ள்.) நீரில் உதிரமானது காணப்படுமானல், மேக ரோகம் அல்லது மகாரோகம் உண்டாம் என்று 'நித்திய நாதீயம்' என்னும் நூல் மொழியும். ((38 ஊ)

## சுரப்பிணி நீர் நிறம்

சுரப்பிணி அரிசனம் தோயங் காட்டுமே.

(இ-ள்.) சுரநோயில் மஞ்சள் நிறம் பொருந்திய நீர் தோன்று மென்று கூறும். (38 எ)

## அசாத்திய நீர் நிறம்

சுரமெனும் மேகத் துனியேனும் இருக்கில்
பெருகிய மூத்திரம் பிரிக்கும் உயிரையே.

(இ-ள்.) சுரம் அல்லது மேகவியாதி கண்டிருக்கும் காலத்தில் அதிகரித்த நீர் உயிரை நீக்கி விடும். (38 ஏ)

## நிறை இலக்கணம்

அற்பமும் கனமற் றதிதெளி வுறுமெனின்
வற்புறு சீதளம் மன்னிக் கனத்துக்
கபத்தை இளக்கலால் கண்டநீர் இஃதே.

(இ-ள்.) கொஞ்சமேனும் கனமென்பதின்றி, நீர் இருத்த லுடன், மிகவும் தெளிந்து மிருக்குமாயின இத்தன்மையுடைய நீர், வலுமையுற்ற சீதளம் நிலைபெற்று ஓங்கி கபத்தை இளக்கலால் உண்டாகிய நீரெனக் கருதுக. (39)

### நீர்ப்பை இந்திரியவழி இவற்றின் மிக்க பலவீனத்தைக் குறிக்கும் நீர்

இது நீர்ப்பை இந்திரியவழி இவற்றுண்
முதிர்துர்ப் பலத்தான் முளைத்தெனக் கொள்க

(இ-ள்.) இந்நீரானது, நீர்ப்பையின் மிகுந்த துர்ப்பலத்தினுலும், இந்திரிய இடத்தின் மிகுந்த பலவீனத்தாலும் உண்டாயிற்றென்று கொள்ளக்கடவை. (40)

### அன்றியும்,

மிக்குத் தடித்து விழுமேல் மலங்களின்
நற்குண வழுவை நன்கோது நீரே.
(இதனுல்)
வீக்கமும் பிடகமும் மேலிடும் இவைமறு
நாட்குநாள் அல்கின் நலனும் இவரின்
தொடில்சுடுங் கொடிய விடச்சுரம் அண்ணுமே,

(இ-ள்.) மிகத்தடித்து இழியுமாயின் வாத பித்த கபங்களின் நற்குணக் கெடுதியை நன்ருகக் காட்டும் நீராகும். இதனுல் வீக்கமும் (சோபையும்) கட்டிகளும் அதிகரிக்கும். இவ்விரண்டும் கண்ட நாள் தொடங்கி நாளுக்குநாள் குறையுமானுல் நன்மையாம். அதிகரிக்குமாயின், தொட்டமாத்திரத்தில் சுடுவதான கொடியவிட வெப்புப்பிணி அணுகும். (41)

மிகத்தடிப்பும் மிகத் தேறலும் இன்றெனில்
சுகத்தைத் தரும்மெய்ச் சுபாவநீர் நன்றே.

(இ-ள்.) மிகுத்த கனமும் அதிக தெளிவும் இல்லாவிட்டால் சுகத்தைத் தருவதான உடற்சுபாவ நீராகும். இது நன்மையே.

நிற இலக்கணம் முற்றிற்று

### மணவிலக்கணம்

ஓதமணத் தொடவ் வோதா் ஒத்திறங்கும்
சீதளங் கம்மிய தேகி களுக்கே.

(இ-ள்.) சீதளங்கம்மிய தேகிகளுக்கு நீர்ப்பெருக்கத்திற்குள்ள நாற்றமுடன், அப்பெருக்கின் நிறத்தையும் கனத்தையும் ஒத்து மூத்திரம் இழியும். (43)

### மூத்திரப்பை, நாளப்புண் நீர்

வெய்ய துர்க் கந்தம் வீசுநீர் மூத்திரப்
பைநாளம் இவற்றைப் பற்றுபுண் குறியே
அம்மொழியின்றெனி னனிலமே முதலிய
மும்மலச் சுதமே மூலமென் றுணரே.

(இ-ள் ) வெய்ய மணம் வீசுகின்ற நீர் மூத்திரப்பை, மூத்திர நாளம் இவைகளைப் புண்பற்றி யிருக்குமென்கிற குறியைக்

காட்டும். அங்ஙனமின்றெனில் வாதபித்த கபங்களின் கெடுதியே துர்க்கந்த நீருக்குக் காரணமென்று உணரக்கடவை. (44)

## உட்டின நோய் நீர்

மட்டிற் புளிமண மணந்திழிந் திடினல்
துட்டினப் பிணிபிணிப் புற்றெழு நீரே
முடிவிலவ் வட்டின முளரிவா யறல்பொற்
படு சீதளச்சம்பந்த மாக்கிடுமே.

(இ-ள்.) அளவு கடந்த புளியின் மணம் கமழ்ந்து நீர் இறங்குமாஞல், அந்நீர் உட்டினப்பிணி பந்தப்பட்டு உண்டாகின்ற நீராகும். கடைசியில் அவ்வுட்டினம் நோயாளியைத் தீயினின்று உண்டாகும் நீர் போலச் சீதளத்துடன் உறவாக்கிவிடும் (45)

## குருதி மிகுதியால் உண்டாகும் நீர்

இனித்த மணத்தோ டிறங்கி னெய்மிக்குச்
சனித்த விருத்தியைத் தழுவிய நீரே
அல்லதவ் விருத்தியா லாம்பிணிக் குழாத்த
தல்லதில் லென்ப தாய்ந்தோர் மதமே.

(இ-ள்.) இனித்த மணத்தோடு இறங்குமாஞல், அந்நீர் உதிரம் மிகுந்து உண்டாகிய விருத்தியைத் தழுவிய நீராகும் அஃதல்லாவிட்டால் உதிர விருத்தியால் உண்டாகிய பிணிக் கூட்டத்தைப் பொருந்தியதேயன்றி வேறு ஆகமாட்டாது. என்பது, வாகட நூல் ஆராய்ந்தோர்களின் கொள்கையேயாம்.

## பித்த சுபாவ குணக் கெடுதி நீர்

கருமான் மணமே கமழுமென் ருலது
குரவன் சுபாவ குணங் கெடு நீரே.

(இ-ள்.) கருநிறமுள்ள மானினிடத்துண்டாகும் மணமே கமழுமாஞல், அது பித்தத்தின் இயற்கைக்குண விகற்பத்தால் உண்டாகிய நீராகும். (47)

## உடற்பசைக் கெடுதி நீர்

புலால்மணங் கமழிற் பூதியப் பசைக்கே
டலாதிலை யந்நீரக் குண மின்றெனில்
அடையுந் ததியென் றறையத் தான்மிகக்
கெடுதி யெனவுங் கிளக்குஞ் சுருதியே.

(இ-ள்.) புலால் மணம் போல நீர் கமழுமாஞல் உடற்பசைக் கேடே அல்லது வேறொன்றுமில்லை. அந்நீருக்கு அக்குணம் அச் சமயம் இல்லாதிருப்பினும் உடனே அக்குணம் வருங்காலமென்று

கூறுவாயாக. அந்நீரினுல் மிகக்கெடுதி நேரிடுமென்று வாகட நூல் மொழியும். (48)

மணவிலக்கணம் முற்றியது

## நுரை இலக்கணம்

பந்தம் மெய்ப்பசை இளகப்படும் பருவத்
தந்தர்ப் பூதமாய் அனிலம் மூத்திரத்தில்
சம்பந்தப் படும் ததிநுரைப் புனலே.

(இ-ள்.) அவலம்பகம், தருப்பகம், கிலேதகம், சந்திகம், பேதகம் என்று உடலுறுதிக்காக இருக்கும் பசை இளகப்படுங்காலத்தில், ஒருவரும் அறியாவண்ணம் வாயு மூத்திரத்தில் சம்பந்தப்படும். அப்பொழுது நுரைபொருந்திய நீர் இழியும். (49)

### காமாலே நீர்

அந்நுரை பீதம் கருமை செம்மை
மன்னுறு நிறந்தரின் வரும் காமாலேயென்
றுன்னிப் புரப்பர் ஒப்பில் பிடகரே,

(இ-ள்.) மேற்கூறிய நுரைபொருந்திய நீர், மஞ்சள் கருமை செம்மை நிறங்களேக் காட்டுமானுல், காமாலே நோய், உண்டாகு மென்று எண்ணி வாகட நூலின் ஆராய்ச்சியில் தமக்கு நிகரில்லாத வைத்தியர்கள், அதை வரவொட்டாமல் தடுத்துப் பாதுகாப்பர்.

### வாத முதலிய மூன்றும் குறையும் நீர்

நுரைதேய்ந் தொழுகுநீர் நுவலரும் மும்மலம்
கரைய இளகிடும் காலத்தென்னே.

(இ-ள்.) நுரை குறைந்து இழியும் நீர் சொல்லுதற்கரிய வாத பித்த கபங்கள் தத்தம் வன்மையிற்குன்றி தேயுங் காலத்து உண்டானதென்று கூறுவாயாக. (51)

நுரை இலக்கணம் முற்றியது

## எஞ்சல் இலக்கணம்

### பாண்டுநோய் உற்பத்தியைக் காட்டும் நீர்

இயற்கைநீர் சுருங்கினும் இதுவும் சலப்பொருள்
செயற்கையாய் அருந்தினும் சிறுத்தநீர் இதுவும்
பாண்டுநோய்ச் சம்பவத்தைத் தரும் இதில்
தூண்டுருப் பேதியும் சோர்வும் பிறக்குமே.

(இ-ள்.) ஒரு காரணமுமின்றி இயற்கை அளவிற்குக் குறைந்து இழியும் நீரும், நீர்ப்பொருள்களே, மிகுதியாக உண்ணினும் குறைந்திழியும் நீரும் பாண்டுநோய் உற்பத்தியைத்தரும். இதனுல் நீக்கக் கூடாத பேதியும் பாண்டு ரோகத்தினுலுண்டாகும்; அயர்வும உண்டாகும். (52)

எஞ்சல் இலக்கணம் முற்றியது

# நெய்க்குறி

ஐக்குறி கொடுவட வானிழல் அமர்ந்தோர்
கைக்குறி தெரிந்தநங் கடவுளைத் துதித்தே
மெய்க்குறி நிறந்தொனி விழிநா விருமலம்
கைக்குறி முழுவதூஉங் கற்றூர் தம்மினும்
பொய்க்குறி மெய்க்குறி புகலும் எவர்க்கு
நெய்க்குறி யதனையிந் நீண்நிலத் துரைப்பாம்.

(இ-ள்.) கல்லாலமரத்தின் கீழிருந்து தென்முகத் தலைவராய்க் கைக்குறியினால் நான்கு முனிவர்களுக்கும் மெய்ப் பொருளைத் தெரிவித்த நங்கடவுளைப் போற்றி செய்து உடல் நிறக்குறி, ஒலிக் குறி, கண்குறி, நாக்குறி, மலமூத்திரக்குறி, கைக்குறி என்னும் எட்டுவகை ஆராய்ச்சிகளையுங் கற்றுணர்ந்தவர்களைப் பார்க்கிலும் எல்லோருக்கும் பொய் மெய்யாகிய குறிகளைச் செல்லுகின்ற நெய்க் குறியைப் பெரிய இவ்வுலகத்தினருக்குச் சொல்வோம். (1)

## சிறுநீர் சோதனை இலக்கணம்

நிறக்குறிக்கு உரைத்த நிருமாண நீரில்
சிறக்க எண்ணெய் ஓர் சிறுதுளி நடுவிடுத்து
என்றுமத் திறந்தொலி யேகாது அமைத்ததில்
நின்ற திவலைபோ நெறிவிழி அறிவுஞ்
சென்றது புகலுஞ் செய்தியை யுணரே.

(இ-ள்.) முன்னர் நிறக்குறி பார்ப்பதற்குத் தீர்மானித்த நீரில் ஒரு துளி எண்ணெய் நடுவே விட்டு வெய்யில் படும்படி திறந்து காற்றுப்படாதவிடத்தில் வைத்து அந்தத் துளி போகும்வழியே கண்களையுல் அறிவையுஞ் செலுத்தி அந்நெய் சொல்லுங் குறியை அறிந்து கொள்ளக்கடவர். (2)

## வாதக்குறி

அரவென நீண்டிடின் அஃதே வாதம்.

(இ-ள்.) நீரில் விடும் எண்ணெயானது பாம்பைப்போல் நீளமாய்ச் சென்றால் அது வாயுவினாலுண்டான நீராம். (3)

## பித்தக்குறி

ஆழிபோற் பரவின் அஃதே பித்தம்.

(இ-ள்.) நீரில் விடும் எண்ணெயானது மோதிரம்போல் இடை விட்டுப் பரவுமானால் அது பித்தத்தினாலுண்டான நீராம். (4)

## கபக்குறி

முத்தொத்து நிற்கின் மொழிவதென் கபமே.

(இ-ள்) நீரில் விடும் எண்ணெயானது முத்தைப்போல் பரவாது இருக்குமானல் அது கோழையினலுண்டான நீராம். (5)

## தொந்தக்குறி

அரவில் ஆழியும் ஆழியில் அரவும்
அரவின் முத்தும் ஆழியின் முத்தும்
தோற்றில் தொந்தத் தோடங்க ளாமே.

(இ-ள்.) பாம்பில் மோதிரமும், மோதிரத்தில் பாம்பும், பாம்பில் முத்தும், மோதிரத்தில் முத்தும், இரண்டிரண்டாய்க் கலந்திருந்தால் கலப்புக் குற்றங்களாம். (6)

## திரிதோடக்குறி

அழுந்து நெய்த்துளி அதுவுமும் மலத்தில்
எழுந்த குறிக ளெல்லாம் ஒன்றில்
தோற்றுவதும் முத்தோடம் என் றுன்னே.

(இ-ள்.) நீரில் எண்ணெய் விட்டால் அத்துளி அழுந்துவதும் முக்குற்றங்களில் தனித்தனியேயுண்டான நெய்க்குறிப்புகளெல்லாம் ஒன்றினிடத்திலேயே காணப்படுவதும் முத்தோட மென்றுணர்ந்து கொள்க. (7)

## சாத்தியக்குறி

விருத்தப் படிவமும் தரித்துப் பரவலும்
தெரித்த நெய்க்குறிக்கு இனிவருத்தமென் உலகீர்
ஆங்கப் பரவல்போல் நீங்கும் எப்பிணியுமே.

(இ-ள்.) விடும் நெய் வட்ட வடிவாகவும், மெல்லப்பரவலுமாகக் காணப்படுமானல் அந்நோயாளியைப்பற்றிய வருத்தமொன்றுமில்லை. அந்நெய் எவ்வாறு பரவுகின்றதோ அவ்விதமே எவ்வித நோயும் நீங்கும். (8)

## இதுவுமது

அரிவாகு நநீதை அரியா தனத்தை
அறிதரு குறியால் மறுவின்று உயிர்க்கே.

(இ-ள்.) நெய்யானது திருமாலினுடைய இடது தோளிலிருக்கும் சங்கினைப் போலவும் சிங்காசனத்தைப் போலவுங் காணப்படுமானல் அந்நீரையுடைய நோயாளிக்கு யாதொரு குற்றமுமில்லை. (9)

## இதுவுமது

நாணயச் சக்தியை வீணையைக் காணினே
நாகுயிருடல் விடுத்து ஏகினும் மீளுமே.

(இ-ள்.) நெய்யானது நல்ல குடைபோலவும், யாழைப் போலவும் காணப்படுமானல் அந்நீரையுடைய நோயாளியின் உயிர் உடலை விடுத்து வெளிப்பட்டாலும் மறுபடி வந்து சேரும்.

## இதுவுமது

முல்லை யரும்பு முளரிப் பூவுஞ்
சொல்லிய துளியுள் தோற்றிடு மாயின்
இல்லை யில்லைநோ யென்பது சரதமே.

(இ-ள்.) நெய்யானது முல்லை மொட்டுப் போலவும் தாமரைப் பூப்போலவும் காணப்படுமானல் அந்நீரையுடைய உடலில் நோயில்லை யென்பது உண்மை. (11)

சாத்தியக்குறி முற்றியது

## அசாத்தியாக்குறி

எண்ணெய் விடின் சரேல் எனப் பொங்கிப் பரவின்
திண்ணம் அப்பிணிக்குச் சிகிச்சை இங்கு இன்றே.

(இ-ள்.) நோயாளியின் நீரில் விடும் எண்ணெய்த்துளி யானது விரைந்து பொங்கி அந்நீர் முற்றும் பரவுமாயின் அந் நோய்க்கு இவ்வுலகத்தில் மருந்தில்லை என்க. (12)

விடுதுளி சிதறி வெவ்வே றென்றுமல்
கடுகெனப் பரவின் கைவிடல் முறையே.

(இ-ள்.) நீரில்விட்ட எண்ணெய்த்துளி வெவ்வேருகக் கடு கைப்போலச் சிதறிவிட்டால் அந்நோயாளிக்குச் சிகிச்சை செய் யாமல் விடுவதே நலம். (13)

அவியும் மூத்திரமும் அணைந்தொன்றின் ஆவி
அவியும் என்றல் கௌதமர் அறையே.

(இ-ள்.) நீரில் விட்ட எண்ணெய்த்துளியுந் நீரும வேறுணர முடியாமல் ஒன்றுபடக் கலக்குமானல், அந்நோயாளியின் உயிர் நீங்கு மென்பது கௌதமருடைய கொள்கையாம். (14)

ஓதும் நெய்த்துளி உள் அழுந்தில் தீ தென
மாதவ கற்பம் மன்னப் பயிலுமே.

(இ-ள்.) நீரில் விட்ட எண்ணெய்த் துளியானது அந்நீர்க் குள்ளேயே அழுந்திவிடுமாயின் அந்நோய் தீராதென்று மாதவ கற்பம் என்னும் நூல் திடமாகக் கூறும். (15)

அம்பு கட்கம் முசலம் சூலமொடு வாள்
கும்பம் வெள்ளிலையெனக் குறிபடின் தீதே.

(இ-ள்.) நீரில் விட்ட எண்ணெய்த்துளி அம்பு, வாள், இருப் புலக்கை, சூலம், ஈர்வாள், குடம், வெற்றிலை இவற்றுள் ஒன்றின் குறி காணப்படின் தீராநோயெனவறிக. (16)

எருதறு கியாளம் இபம்புலி மறி அரி
நரன் அரவு அழுங்குபுள் நரிமர்க்கடம் கரம்
பூசைதேள் இவற்றைப்போல் உரு தோற்றின்
பேசுவ தென்னைப் பிணிதணி யாவே.

(இ-ள்.) நீரில் விடும் துளியானது எருது, சிங்கம், ஆளியானை, புலி, ஆடு, பன்றி, மனிதன், பாம்பு, ஆமை, பறவை, நரி, குரங்கு, கழுதை, பூனை, தேள் இவற்றில் ஏதேனும் ஒன்று தோன்றுமாயின் அந்நோயைப்பற்றி தீர்ப்போம் என்று பேசுவது பயனின்று, (அந்நோய் தீராது.) (17)

## சாத்தியாசாத்தியக் குறி

சல்லடைக் கண்போல் தனித்தனித் துவாரமாய்ச்
சொல்லும்முன் அன்றிடில் தொடல் என்! கரம் எனக்
கௌதமர் உரைப்பினும் கபத்தால் கண்படும்
தவியா அணங்கது சாத்தியம் என்பரே.

(இ-ள்.) நீரில் விடும் நெய்த்துளியானது, விரைந்து பல கண்களையுடைய சல்லடையைப் போலக் காணுமானால் அந்நோயாளியின் கையைப்பிடிப்ப தேனென்று கௌதமர் சொன்னாலும், உடலில் கபம் இருப்பதால் அவ்வாறு காணப்படும். அந்நோய் தீரும் எனக் கூறுவாருமுளர். (18)

## கரும சாந்தியின் பயன்

கருமநோய் இவையெலாம் கண்ணுதல் அளித்தருள்
கரும காண்டக்கடன் கண்டவ் வவற்றை
ஒழித்துயர் மருந்துணின் உம்பரைப் போலச்
செழித்து நாற்பொருளும் சேர வாழ்குவரே.

(இ-ள்.) நோய்கள் கருமத்தால் உண்டாவதால், சிவனார் செய்தகரும காண்டம் என்னும் நூலில் சொன்னபடி கரும சாந்தி செய்த பின்னும் உயர்ந்த மருந்துகளை உண்டால், நோய் தீர்ந்து தேவர்களைப் போலப் பல்லாண்டு நீடித்த வயதுடன் நாற்பொருளும் (அறம், பொருள், இன்பம், வீடு) ஒருங்கு கைகூடி சுகமே வாழ்வர்கள். (19)

நெய்க்குறி முற்றிற்று.

## வாதம், பித்தம், காமாலை நீர்கள் நிறம்.

உடலுறு பிணியைக்காண வுண்மைவா கடநூற் சொல்லும்
படருமூத்திரக் குறிப்பைப் பார்க்குங்கால் வாதம் வெள்ளை
திடமுறு பித்தஞ் சுற்றுஞ் சிவப்பு மஞ்சட்போற் காணும்
புடைமிகச் சிவப்பு மஞ்சள் போன்றிற்கா மாலையாமே. 1

### கபநீர் நிறம், வாதம் பித்தம், நெய்க்குறி.

நிலமிகக் கபமேயாகில் நிறைநுரை போன்றிருக்கும்
இலகுமம் மூத்திரத்தில் எண்ணெயை விட்டுப்பார்க்கில்
கலகஞ்செய் வாதத்திற்குக் காணவே நீளமாய்ப் போம்
பெலனுறு மெய்யைவாட்டும் பித்தமே சிதறிக்காட்டும் 2

### கபம், முக்குற்றம், சாத்தியம், சுகசாத்தியம், நெய்க்குறி.

சாற்றிய கபத்தினுக்குச் சல்லடைக் கண்போற் காணும்
தோற்றிய திரிதோஷந்தான் சொல்மூன்று குணமுங் காட்டும்
வேற்றொரு துளியாய் நின்றால் விருதாகச் சாத்தியந்தான்
ஆற்றியே மெள்ளப் பார்த்தால் அதுசுகச் சாத்தியந்தான் 3

### அசாத்தியம் சாத்தியக் குறிகள்

நீரினி லமிழ்ந்துபோனல் நிகழ்ந்திடு மசாத்தியந்தான்
வாரிடு முலையாய்க் கேளாய் வளையற்பாத் திரத்திலன்றிப்
பாரினிற் குயவன் செய்மண் பாத்திரந்தனி லானுலுஞ்
சாரநீ ருகுத்து வெய்யிற் றன்னிலே வைத்துப் பார்ப்பாய் 4

இன்னமுங் குறிகள் கேட்கில் இப்படிப் பலவாறுண்டு
மின்னுமந் நீரிலெண்ணெய் விட்டுநாம் பார்க்குங்காலை
மன்னிய வைபவங்கள் மனிதர்போல் மச்சங்கோயில்
உன்னிய பிரகாரம்போல் உயர்ந்திடு மாலையைப் :போல 5

மலைகுடை விருட்சம் வெண்சா மரையுடன் தாமாரைப்பூ
குலைசெய்யு மானைக்கொம்பு குல்லாக் கண்ணுடி சங்கு
வளைவிழி யாளே கேளாய் மகாதோரணங்கள் பூமி
தலைமையாம் வீணைபோலும் சவுக்கமாம் மணையேபோலும் 6

பாகலி னிலையேவண்டும் பகருந்தா மரையின் மொக்கும்
ஏகசிங் காதனங்கள் இவைகள்போல் உருவங் கண்டால்
தேகமானிட ரிடத்தில் சேர்ந்திருந் திடுக்கண் செய்யும்
ரோகமே நிற்க மாட்டா துரைக்குஞ் சாத்தியக் குறிப்பே 7

### தாமத சாத்தியக்குறி

மத்தளங் கொடியேபானை மலமுண்ணும் பன்றி காட்டில்
வைத்திடு மிருகம் நாட்டில் வாழ்ந்திடுங் குயவன் பண்ணுஞ்
சுத்தமாஞ் சக்கரம்போற் றேன்றிடு முருவங் கண்டால்
சத்தியமாகச் சொன்னேம் தாமச சாத்தியந்தான். 8

### அசாத்தியக்குறி

நாலுகா லொருகாலிந்த ஞாலத்தி லுரைக்கு மூன்று
காலுள மணிதர்காயங் கனக்கவே பெருத்தமாந்தர்
மாறுறத் தலையில்லாத மாந்தர்முன் கையிற்கத்தி
சூலமே யுலக்கை வில்லுந் தோன்றிடு மரிவாட்பாம்பு 9

பூனையே எலியேயம்பு புகல்நண்டு சுரக்காய் கோழி
கானிடைப் புலிகுரங்கு கண்ணழல் பொங்குசிங்கம்
ஈனமில் குதிரை வெற்றிலைக் கொடியுங் கூட்டி
ஊனமில் லெருதுகாட்டி லுழன்றிடுங் கரடிதானே.
பறந்திடும் பட்சியாலம பகருநற் றெளிவைப்போலும்
சிறந்தெண்ணெய் விட்டபோதிற் சின்னதாய்ச் சுருங்கி
புறந்தருங் கூந்தல்மானே பொங்கியே பரந்திட்டாலும்
அறிந்திடுங் குறிகளெல்லாம் அசாத்திய குறிப்புத்தா[illegible]ர.
இவ்வித மூத்திரத்தி னிலக்கண முற்றுமந்தச்
செவ்விய வாயுள்வேதஞ் செப்பிய வகைகளெல்லாம்
நவ்விபோல விழியினுளே நாட்டின் மானிடருக்காக
அவ்விய மில்லாநெஞசத் தாத்திய னுரைத்தாமே.

### சுரநீர் விகற்பம்

சுரமதிற் றெளிந்த நீர்தான் சுகமறும் வாதங் காணும்
சுரமதிற் சுருக்கும் பச்சை சுரபித்த வெட்டையாகும்
சுரமதிற் செவந்த நீர்தான் தோஷமுஞ் சந்நியுண்டாம்
சுரமதிற் சுண்ணம் போலத் தோய்ந்திட வசாத்தியந்தா[illegible]

### மேகநீர் விகற்பம்

நீரினிற் சுண்ணம்போல நின்றிடி னெலும் புருக்கி
நீரினி னீர்மோர் நெய்போ னின்றிடின் மேகவெட்டை
நீரினில் முன்னும் பின்னு நின்றிடிற் பிரமியந்தான்
நீரினி லெறும்பு மீக்கள் நெருங்கிடி னசாத்தியந்தான்

### வெகு மூத்திர நெய்க்குறி

அன்னமே கேணீமாந்த ரருந்துநீர் மிகவும் பொங்கித்
தன்னுளே சுவரா வண்ணம் தங்கியே மிகுதியாக
இன்னிற மில்ல நாளு மிடைவிடா திறங்கு மாயின்
வின்னமும் செய்யும் வெய்ய வெகுமூத் திரத்தின்வா[illegible]

### மூத்திர விலக்கணம்

வாதரோகந் தெளிந்தான் மஞ்சளித்தான் மற்றையது
சீதநுரைத் தாற்பலவாம் சேர்ந்தநோய்—ஈதகலா
மூத்திரத்தி லுண்மை மொழிந்தாம் இனிச்சொல்வாம்
நாத்திறத்தி லுள்ளவகை நாம்.

(இ-ள்.) நீர் தெளிந்திருந்தால் வாதநோயையும், [illegible]சளித்திருந்தால் பித்தநோயையும், வெளுத்து நுரைத்திரு[illegible] கபநோயையும், மேற்கண்ட இல்க்கணங்கள் இர[illegible]ரண்டாய்க் கலந்தால் தொந்தநோய்களையும் காட்டும். இ[illegible] நோய் இந்நிறங்களை விட்டு நீங்கா; ஆகையால் மூத்திரவு[illegible]மையைக் கூறினோம்.

முற்றிற்று